# வாழையடி வாழை



.பாலசுப்பிரமணியன்

# வரையடி வரை

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
எம். ஏ., எம். லிட்., பி.எச். டி.
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக்கழகம்

விற்பனை உரிமை :

பாரி நிலையம்
184, பிராட்வே, சென்னை-600001

முதற் பதிப்பு : 1966
ஆறும் பதிப்பு : 1976
ஏழாம் பதிப்பு : 1979
எட்டாம் பதிப்பு : 1981
நறுமலர்ப் பதிப்பக வெளியீடு

விலை ரூ. 8-00

பிற நூல்கள் :

தமிழ் இலக்கிய வரலாறு
உருவும் திருவும்
கட்டுரை வளம்
மனோன்மணீயம்
காரும் தேரும்
முருகன் காட்சி
இலக்கிய அணிகள்
பெருந்தகை மு. வ.
The status of woman in Tamilnadu during the Sangam Age

அச்சிட்டோர் :
முவேந்தர் அச்சகம்,
சென்னை-14.

# முன்னுரை

தமிழ் இலக்கியப் பேரியாறு காலங்காலமாக வளங் கொழித்து வற்றாது ஓடிக்கொண்டிருக்கிறது. தமிழ் இலக்கியங்கள் பல்வேறு சுவையுடையன; பல்வேறு நோக்குடையன. அவ்வக்காலத்தில் வாழ்ந்த கவிஞர் பலர், தமிழ் இலக்கியத்திற்குத் தம்முடைய காணிக்கையாக நல்ல பல நூல்களை இயற்றித் தமிழ்கூறும் நல்லுலகிற்கு நல்கிச் சென்றுள்ளனர்.

பழந்தமிழ் இலக்கியங்களைப் படித்து, அந்நாளைய மக்களைக் குறித்தும் அவர்கள் ஒழுகலாறு குறித்தும் அறிந்து கொள்வதுபோல, இக்காலத்தில் எழும் இலக்கியங்களையும் வாழ்த்தி வரவேற்றுப் படித்து மகிழவேண்டும். பழைய இலக்கியங்களைப் படித்து மகிழ்கின்ற நாம், புதிய இன்றைய இலக்கியங்களையும் ஏற்றுப் போற்றவேண்டும். இன்று எழுகின்ற இலக்கியங்களே, நாளை வரப்போகின்ற சமுதாயத்திற்குப் பழைய இலக்கியங்களாகும். எனவே, வாழும் இலக்கியங்களை நாம் வகையுறக் கற்கவேண்டும். அந்த எண்ணத்தில் எழுந்ததே 'வாழையடி வாழை' என்னும் இந்நூல்.

இந்நூலில், 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்டத்தில்' வந்தவராகத் தம்மைக் குறிப்பிட்டுக்கொள்ளும் வடலூர் இராமலிங்க வள்ளலார் முதலாகக் கவிஞர் திரு. தமிழழகர் ஈறாக நல்லிசைக் கவிஞர் பதின்மரின் கவிதை நலன்கள் புலப்படுத்தப்பட்டுள்ளன.

இக் கட்டுரைகள் அனைத்தும் சுவையுணர்திறத்தில் (Appreciative way) எழுந்தனவேயன்றித் திறனாய்வு (Criticism) என்னும் நோக்கில் அமைந்தன அல்ல. கவிஞர்கள், கவிதையில் ஒளிரும் கவிதை நலன்களை அகழ்ந்தெடுத்துக் காட்சிப் பொருளாக—சுவைப்பொருளாக—உங்கள் முன் படைத்தது ஒன்றே இந்நூலில் யான் மேற்கொண்ட பணி. தமிழ் மக்கள் இந்நூலின் பயன் கண்டு மகிழவேண்டுகிறேன்.

**சி. பாலசுப்பிரமணியன்**

# உள்ளுறை

# 1. இன்றைய இலக்கியங்கள்

வாழும் மக்களிடையே மூவகைப் போக்கினைக் காணலாம். பழமையினைப் பலபடப் பாராட்டிப் புதுமையினைப் புறக்கணிக்கின்ற ஒருவகைப் போக்கு; புதுமையினைக் கண்மூடிப் போற்றி வரவேற்று, பழமையினைப் பத்தாம்பசலி என்று எள்ளி நகையாடும் ஒருவகைப் போக்கு; பழமையிலேயே கொள்ள வேண்டுவனவற்றைக் கொண்டு, புதுமையிலே போற்ற வேண்டுவனவற்றை மட்டுமே போற்றுகின்ற நடுநிலைப் போக்கு.

பொதுவாகப் பழமை என்றவுடனே அதனைப் பாராட்டிவிடுகின்ற போக்கினை மக்களுள் ஒருசாராரிடத்தில் காண்கின்ற நாம், மற்றொரு சாரார் பழமை என்றவுடனே மாருத வெறுப்பு அடைவதனையும் காண்கின்ரும். இப்படிப்பட்ட ஒரு சார்பான கொள்கையும் போக்கும், வாழ்விற்கு உயிரும் உரமும் ஊட்டுவனவெனக் கூறல் இயலாது. பழமையிலே வேர் ஊன்றி புதுமையிலே கிளைபடரும் வாழ்விலே, வாழ்க்கைத் தெளிவினையும் மலர்ச்சியினையும் காணலாம். இது குறித்தே ஒருவாத புகழுடைய திருவாசகம் தந்த மணிவாசகப் பெருமாஞர், இறைவனைப்பற்றிப் பாடுங்கால், 'முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய்ப் பெயர்த்தும் அப்பெற்றியனாய்' எல்லாம் கடந்த இறைவன் விளக்கமுறுகிருன் என விதந்து கூறினர்.

பரந்த பண்பட்ட நம் பழமையான இலக்கியங்கள், நம் வாழ்விற்கு உறுதுணை செய்பவை. அந்த அளவிலே, சென்ற நூற்ருண்டுகளிலே, நம் முன்ஞேர்கள்

எப்படி வாழ்ந்தார்கள்? அவர்கள் வாழ்க்கையின் போக்கும் தெளிவும் எவ்வாறு இருந்தன? என்பதை அறிவதற்குத் தேவைப்படுகின்றன பழைய இலக்கியங்கள் எனலாம். ஆயின், அந்த இலக்கியங்கள் மட்டும் இன்று நம் வாழ்வின் தேவையை நிறைவு செய்துவிட மாட்டா. இன்றைய சூழ்நிலையில் இன்றைய வாழ்வின் அடித்தளத்தைக் கருவாகக் கொண்டு எழுகின்ற இன்றைய இலக்கியங்கள் நம் வாழ்வினை—நம்மைச் சுற்றி வாழும் கோடானுகோடி மக்களோடு நம்மை அறிமுகப்படுத்தி வைக்க இயலும். இன்றைய இலக்கியங்களை நாம் படித்தால்தான், நம் பழைய தலைமுறையினரின் வாழ்க்கையோடு நம் இன்றைய வாழ்வினை ஒப்பிட்டுக் கண்டு உயர இயலும்.

'நம்மைச் சுற்றி வாழும் வாழ்க்கையினைத் தெரிந்து கொள்வதற்கு இலக்கியம் தேவையா?' என ஒரு சிலர் வினவலாம். எல்லோரும் வாழ்க்கையினைக் காண்கின்றோம். எனினும், ஒரு சிலரால்தான் உள்ளதை உள்ளவாறும், உள்ளதை உணர்ந்தவாறும் எடுத்துக் காட்ட இயல்கின்றது. இந்த வகையில், படைக்கும் கலைஞன் நம்மைவிட உயர்ந்தவனாகின்றான்.

மேலைநாட்டினர் பலரும் இன்றைய இலக்கியங்களைப் பேரளவில் விரும்பிப் படிக்கின்றனர்; இன்றைய எழுத்தாளர்களுக்குச் சிறந்த மதிப்புத்தந்து போற்றுகின்றனர்; அவர்தம் படைப்புகளைப் பாராட்டுகின்றனர்; 'இன்றைய வளர்ச்சிக்கு வழிகோலுபவை புதிய இலக்கியங்களே' என்கின்றனர். அமெரிக்கர் இந்த நூற்றாண்டு இலக்கியத்திற்கு மிகவும் முக்கியத்துவம் அளிக்கின்றனர்.

நாம், அண்மையில் நடந்த இந்திய சீன எல்லைப் போரினை உளம் பதைக்க உயிர் துடிக்க உணர

சேர்ந்தது. பழைய புறநானூற்றின் போர்ப்பரணி யினைப் படிக்கும்பொழுது அந்த அஞ்சாத வீர உணர் வினைப் பாராட்டி மகிழ்கிறோம்; ஆனால், இன்றைய கவிஞர்களின் புதிய போர்ப்பரணி கேட்டுப் பூரித்துத் தோள் தட்டி நெஞ்சு நிமிர்ந்து கிளர்ந்து எழுகின்றோம்; உணர்ச்சியோடு உணர்ச்சியின் வடிவத்தினையும் இன்றைய இலக்கியங்கள் வாயிலாக நாம் பெறு கின்றோம்.

"பூங்காவினைப் போல் அழகும் கவர்ச்சியும் தரு வது மட்டுமின்றிக் காய்கறித் தோட்டங்களைப்போல் நல்ல பயனும் தருவதே இலக்கியம்," என்பர் 'வில்லி யம் டெம்பிள்.' எனவே, பழைய இலக்கியங்கள் நமக்குப் பொருட்காட்சிக்கூடம் (Museum) போன்று விளங்குகின்றன. அவற்றில் பழைய காலத்தின் பழுதி லாத் திறத்தினைப் பார்த்து மகிழலாம்; அன்றைய நிகழ்ச்சிகளால் நிகழ்ந்தவற்றினைப் பற்றிய அறிவினைக் கண்டு தெளியலாம். அம்மட்டே நாம் பெறுவது. ஆனால், இன்றைய இலக்கியங்கள் இன்றைய பொருட் காட்சிச் சாலைகள் (Exhibitions) போன்று நமக்குப் பயன் படுகின்றன. உள்ளம் தோய்ந்து உள மகிழ்வோடு கண்டு மகிழத்தக்க முறையில் இவை அமைந்துள்ளன. பழைய இலக்கியங்களில் கற்பனையின் சிறப்பினை— ஆற்றலினை—எண்ணி வியந்து மகிழலாம்; புதிய வற்றில் மகிழ்வோடு பயனும் பெறலாம்.

நாம், நம் தந்தையாரும் பாட்டனாரும் சேர்த்து வைத்துவிட்டுச் சென்ற செல்வத்தோடு—சொத்தோடு— நிற்பதில்லை. "சேரச்சேரச் சேர்ப்பதில் ஆசை" எழு கிறது அன்றோ? அதுபோலவே புதிய இலக்கியப் படைப்புகளை முயன்று படைக்க வேண்டும். படைக் கும் திறன் எல்லார்க்கும் எளிதில் வந்துவிடாது;

வாராதவர்கள் புதிய செல்வத்தின் சிறப்பினைப் பாராட்டி மகிழலாம் அல்லவா!

பழைய 'வில்லிப்புத்தூரார் பாரதத்'தைப் படிக்கும் பொழுது, கவிதை ஆற்றலின் சிறப்பிலே, கவிஞரின் பாவிகப்பண்பிலே, உவமையழகிலே, சொல்நயத்திலே வியந்து மகிழ்ந்து நிற்கிறோம்! ஆனால், அதே நேரத்தில் இந்த நூற்றாண்டுக் கவிஞராம் பாரதியாரின் புதிய 'பாஞ்சாலி சபதத்தைப்' படிக்கின்ற பொழுது, அன்னை பாரதமாதா அன்னியர் பிடியிலே கட்டுண்டிருந்த நிலை நம் கண்முன் வரவில்லையா? நமக்கு ஓர் உணர்வினையும் வேகத்தினையும் அளிக்கவில்லையா? வில்லிபுத்தூரார் பாரதத்தை வியந்த நாம், பாஞ்சாலி சபதத்தைப் படித்து, மகிழ்வோடு பயனும் பெறுகின்றோம். இவ் வகையாகக் காணினும் இன்றைய இலக்கியங்களை மாணவர்கள் படிக்க வேண்டுவது அவசியமாகின்றது.

இந்தத் தலைமுறையில்—சமுதாயத்தின் நலக்கேட்டினைக் காண, இன்றைய இலக்கியங்களே பேரளவில் துணை செய்யக்கூடும். புதிய புரட்சிகளை உருவாக்கிப் புதிய உலகைக் காணவே புத்திலக்கியங்கள் சில பாடுபட்டுள்ளன.

**தொன்மையவாம் எனுமெவையும் நன்றாகா; இன்று**
**தோன்றியநூல் எனுமெவையும் தீதாகா**

என்பது சான்றோர் வாக்கு. பழைமை அனைத்தும் நன்மை தருவன என்றோ, புதுமை அனைத்தும் புறக் கணிக்கத் தகுந்தவை என்றோ விரைந்து ஓர் முடிவிற்கு நாம் வந்து விடக்கூடாது.

மேலும், படைப்புக் கற்பனைத்திறம் வளர வேண்டுமானால், 'இன்று எழுதுகின்றவர்கள் எப்படி எழுதுகின்

ருர்கள்?'' என்பதை நாம் நிச்சயம் காணத்தான் வேண்டும். கல்கி படைத்துவிட்டுச் சென்ற 'சிவகாமி' யையும், 'நந்தினி'யையும், 'சீதா'வையும, 'குந்தவை' யையும் நாம் மறக்க இயலுமா? புதுமைப்பித்தனின் 'கந்தசாமிப்பிள்ளை'யை நாம் மறந்துவிட இயலுமா? தம் எழுத்திலே புரட்சிசெய்து புதியதொரு சமுதாயம் கண்டவர் பலர்.

ஆக, இன்றைய இலக்கியங்களை மாணவர்கள் நன்கு படிக்கவேண்டும். வகுப்பிலே பாடப் புத்தகங் களிலே பழைய இலக்கியங்களைப் பெரிதளவில் அவர்கள் படிக்கின்ருர்கள். எனவே, பீடு சான்ற அப் பழம் பெரு வாழ்வு நன்கு விளங்கித் துலங்குகின்றது. அதே நேரத்தில், இன்றைய இலக்கியங்களையும் விடாது ஆர்வத்தோடு படிப்பார்களேயானுல், பழைய வாழ்வி லிருந்து படிப்படியாக இன்றுவரை ஏற்பட்டுள்ள வளர்ச்சியும் வாழ்வும் நன்கு துலங்கும். பழைய இலக் கியங்களிலே அடிப்படையான உணர்ச்சியினைக் கண்டு மகிழ்ந்த மாணவர்கள், அவ்வுயரிய உணர்ச்சியுடன் வடிவத்தினையும் புதிய இலக்கியங்களிலே கண்டு மகிழ இயலும். பழைய இலக்கியம் படிக்கும்போது பெற்ற மகிழ்ச்சியோடு, இன்றைய புதிய இலக்கியங் களைப் படிப்பதால் பயனும் பெற இயலும். பழைய இலக்கியங்களின் கற்பனையில் ஊறித் திளைத்தும், போதை நிலையில் அறிதுயில் கொண்டதற்கும் மேலே, இன்றைய இலக்கியங்கள் வழி, இன்றைய வாழ்வின் தெளிவினைக் கண்டு உணரவியலும். எனவே, மக்கள் இன்றைய இலக்கியப் படைப்புகளை ஆர்வத்துடனும் ஊக்கத்துடனும் படிக்க முன்வருவார்களே யானுல், அது அவர்களை நல்லமுறையில் வழிநடத்திச் சென்று, சிறந்த போற்றத்தக்க முடிவுகளை அளிக்கும் என்பது திண்ணம்.

## 2. கவிஞனும் கவிதையும்

'தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு
சூழ்கலை வாணர்களும்—இவள்
என்று பிறந்தவள் என்றுண ராத
இயல்பின ளாம்எங்கள் தாய்.'

என்று தமிழ்த்தாயின் பழமையினைப் பலபடப் பாராட்டிப் பேசினர் பைந்தமிழ்ப் பாவலர் பாரதியார். தமிழினம் மிகப்பழைய இனம்; மொழி மிக்க தொன்மை யுடையது. மொழி நமது எண்ணத்தை எடுத்தியம்பப் பயன்படுகிறது. மனிதன் தன் வாழ்வின் தொடக்க நாளிலே தன் கருத்துகளைப் பிறர்க்கு உணர்த்தக் கண், கை, ஏனைய உறுப்புகளின் அசைவுகளைக் கையாண் டான். இப்பொழுது நாம் காது கேளாத, படிக்கவும் அறியாத ஊமை ஒருவனுக்கு எப்படிச் செய்திகளை அறிவுறுத்துகிறோமோ, அப்படித்தான் தொடக்கக் கால மனிதனும் வாழ்ந்தான். இக்குறிகள், சைகைகள் முதலியன ஓரளவு அவன் கருத்தைப் பிறர்க்கு உணர்த் தின எனலாம்; முற்றவும் உணர்த்தின என்று கூற இயலாது. அவன் ஒளியற்ற இராக்காலங்களில் தன்னுடைய கருத்தை அடுத்தவனுக்கு உணர்த்தப் பெரிதும் இடர்ப்பாடுற்றிருப்பான். சில நேரங்களில் அவன் குறியீடுகள் அவன் உணர்த்த நினைத்ததற்கு மாறான கருத்துகளைக்கூட மற்றவன் நெஞ்சில் விளைவித்துவிட்டிருக்கும். எனவே, தன் கருத்துகளை உணர்த்த வேறு முறையினைக் கண்டுபிடிக்கவேண்டிய அவசியத்திற்கு அவன் ஆட்பட்டான். 'தேவை தானே புதிய படைப்புக்குக் காரணம்?'[1] எனவே, குறியீடு

---

1. Necessity is the mother of invention.

களுக்கு அடுத்த நிலையில் குறிப்பு மொழிகள், உணர்ச்சி மொழிகள் அவனுக்குப் பயன்பட்டன. நாம் வியப்பினாலே 'ஆ! ஆ!' என்று ஆரவாரம் செய்கிறோம். வெறுப்பாலே 'சீ! சீ!' என்கிறோம். அவலத்தாலே 'ஐயோ! ஐயோ!' என்கிறோம். இவையெல்லாம் உணர்ச்சி நமக்குத்தந்த சொற்கள். இவையும் வளர்ந்த பின்னரே மொழியின் தோற்றமும் முகிழ்த்தது என லாம். மொழி மெல்லமெல்ல வளர்ந்து, வளம் பெற்றிருக்க வேண்டும். வளம்பெற்ற நிலையில், நல்ல வாழ்வு அந்த மொழிக்கு ஏற்பட்டு, இலக்கியங்கள் எழத் தலைப் பட்டன; எனவே, செம்மை சான்ற பழைய இலக்கியங் கள், ஒரு மொழியின் பழமையினையும் சிறப்பினையும் நன்கு விளக்குவனவாகும். 'கடவுள் உலகத்தைப் படைத் தார்; மனிதன் மொழியைக் கவிதையைப்—படைத்துக் கொண்டான்,' என்று கூறுவர். 'மனிதன் தன் கருத்து களைப் பிறர்க்கு உணர்த்த, தான் எண்ணிய எண்ணத் தைப் பிறர் மனத்திலும் பதியவைக்கும் முயற்சியிலே படைத்துக் கொண்ட சாதனமே மொழி' எனலாம். மனிதன் சிந்தனையாற்றல் உடையவன்; அவன் சிந்திக்கத் தொடங்கிய காலமே மனித நாகரிகத்தின் தொடக்கக் காலமாகும். மனித சிந்தனையின் அளவு கோல்களே நாகரிகம், கலை முதலியனவாகும். மொழி நன்கு வளர்ந்த நிலையில்—வாழ்வும் வளமும் பெற்ற போது மனிதன் படைத்துக்கொண்டவையே கலைகள்.

இக்கலைகள் பல வகைப்படும். தமிழ்க் கவிஞர் ஒருவர்,

**'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்**
**ஏய உணர்விக்கும் என் அம்மை'**

என்று கலைமகளைக் கனிந்து பாடினர். கலைகள் பல வகைப்படும். இசை, இலக்கியம், ஓவியம், சிற்பம், நாட்டியம், நாடகம் முதலியன 'கலைகள்' எனப்படும். மேலும், இவை நுண்கலைகள் :(fine arts), அல்லது கவின்

கலைகள் (aesthetic arts) என்று வழங்கப்படும். இக்கலைகள் உணர்ச்சியும் கற்பனையும் நிறைந்தவை; அழகுப் பொருள்களைப் பற்றுக்கோடாகக் கொண்டு எஞ்ஞான்றும் இன்பம் அளிப்பவை.[1] ஆங்கில அறிஞர் 'ஜான் ரஸ்கின்' என்பவர், 'கடவுட்படைப்பில் விந்தையைக் கண்டு மனிதன் பெறும் மகிழ்ச்சியைப் புலப்படுத்துவதே சிறந்த கலையாகிறது' என்கிறார்.[2]

மேற்கூறப்பட்ட நுண்கலைகளிலே சிறந்த கலையாய் விளங்குவது கவிதைக்கலையாகும். இது சொற்களாலேயே அமைந்த கலையான காரணத்தால், மொழித்திறத்தை உணர்ந்தவர் மட்டுமே இதை அனுபவிக்க இயலும். 'கவிஞன் பிறக்கிறான்; உருவாக்கப் படுவதில்லை'[3] என்பது இலத்தீன் மொழியின் பழையதொரு சொல் தொடராகும்.

நம்மைச் சுற்றியுள்ள பொருள்களை நாம், நம் கண்களால் காண்கின்றோம். ஆனால், கவிஞன் காண்கின்ற நோக்கும், அதன் வெளியீடாக வருகின்ற கவிதையும் நம்மை வியப்பில் ஆழ்த்திவிடுகின்றன. கவிஞன், காட்டுப் பறவையின் ஒலியிலும், காற்று, மரங்களிடைக் காட்டும் இசையிலும், ஆறு அருவி நீரோசைகளிலும், அலைகடலின் ஆரவாரத்திலும் தன் மனத்தைப் பறிகொடுத்து நிற்கிறான்; கவியரசர் பாரதியார் நெஞ்சைப் பறிகொடுத்த இடங்களைப் பாருங்கள்.

**'கானப் பறவை கலகலெனும் ஓசையிலும்,**
**காற்று மரங்களிடைக் காட்டும் இசைகளிலும்**
**ஆற்றுநீ ரோசை அருவி யொலியினிலும்**
**நீலப் பெருங்கடலெந் நேரமுமே தானிசைக்கும்**

---

1. 'A thing of beauty is a joy for ever'—keats.
2. 'All great art is the expression of man's delight in the work of God.
3. 'A poet is born not made.'

ஓலத் திடையே உதிக்கும் இசையினிலும்,
மானிடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியிலும்,
ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும் நெல்லிடிக்குங்
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சும் ஒலியினிலும்,
சுண்ண மிடிப்பார்தஞ் சுவைமிகுந்த பண்களிலும்,
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்,
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்,
வேயின் குழலோடு வீணைமுத லாமனிதர்
வாயினிலுங் கையாலும் வாசிக்கும் பல்கருவி,
நாட்டினிலுங் காட்டினிலும் நாளெல்லாம் நன்றொலிக்கும்
பாட்டினிலும் நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்!'

—குயிற் பாட்டு, 28—44

கவிஞன் தான் காண்கின்ற பொருள்களின் மேல் தன் கற்பனையை ஏற்றுகின்றான். அவன் கற்பனை யோடு ஒரு வடிவம் தந்து கலைமெருகுடன் நமக்குத் தரும் பொழுது இணையில்லாத கவிதையாகிறது. இதனைப் பாரதியாரே குயிற் பாட்டில்,

'முன்னிக் கவிதைவெறி மூண்டே நனவழியப்
பட்டப் பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாம்
நெட்டைக் கனவின் நிகழ்ச்சியிலே கண்டேன்யான்'

—குயிற் பாட்டு: 22—24.

என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறு தங்கு தடையற்றுப் பொங்குகின்ற உள்ளத்து உணர்ச்சிகள், அமைதி யில் மீண்டும் நினைவுறுத்தப்பட்டுக் கவிதை வடிவு பெறுகின்றன என்று, இயற்கையைப் பற்றிப் பாடு வதில் இணையிலாக் கவிஞரான 'வோர்ட்ஸ்வொர்த்து' (Wordsworth) என்பார், பாட்டிற்கு இலக்கணம் கூறி

யுள்ளார்.[1] 'கற்பனையின் வெளியீடே கவிதை,' என்பது கவிஞர் 'ஷெல்லி'யின் சித்தாந்தம். மேலும் அவர், 'மகிழ்ச்சி நிறைந்த சிறந்த உள்ளங்களின், மகிழ்ச்சி நிறைந்த சிறந்த நேரங்களின் படைப்பே கவிதை' என்று கூறுகிறார்.[2]

'பித்தன், காதலன், கவிஞன் இம்மூவரும் ஓர் இனம்' என்பர். இவர்கள் தங்களை மறந்த நிலையில் இருப்பவர்கள். தன்னை மறந்த நிலையில் கவிஞன் சிறந்த படைப்புகளைப் படைக்கிறான். கவிஞன் தன் கற்பனைத் தேரில் ஏறிக் கனவுலகிற்குச் சென்று விடுகின்றான். அங்கே தான் உற்ற பெற்ற அனுபவங்களைக் கவிதையாகச் சொல்லில் வடித்து அளிக்கின்றான். நாம் அன்றாடம் காண்கின்ற காட்சிகளையே அவன் கண்டாலும், அவன் கூறுகின்ற முறையில் ஒரு புதுமை இருக்கின்றது. கடவுளின் படைப்பில் அமைந்துள்ள கவின்பெறு காட்சிகள் எல்லாம் நமக்குப் பழக்கம் காரணமாகத் தம் கவர்ச்சியை இழந்துவிடுகின்றன. ஆனால், அக் காட்சிகளைக் கண்டு கவிஞன் சொல்லும்பொழுது, நாம் கவிஞனது 'திறம் வியந்து நம் செயல் மறந்து' வாயடைத்து நிற்கிறோம்.[3] காலையில் கதிரவன் உதிக்கும் காட்சியினை நாம் பலமுறை கண்டிருக்கிறோம்; நாளாக நாளாகப் பெரிதும் அதனை வியப்பதில்லை. ஆனால், அக்காட்சியினைக் கவிஞன்

---

1. Poetry is the spontaneous overflow of powerful feelings; it takes its origin from emotion recollected in tranquility.

2. Poetry is the record of the happiest and best moments of the happiest and best minds.

3. Poetry lifts the veil from the hidden beauty of the world and makes familiar objects as if they were not familiar.

நமக்குக் கவிதையாக்கித் தரும்பொழுது நாம் மகிழ்கிறோம்; நம்மை மறந்து கவிதையழகில் நெஞ்சைப் பறிகொடுக்கிறோம்! சான்றாக, பாரதியார் காலைக் கதிரழகினைப் பாடும் பொழுது—

**'தங்க முருக்கித் தழல்குறைத்துத் தேனாக்கி**
**எங்கும் பரப்பியதோர் இங்கிதமோ!'**

—குயிற் பாட்டு: 31—32.

என்றும்,

**'புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கி**
**மண்ணைத் தெளிவாக்கி நீரில் மலர்ச்சி தந்து**
**விண்ணை வெளியாக்கி விந்தைசெயுஞ் சோதியினை'**

—குயிற் பாட்டு: 40—42

என்றும் வருணிக்கின்ற பொழுது—கவிதை வயப்படாத நெஞ்சங்கள் இருக்க இயலுமா? அதே காட்சியினைப் பாடுகின்றார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த இணையிலாப் புலவராகிய 'நக்கீரர்.' அவர்,

**'உலக முவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு'**

—திருமுருகு: 1—2.

என்று ஞாயிற்றின் 'கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பினை'ப் பாடும்பொழுது, அதன்பால் ஈர்க்கப் படாத நெஞ்சமும் உண்டோ?

பாரதியாருக்குப் பின்னர்ப் பாவேந்தராயும் புதுவைக் குயிலாயும் விளங்கிய பாரதிதாசனார் அவர்கள் கவிதை பெற்ற இடங்களைக் காண்போம்:

**'காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்!**
**கடற்பரப்பில் ஒளிப்புனலில் கண்டேன்! அந்தச்**
**சோலையிலே மலர்களிலே, தளிர்கள் தம்மில்,**
**தொட்ட இடம் எலாம்கண்ணில் தட்டுப்பட்டாள்!**
**மாலையிலே மேற்றிசையில் இலகு கின்ற**
**மாணிக்கச் சுடரிலவள் இருந்தாள்; ஆலஞ்**

சாலையிலே கிளைதோறும் கிளியின் கூட்டந்
தனில் அந்த அழகென்பாள் கவிதை தந்தாள்'
—அழகின் சிரிப்பு: 1

நாம் அன்றாடம் காணக்கூடிய காலையிளம் பரிதியும், கடற்பரப்பும், ஒளிப்புனலும், சோலையும், மலரும் தளிரும், மாலையும், ஆலஞ்சாலையும், வானும், மீனும், குயிலும், கிளியும் கவிஞர்க்குக் கவிதைப் பொருள்களைப் படைக்கின்றன. நாம் கண்ணிருந்தும் குருடர்களாய், செவியிருந்தும் செவிடர்களாய், வாயிருந்தும் மூங்கைகளாய் வாழ்கின்றோம்! கவிஞன், இயற்கையின் கவினார் காட்சிகளைக் கண்டு, இனிய ஓசைகளைக் கேட்டு, இன்பப் பாடல்களைப் பாடி நம்மை மகிழ்விக்கின்றான். இங்கே 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்!' என்ற பரந்துபட்ட எண்ணமே அவன் கவிதைப் பிறப்பிற்குக் காரணமாய் அமைகின்றது.[1]

பிறிதொன்றனையும் நாம் இங்கே ஊன்றி நோக்கல் வேண்டும்; கவிதை முதன் முதல் சமுதாயத்தில்தான் தோன்றியிருக்க வேண்டும் என்று பேராசிரியர் கும்மரே கூறுவர்.[2] ஆனால், இக்கூற்றுக்கு மறுப்பும் உண்டு. ஆங்கிலக் கவிஞராம் 'டி. எஸ். எலியட்டு' என்பார், காட்டுமிராண்டி ஒருவன் காட்டில் பறை

---

1. Poetry is, at all events, the Poets' criticism of life that is the impression which life, as he sees and imagines. It makes upon his emotion and which he, in turn tries to impress upon ours.

2. Investigations into the beginnings of literature have shown that poetry originated in the desire to give outward form to the feelings not of the individual but of the clan or group.

யைத் தானே அடித்து மகிழ்வு கொண்ட நிலையில் பாட்டின் தொடக்கம் அமைந்திருக்கவேண்டும்' என்கிறார்.[1]

அந்த நாகரிகமற்ற மனிதன் பறையின்றியும் தன் கையால் தாளம் கொட்டிப் பாடி மகிழ்ந்தான். துன்பமான—கடினமான—தொழிலாற்றும் பொழுது, அவன் பாடிய காலத்தில், துன்பத்தின் சுமை சிறிது குறைந்ததைக் கண்டான். அதுவே சமுதாயமாய்ப் பலர் கூடி வேலை செய்கின்ற பொழுதும், குழுப்பாட்டுகளாக, உணர்ச்சி வயப்பட்டு ஆரவாரித்துப் பாடல்களைப் பாடினர். இவையே 'சமுதாயப் பாடல்கள்' எனப்படும். இம்முறையில் அமைந்தவையே ஏற்றப்பாட்டு, ஏலேலோப் பாட்டு, பண்ணைப்பாட்டு, சுண்ணப்பாட்டு, கும்மிப் பாட்டு முதலியன. இவற்றையெல்லாம் பாரதியார் நெஞ்சைப் பறிகொடுத்த இடங்களில் கண்டோமல்லவா?

சிலப்பதிகாரத்திலே உள்ள, 'குன்றக்குரவை' மலைவாழ் மக்கள் ஆடிப்பாடிக் களித்த வாழ்வினைப் புலப்படுத்துகின்றது. 'ஆய்ச்சியர் குரவை' முல்லை நிலத்து ஆயர்குல மக்களின் இசையொடு நெருங்கிய இனிய வாழ்வினைத் தெரிவிக்கின்றது. 'வேட்டுவ வரிப் பாடல்கள்' பாலை நில மக்களின் கூட்டு வாழ்வைக் காட்டுகின்றன.

இவை வளர்ந்த நிலையில் 'வரிப்பாடல்கள்' முகிழ்த்தன. சிலம்பின் 'ஊர் சூழ்வரி' இதனைத் தெளிவுறுத்தும். கானல் வரியின் சிறப்பினையும் இங்கே கருதுதல் நலம். பின்னரே தமிழில் அகப்பாடல்களும், புறப்பாடல்களும் மலர்ந்தன.

---

1. Poetry begins, I dare say, with a savage beating a drum in a jungle, and it retains that essential of percussion and rhythm.

கவிஞன் உள்ளத்தில் உண்மையைக் கூறும் ஆர்வம் இருக்க வேண்டும். அவன் உள்ளத்தில் கற்பனையும் உண்மையும் ஒளிவிட வேண்டும். அப்பொழுதுதான் சிறந்த கவிதைகளைப் படைக்க இயலும். இதனைப் பாரதியார் நன்கு தெளிவுறுத்துகின்றார்:

**'உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்**
**வாக்கினிலே ஒளியுண் டாகும்;**
**வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்**
**கவிப்பெருக்கும் மேவுமாயின்,**
**பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம்**
**விழிபெற்றுப் பதவி கொள்வார்;**
**தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்**
**இங்கமரர் சிறப்புக் கண்டார்?'**

**—தமிழ்:4**

கவிச்சக்கரவர்த்தியாராகிய கம்பர், கவிதையைக் கோதாவிரி ஆற்றின் நீரோட்டத்திற்கு ஒப்பிட்டுப் பாடுகின்றார்:

**'புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற் றாகி**
**அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்**
**சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்**
**கவியெனக் கிடந்த கோதா விரியினை வீரர் கண்டார்'**

**—கம்பர், கிட்கிந்தா: சூர்ப்ப: 1**

தமிழ்க் கவிதைகளுக்கு இருக்கவேண்டிய இயல்புகளை மேற்கூறிய கம்பநாடரின் கவிதை தெற்றெனப் புலப்படுத்துகின்றது. "பலவகைத் தாதுக்கள் சேர்ந்த உடலுக்கு உயிர் போன்று, பல சொற்களால் பொருளுக்கு இடனாக, எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடைகளாலும் அணிகளாலும் நிரம்பப் பெற்றுக் கவிவல்ல புலவனால் பாடப்படுவது கவிதை" என்று தமிழ் நூலார் கூறுவர். ஆனால், மிகவும் எளிய சொற்களைக் கொண்டு அரிய முறையில் கவிதைக்கு விளக்கந் தருகிறார், நம் கவிமணி:

'உள்ளத் துள்ளது கவிதை—இன்பம்
உருவெ டுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில்—உள்ளம்
தெளிந்துரைப்பது கவிதை'

—மலரும் மாலேயும்: கவிதை: 7

உணர்ச்சி, கற்பனை, வடிவம் ஆகிய மூன்றும் எல்லாக் கலைகட்கும் இன்றியமையாத உறுப்புகள் என்ருலுங்கூடக் கவிதைக் கலைக்கே அவை பெரிதும் வேண்டப்படுவனவாகும். கவிஞன் கூடுவிட்டுக் கூடுபாயும் கழைக் கூத்தாடியானுல்தான் அவன் படைக்கும் கவிதை சிறக்கும். அவன் பெற்ற அனுப வங்களை அப்படியே மொழியில் படைப்பதே கவிதை யாகும்.[1] கவிதைக்கு ஒலிநயம் மிகவும் இன்றியமை யாதது. மேலும், கவிதை, வாழ்க்கையின் உரைகல்லாக (விமரிசனமாக) அமைகிறது.[2]

எனவே, 'நல்லொழுக்கத்தினை வற்புறுத்துவதாக வும் வளர்ப்பதாகவும் கவிதை அமைதல் வேண்டும். தவருன பயனை விளைவிக்குமேயானுல், அது வீழ்ச்சி யடையும்' என்கிருர், 'மாத்யூ அர்னல்டு' என்பார்.[3] 'மக்கள் ஆக்காத மனுவேந்தர்கள் கவிஞர்கள்,' என்ற 'ஷெல்லி'யின்[4] கூற்றிற் கிசையக் கவிஞர்கள் விளங்கு வார்களேயானுல், நாடும் மொழியும் நற்றமிழ் இனமும் நீடூற நித்தமும் புகழ் சிறந்து விளங்கும் என்பது திண்ணம்.

---

1. Poetry is the translation of experience into language.
2. Poetry is at the bottom, the criticism of life.
3. A poetry of revolt against moral ideas is a poetry of revolt against life; a poetry of indifference towards moral ideas is a poetry of indifference towards life.
4. Poets are the unacknowledged legislators of the world.

# 3. 'வாழையடி வாழை'

"காலத்தின் இடையிடையே கவிஞர்கள் தோன்றுவார்கள்," என்கிறார், கவிஞர் 'ஷெல்லி.' இக்கூற்றானது தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் பேருண்மையாகத் துலங்குகின்றது. தமிழ் இலக்கிய வரலாற்றில் கவிஞர் பலரை நாம் நல்ல ஞானியராகவும் காண இயலும். 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்று உலக ஒருமைப் பாட்டினைக் கூறிய புறநானூற்றுப் புலவர் 'பூங்குன்றனார்', 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற நன்னெறியினைத் துலக்கமுறக் கூறிய தவ ஞானியராம் 'திருமூலர்', 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று தொண்டுள்ளத்தினை வளர்த்த 'திருநாவுக்கரசர்', 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்று ஆண்டவனிடம் கற்றாவின் மனம் போலக் கசிந்துருகிய 'மாணிக்க வாசகர்', 'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே' என்ற தாயுமான தயாபரர் முதலான சான்றோர்கள், ஆன்மநேய ஒருமைப்பாட்டினை வளர்த்த சீலர்கள் ஆவார்கள். இத்தகு கீர்த்திமிக்க, வாழையடி வாழையென வந்த திருக்கூட்டத்தின் மரபில் வந்தவர்கள், வடலூர் அருட்சோதி இராமலிங்க அடிகள்.

உலகில் எண்ணற்ற உயிர்கள் தோன்றுகின்றன; உணவு உண்டு உயிர்க்கின்றன; உரிய நாளில் மறைகின்றன. தோற்றமும் ஒடுக்கமும் ஆகவே பெரும்பாலார்தம் பிறவிகள் அமைந்து விடுகின்றன. இவ்வாறு நீரில் இட்ட கோடுபோன்று அவர்கள் வாழ்வு உடனடியாக மறைந்துவிடுகின்றது. ஒரு சிலரே தம் வாழ்வில் ஒளி விளக்காயும், வழி காட்டியாயும் விளங்கி, உலகைச் சீர்திருத்தி உயர்வடையச் செய்து,

புகழ் உடம்பு பெற்றுள்ளனர். இதனையே தமிழ்நாடு செய்தவப் பயனாய்த் தோன்றிய திருவள்ளுவப் பெருந்தகையும்,

**'தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்**
**தோன்றலின் தோன்றாமை நன்று'**

**—திருக்குறள்: 236**

என்று கூறுகிறார். இதனையே புறப்பாடல் ஒன்று,

**'உரையும் பாட்டும் உடையோர் சிலரே**
**மரையிலை போலமாய்ந் திசினோர் பலரே.'**

**—புறநானூறு: 27: 5—6**

என்று பேசுகிறது.

முதலாவதாக, இவ்வுலகில் பிறந்த உயிர்கள், பிறப்பின் பெருமையினை உணர வேண்டும். பின்னர், இவ்வுலகின் புன்மையினை—நிலையாமையினை நன்குணர்ந்து, பெறுதற்கரிய மனிதப்பிறவி கிடைத்ததன் நற்பேற்றினை எண்ணிப் பயனுடைய செயல்களை இவ்வுலகில் தங்கள் வாழ்நாளில் ஆற்றிச் செல்ல வேண்டும்.

இதனை

**'மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே'**

என்று புறநானூறு (165 : 1-2 உணர்த்தி நிற்கின்றது.

இவ்வுலகின் நிலையாமைப் போக்கினைக் கண்டு தெளிதல் வேண்டும். ஞானியர் சிலர்தம் கூற்றும், சித்தர் பாடல்களும் இத்தெளிவினை நமக்குத் தர வல்லவை. தம் ஆருயிர் மனைவி அறுசுவை உணவினைச் சுவையுடன் சமைத்து வைக்க, அதனை இனிதுண்ட ஒருவர், பின்னர், அவளுடன் மகிழ்ந்து பேசிக்கொண்டிருக்கும்போது, 'இடப்பக்கம் சிறிது நோகிறது' என்று கூறிய அளவிலேயே உயிர் துறந்தார் என்று 'திருமூல நாயனார்', யாக்கை நிலையாமையினை ஒரு பாட்டில் பசுமரத்தாணியென மனத்திற் பதியும் வண்ணம் உணர்த்தியுள்ளார். அப் பாடல் வருமாறு:

'அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்ருர்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.'

—திருமந்திரம்: 192

இதே முறையில்தான், 'கடுவெளிச் சித்தரும்' கூறியுள்ளார். அரும்பாடு பட்டுப் பெற்ற பிறவியினைச் சரியாகப் பயன்படுத்தத் தெரியாமல் கெடுத்துக் கொண்ட ஒரு மனிதனின் வாழ்வினை நயம்பட உணர்த்துகின்ருர் கடுவெளிச் சித்தர்:

'நந்த வனத்திலோர் ஆண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டுவந் தான்ஒரு தோண்டி:—மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி'

என்பது அவர் தம் பாட்டு.

வள்ளலாரும், பின் வரும் பாடலில் நிலையாமை குறித்துப் பேசுகின்ருர்:

'வெவ்வினைக் கீடான காயமிது மாயமென
வேதமுதல் ஆகமமெலாம்
மிகுபறை யறைந்தும்இது வெயின் மஞ்சள் நிறமெனும்
விவேகர்சொல் கேட்டறிந்தும்
கவ்வைபெறு கடலுலகில் வைரமலை யொத்தவர்
கணத்திடை இறத்தல் பலகால்
கண்ணுறக் கண்டும்இப் புலையுடலின் மரணம்ஓர்
கடுகளவும் விடுவதறியேன்.'

—திருஅருட்பா: திருவண்ணப்பதிகம்

அத்தகைய அரிய பிறவி பெற்ற மக்கள், செயற்கரிய செயல் செய்த செம்மைச் சான்ருேர்களாய்ப் பெரியோர்களாய்த் துலங்குகின்ருர்கள். செயற்கரிய செய்த பெரியார், வடலூர் வள்ளலார், சான்ருேர் நெறி நின்ற தூயவர்: நல்லவர் நெறியினை நாள்தோறும் போற்றிய

நெஞ்சினர்: அருள் வடிவான அருளாளர்; பிறர் உயிர்கள் படுகின்ற துன்பத்தினைக் காணப்பொறாத கருணை உள்ளத்தினர் அவர். இதனை அவரே, 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம வாடினேன்!' என்று குறிப்பிட்டுள்ளார்.

'பூத்தலை அரு அப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்,
கறங்குமணி திண்தேர் கொள்ளெனக் கொடுத்த,
பரந்தோங்கு பண்பிற்

பாரிப் பெருமகனின்'' அருள் நெஞ்சம் அவருக்கு வாய்த்திருந்தது. குளிரால் நடுங்கிய கோல மயிலுக்குத் தான் போர்த்திருந்த போர்வையினையே வழங்கிய 'வள்ளல் பேகன்' வழி வந்தவர் வடலூர் வள்ளலார்.

'நமக்கொன் றுரையா ராயினும் தமக்கொன்று
இன்ன இரவின் இன்துணை யாகிய
படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ
துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே.'

—குறுந்தொகை: 266

என்று புலம்பும் குறுந்தொகைத் தலைவியின் தூய அன்பு நெஞ்சம், வள்ளலாரின் வற்றாத அருள் நெஞ்சமாகும். எனவே, அவர் 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் 'வாடினார்.

சைவ சித்தாந்தக் கொள்கையே உலகில் தலையாயது. இதனை ஐரோப்பியக் கிறிஸ்தவப் பாதிரிமாரும் ஒப்பி உண்மை புகன்றுள்ளனர். உலகில் உள்ள உயிர்கள் எல்லாம் பசுவாகவும், அருள் நிறைந்த ஆண்டவன் பதியாகவும், பசு பதியோடு ஒன்று கலப்பதைத் தடுத்து நிற்பது பாசமாகவும் பெரியோர் கூறுவர். பாசம் அற்றால் பசுக்கள் பதியினைச் சேரலாம். 'பற்றுவது பந்தம்; அப்பற்றுதல் விடு' என்பார் வள்ளலார். இதனையே 'திருவாய் மொழி', 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்று பேசுகின்றது.

பற்று என்பது பிறவியினுல் விளைவது. பிறப்பற்ற காலையில் பற்றும் ஒடுங்குகின்றது. பற்றற்ற பரமனடி. யிணைச் சேரும் நாளே, நெஞ்சத்தைவிட்டு ஆசை அற்றுப்போகும் நாளாகும். வள்ளுவப் பெருந்தகை யாரும்,

**'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடிசேரா தார்.'** —திருக்குறள்: 10

என்ருர். 'மற்றுப் பற்றெனக் கின்றி நின் திருப் பாதமே மனம் 'பாவித்தேன்' என்ருர் 'சுந்தர மூர்த்தி நாயனுர். திருவாசகம் தந்த மணிவாசகப் பெருந்தகை யும், 'சிவமாக்கி எனையாண்ட அத்தன்' என்பார். மணி வாசகப் பெருந்தகையாரிடத்தில் அளவில்லாத ஈடு பாடு உடையவர் வள்ளலார் என்பது,

**'வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை**
**நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே**
**தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ்**
**சுவை கலந்தென்**
**ஊன் கலந்து பால்கலந்து உவட்டாம லினிப்பதுவே'**

என்னும் அருட்பாவால் இனிது விளங்கும். எனவே, திருவருட் பிரகாச வள்ளலாரும்,

**'சிவமாக்கிக் கொண்டானென் றூதூது சங்கே!**
**சிற்றம் பலத்தானென் றூதூது சங்கே!**
**நவநோக் களித்தானென் றூதூது சங்கே!**
**நானவ ஞனேனென் றூதூது சங்கே!**
**இறவாமை யீந்தானென் றூதூது சங்கே!**
**எண்ணம் பலித்ததென் றூதூது சங்கே!**
**திறமே யளித்தானென் றூதூது சங்கே!**
**சிற்றம் பலத்தா னென் றூதூது சங்கே!**

**சிற்சபையும் பொற்சபையுஞ் சொந்தமென தாச்சு;**
**தேவர்களும் மூவர்களும் பேசுவதென் பேச்சு;**

இச்சமய வாழ்விலெனக் கென்னேயினிப் பேச்சு;
என்பிறவித் துன்பமெலா மின்றேடே போச்சு!
—திருவருட்பா: நாமாவளிகள்: 42: 6-10; 43: 1

எனத் தாம் பெற்ற இன்பத்தினை விளக்கிப் பாடுகின்ருர்.

இறைவனுடைய திருவடிப்பேற்றினை எவ்வாறு எய்த இயலும்? 'எளிதான செயலே' என்கிருர் 'திருமூலர்.' எவ்வாறு?

'யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை:
யாவர்க்கு மாம்பசு விற்கொரு வாயுறை;
யாவர்க்கு மாம் உண்ணும் போதொரு கைப்பிடி;
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே'

என்கிருர், அவர்தம் அருமந்திரமாம திருமந்திரத்திலே (109). 'இறைவனை அடைய எளிய பச்சிலையே போதும்' 'புல்லிலை எருக்கமாயினும் உடையவை கடவுள் பேணேம் என்னுது' என்கிருர் 'கபிலர்'. எனவே, இறைவன் விரும்பிச் சூடும் மலராக, மற்றவர், மங்கையர்—வெறுக்கும் வெள்ளெருக்கம் பூவினைச் சொல்லினர்; 'வெள்ளெருக்கஞ் சடைமுடியான்' என்று சிவனைக் கூறினர் 'கம்பநாடர்.' ஆதலால், ''மணம் நிறைந்த மல்லிகை முதலிய மலர்களே எல்லையில்லாக் கருணையுடைய ஆண்டவனை அருச்சிப்பதற்கு உகந்தவை என்று எண்ணித் தயங்கிக் காசற்ற ஏழைகள் மயங்க வேண்டா'', என்கிருர், ஈழம் தந்த தமிழ் அறிஞர்—யாழ் நூல் கண்ட 'விபுலானந்த அடிகளார்':

'வெள்ளைநிற மல்லிகையோ, வேறெந்த மாமலரோ.
வள்ளல் அடியிணைக்கு வாய்த்த மலரெதுவோ!
வெள்ளைநிறப் பூவுமல்ல, வேறெந்த மலருமல்ல,
உள்ளக் கமலமடி உத்தமனுர் வேண்டுவது'
—விபுலானந்தத் தேன்

இம்முறையில்தான் மாணிக்கவாசகரும், 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்' என்று இறைவனிடத்து இணையற்ற அன்பு செலுத்தியவர் காளத்தி வேடராம் கண்ணப்பர் என்கிறார். 'குற்றமே குணமாகக் கொண்டு வாழும் வேட்டுவர் குடியிற் பிறந்தவராயிருப்பினும், கண்ணப்ப நாயனார், தன் அன்பு நெஞ்சின் ஆழத்திறத்தாலே திண்ணப்பராயிருந்தவர்.

தாயுமான தயாபரரும்,

**'நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே**
**மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே!'**

**—பராபரக்கண்ணி: 141**

என்றார்.

இத்தகைய இறைவனை நெஞ்சில் நிலைநிறுத்தி, உண்மையோடு, உருக்கமாக, எஞ்ஞான்றும் வழிபட வேண்டும். வள்ளலாரும் வழிபடுகின்றார்; அவ்வழிபாட்டு முறையினை வகையுறக் காண்போம்:

**'பெற்ற தாய்தனை மகமறந் தாலும்**
**பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்**
**உற்ற தேகத்தை யுயிர்மறந்தாலும்**
**உயிரை மேவிய வுடல்மறந்தாலும்**
**கற்ற நெஞ்சகங் கலைமறந்தாலும்**
**கண்கள் நின்றிமைப் பதுமறந்தாலும்**
**நற்ற வத்தவ ருள்ளிருந் தோங்கும்**
**நமச்சி வாயத்தை நான்மற வேனே!'**

**—திருவருட்பா: திருவடித் தியானம்: 2**

தாய்ப்பசுவை நினைத்து நின்றழும் கன்றேபோலத் தாய் முகம் நாடிச் சேய் நிற்கும். தாய்தனைச் சேய் மறக்கவும் ஒல்லுமோ! ஒரு வேளை மறக்கினும், தாய், சேயினை மறப்பதென்பது ஒரு போதும் இல்லை. அன்பு செலுத்துவதிலே அன்னைக்கு நிகர் அவனியில் யாரும் இல்லை. அதற்கு 'தாயே சேயை மறந்தாலும், உடலினை

உயிர் மறந்தாலும், உயிரை உடல் மறந்தாலும், கற்ற கலைகளை நெஞ்சம் மறந்தாலும், கண்கள் இமைக்கும் தொழிலை மறந்தாலும், நற்றவத்தவர் நெஞ்சில் நடுநாயகமாய் விளங்கும் நமசிவாயத்தை நான் மறவேன்' என்கிறார் வள்ளலார், இது எத்தகைய உறுதிப்பாடு! இதனாலன்றோ "சிவாய நம என்று சிந்தித்திருப்பார்க்கு அபாயம் ஒரு நாளும் இல்லை" என்றபடி, நாவுக்கரசரும், "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பதாம், நாதன் நாமமாம் நமச்சிவாயத்தை" வழுத்திய வண்ணம் துணிவோடு நின்றார்; அகப்பகையினையும் புறப்பகையினையும் வென்றார்!

இம்முறையிலே ஓர் ஐயப்பாட்டினைச் சிலர் கூறுவர். 'வீடு வீடாகச் சென்று இரந்து பிச்சை கேட்கும் இறைவனா யாவர்க்கும் மேலான இறை பதத்தினை அளிக்க வல்லவன்?' என்ற ஐயப்பாடே அது. இடைக்காலத்தில் பரசமயத்தினைச் சேர்ந்தவர்கள் கிளப்பிய வாதம் இது! இதனைத் திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதி முனிவர், 'இசை வாது வென்ற படலத்தில்' பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

**'குடங்கை நீரும் பச்சிலையும்**
**இடுவார்க் கிமையாக் குஞ்சரமும்**
**படங்கொள் பாயும் பூவணையுந்**
**தருவாய் மதுரைப் பரமேட்டி!**
**படங்கொள் பாயும் பூவணையுந்**
**தருவாய் கையிற் படுதலை கொண்டு**
**இடங்கள் தோறும் இரப்பாயென்**
**றேசு வார்க்கென் பேசுவனே!'**

**—திருவிளையாடற் புராணம்: இசைவாது வென்ற படலம்: 34**

உள்ளத் தூய்மையோடு எளிய பொருள்களையும் இறைவன் அடியில் இட்டு வணங்கினால், இடங்கள் தோறும் சென்று இரக்கும் இறைவன் பரமபதம் அருளு

வான் என்று தெளிவுறுத்துகின்றார். இதனையே அருட்பிரகாச வள்ளலாரும் பின் வரும் பாடலில் நய முறக் கிளர்த்துகின்றார்:

**'தலங்கள்தோறும் சென்றவ்விடை அமர்ந்த**
**தம்பி ரான்திருத் தாளிணை வணங்கி**
**வலங்கொ ளும்படி என்னையுங்கூட**
**வாஎன் கின்றனை வாழிஎன் நெஞ்சே!**
**இலங்கள் தோறும்சென் றிரந்திடும் அவனே**
**என்னையும் உன்னையும் ஈர்க்குவன்; அதற்கு**
**நலங்கொ ளும்துணை யாதெனில் கேட்டி**
**நமச்சி வாயம்காண் நாம்பெறும் துணையே'**

**—திருவருட்பா 2-ஆம் திருமுறை: நற்றுணை விளக்கம்: 1**

அ ந்து, தம்மை நாயகியாகக் கொண்டு, இறை வனை நாயகனாக எண்ணிப் பாடும் இலக்கிய மரபு தமிழ் மரபாகும். இடைக்காலச் சமய இலக்கியங் களிலே இத்தகு தூய அன்புநெறியினை நன்கு காண லாம். இம்முறையில்தான் ஞான சம்பந்தப் பெரு மானின் 'சிறையாரும் மடக்கிளியே' என்ற பாடலும் நம்மாழ்வாரின் 'நீயலையே சிறு பூவாய்' என்ற பாடலும் அமைந்துள்ளன. இம்மரபில் வள்ளலார் பாடும் பாடல் கள் நலங் கெழுமியனவாகும். 'அம்பலத்தில் ஆடு கின்றார் பாங்கிமாரே', 'தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே'' 'இன்னந் தயவு வரவில்லையா!' 'தெண்டனிட்டே னென்று சொல்லடி!', 'வருவா ரழைத்து வாடி வடலூர் வடதிசைக்கே' என்னும் பாடல்கள், நெஞ்சில் நீங்காது நிலைத்து நிற்பனவாகும் அவர் பாடியுள்ள பாடலின்கண் அமைந்துள்ள உளவியல் நுட்பம் உணர்ந்து மகிழ்தற்குரியது:

**'அருளாளர் வருகின்ற தருணமிது தோழி;**
ஆயிரமா யிரங்கோடி யணிவிளக்கேற் றிடுக
தெருளாய பசுநெய்யே விடுக மற்றை நெய்யேல்
**திருமேனிக் கொருமாசு செய்தாலுஞ் செய்யும்;'**

'இருளேது; காலைவிளக் கேற்றிடவேண் டுவதோ!'
என்னுதே மங்கலமா யேற்றுதலாங் கண்டாய்;
மருளேலங் கவர்மேனி விளக்கமதென் கடந்த
மதிகதிர்செங் கனல்கூடிற் றென்னினுஞ்சா லாதே!'
—திருவருட்பா: அனுபவமாலை: 24

இப்பாடலில், 'தெருளாய பசுநெய்யே விடுக; மற்றை நெய்யேல் திருமேனிக் கொருமாசு செய்தாலுஞ் செய்யும்' என்னும் அடி, நினைந்து நினைந்து உருகுதற்குரியது.

இத்தகு முறையில் எளிய இனிய பாடல்களால் செம்மை நெறி காட்டிய சான்றோர் **சிதம்பரம் இராமலிங்க அடிகள்**. 'எத்துணையும் பேதமுறாது' எனத் தொடங்கும் பாடலில், இறைவன் திருநடமிடும் இடத்தினைத் தேர்ந்து தெளிவதோடு,

'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு'
—திருக்குறள்: 261

என்றபடி, தவவாழ்வின் சீர்மையினையும் துலக்குகின்றார்.

இவ்வாறாக, திருவருட்பிரகாச வள்ளலார் உலகம் உய்யத் தோன்றிய உத்தமருள் ஒருவர்; கணியன் பூங்குன்றனார் உணர்த்திய உலக ஒருமைப்பாட்டினை நன்கு உணர்ந்தவர்; திருமூலர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர், தாயுமானவர் உள்ளிட்டார் அருள் நெறியில் **'வாழையடி வாழை'** யென வந்த திருக்கூட்டத்தின் மரபில் ஒருவர்; ஒப்பற்றவர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஒளி விளக்காய்த் திகழ்ந்து, இன்னும் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரம் கோடியாண்டு, பாரில் ஒளிவீசித் திகழப்போகும் ஒளிவிளக்கு; ஞான விளக்கு; சீர்திருத்தச் செம்மல் அத்தகைய ஒளிவிளக்கு நம் மனமாசுகளையெல்லாம் களைந்து, மனத்துக்கண் மாசிலன் ஆக்கி, 'வையத்து வாழ்வாங்கு வாழ' வைப்பதாக!' என்று கூறி, அவனருளாலே அவன் தாளினை வாழ்த்தி நிற்கிறேன்.

# 4. 'பாட்டுக்கொரு புலவன் பாரதி'

இருபதாம் நூற்றாண்டில் விளங்கிய தமிழ்க்கவிஞ ருள் தலையாயதோர் இடத்தினைப் பாரதியார் பெறு கின்றார். அவர் வாழ்ந்த காலம், பாரத நாடு தாழ்வுற்று வறுமைமிஞ்சி விடுதலை பெறாதிருந்த காலமாகும் அவர் நெஞ்சில் பொங்கியெழுந்த சுதந்திரக்கனல் விடுதலை வேட்கையின் வெறியில் மூண்டு, அடிமைத் தளையில் கட்டுண்டு, அல்லலுற்றுக் கிடந்த மக்களைத் தட்டியெழுப்பி, உணர்ச்சி ஊட்டியது. அன்னிய ஆட்சி யின் அலங்கோலத்தைக் கவிதையில் வடித்துக்காட்டி மக்களிடையே ஒரு புதிய வேகத்தினை உண்டு பண்ண யவை அவருடைய பாடல்கள். மொழிப்பற்று அற்றுக் கிடந்த மக்களுக்கு மொழிப்பற்று ஊட்டி, நாடு வாழ நல்லவர் உள்ளமெல்லாம் நலிவின்றி வாழ, நல்ல செஞ் சொற் கவிதைகளைச் சிந்தையினிக்கத் தந்தவர் பாரத யாரே எனில், அக்கூற்றில் பொய்மை கலந்திருக்க இயலாது.

மொழிப்பற்றினை முதலில் ஊட்டி, அதன் பின்ன நாட்டுப்பற்றினை வளர்த்து, ஒரு புதிய பாரத சமுதாய உருவாவதற்கு உறுதுணையாக நின்றார் பாரதியார் அவர் பிறந்த காலத்தில், தமிழர்கள் ஆங்கில மோகத் தில் ஆழ்ந்து, தமிழ்ப்பற்றுச் சிறிதும் அற்ற நிலையில் கிடந்தார்கள். எனவே, பாரதியார் வீறு கொண்டு எழுந்தார். ஆங்கில மோகத்தில் ஆழ்ந்து, அன்னை மொழியை மறந்த நன்றியில்லாத் தமிழரைப் பார்த்து

**'வேறுவேறு பாஷைகள் கற்பாய் நீ**
**வீட்டு வார்த்தை கற்கிலாய் போபோபோ'**
**—போகின்ற பாரதமும் வருகின்ற பாரதமும்;**

என்று எள்ளி நகையாடினர். மேலும், தமிழ் ஜாதியைப் பற்றிப் பாரதியார் **1916** ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள், மூன்றும் நாள், சுதேசமித்திரன் பத்திரிகையில் பின்வருமாறு வெளியிட்டார்:

"இந்த நிமிஷத்தில் தமிழ் ஜாதியின் அறிவு, கீர்த்தி, வெளியுலகத்திலே பரவாமல் இருப்பதை நானறிவேன். போன நிமிஷம் தமிழ் அறிவொளி சற்றே மங்கியிருந்ததையும் நான் அறிவேன். ஆனால், போன நிமிஷம் போய்த் தொலைந்தது. இந்த நிமிஷம் சத்தியம் இல்லை. நாளை வரப்போவது சத்தியம். மிகவும் விரைவிலே தமிழின் ஒளி உலக முழுவதிலும் பரவாவிட்டால், என் பேரை மாற்றி அழையுங்கள்!"

தமிழ் மொழி குறித்துப் பாரதியாரின் எண்ணமும் கனவும் இக்கூற்றின் வழி இனிது புலனாதல் காண்க.

**'ஆன்ற மொழிகளி னுள்ளே— உயர்**
**ஆரியத் திற்கு நிகரென வாழ்ந்தேன்'**

என்று, தமிழின் பழமையையும் பெருமையையும் குறிப்பிட்ட பாரதியார்,

**'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல**
**இனிதாவது எங்கும் காணோம்!'**

என்றும்,

**தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்**
**இங்கமரர் சிறப்புக் கண்டார்'**

**—தமிழ்: 4**

என்றும்,

**சொல்லில் உயர்வுதமிழ்ச் சொல்லே;—அதைத்**
**தொழுது படித்திடடி பாப்பா'**

**—பாப்பாப் பாட்டு: 1**

என்றும், தம் தமிழ் மொழிப்பற்றினைப் புலப்படுத்தியுள்ளார்.

தமிழ்ப் பெருங்கவிஞர்பால் தண்டாத காதல் கொண்டவர் பாரதியார். கம்பர் வள்ளுவர் இளா கோவைப்போலப் பூமியில் எங்கும் புலவர் இதுகாறுட பிறந்ததில்லை என்கிறார் கவிஞர்.

'யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;
உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை'

—தமிழ்:

மேலும்,

'சிலப்பதி' காரச் செய்யுளைக் கருதியும்
திருக்குற ளுறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதியும்,
'எல்லையொன் றின்மை' எனும்பொருள் அதனைக்
கம்பன் குறிகளாற் காட்டிட முயலும்
முயற்சியைக் கருதியும், முன்பு நான்தமிழ்ச்
சாதியை அமரத் தன்மை வாய்ந்தது என்று
உறுதிகொண் டிருந்தேன்?'

—தமிழ்ச்சாதி: 20-

என்றும்,

'கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததும்
.............................................
சேரன் தம்பி சிலம்பை இசைத்ததும்
தெய்வ வள்ளுவன் வான்மறை செய்ததும்'

—சுயசரிதை: 24-

என்றும்,

'கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு'

—செந்தமிழ் நாடு

என்றும்,

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு; நெஞ்சை

அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
யாரம் படைத்த தமிழ்நாடு" —செந்தமிழ் நாடு: 7

என்றும் வரும் பாடல்களில் பாரதியார் தமிழ்க் கவிஞர் மூவர்பாலும் கொண்டிருந்த அளவிலா மதிப்புப் புலனுகின்றது.

இவ்வாறு தமிழைப் பாராட்டும் பாரதியார், 'தமிழ் தன் பழமைச் சிறப்போடு புதுமைநெறியிலும் புகுந்து திளைத்து எவ்வாறு பொலிவுறுதல் வேண்டும்' என்பதனையும் குறிப்பிடுகின்றார்; 'மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்லிப் பெருமை பாராட்டிக் கொள்ளாமல், வெளிநாட்டார் வணக்கம் செலுத்தும் வண்ணம், திறமான புலமை தமிழ்மொழியில் வீறிடுதல் வேண்டும்', என்று வற்புறுத்துகின்றார்; மேலும், நாளுக்கு நாள் விரைந்து முன்னேறி வளர்ச்சியும் வாழ்வும் பெற்றுவரும் விஞ்ஞான சாத்திரத்தின் விந்தைமிகு நூல்கள் எல்லாம் தமிழில் துலங்க வேண்டும் என்றும், தமிழால் நுட்பமான எந்தக் கருத்தினையும் எளிதில் கூற இயலும் என்றும் கூறி, 'எட்டுத்திக்கும் சென்று அரிய கலைச்செல்வங்களைக் கொண்டு வந்து குவிக்க வேண்டும்', என்கிறார்.

பாரதியாரின் தமிழ் மொழி வாழ்த்துப்பாடல் தலையாய கருத்துடையதாகும். **வான மளந்த தனைத்தும் அளந்திடும் வண்மொழி', வானம் அறிந்த தனைத்தும் அறிந்து** வண்மொழியாய் வாழவேண்டும் என்கிறார் பாரதியார்.

மொழிப் பற்றினைக் கூறும் பாரதியார், நாட்டுப் பற்றினை முதலாவதாக வற்புறுத்தியுள்ளார்; 'வந்தே மாதரம்' என்று மாநிலத்தாயை வணங்கிப் பாரத நாட்டைப் புகழ்ந்து பாடுகின்றார். முன்னோர் வழிவழி வாழ்ந்து வந்த நாட்டின் நிலையினைச் செம்மாப்போடு எண்ணிப் பார்க்கிறார் கவிஞர்.

'எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே:—அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே:—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே:—இதை
வந்தனை கூறி மனத்தில் இருத்திஎன்
வாயுற வாழ்த்தேனோ!' —வந்தேமாதரம்: 1

என்ற பாடலில், பாரதியாரின் நெஞ்சப் பெருமிதம் நன்கு விளங்கக் காணலாம்.

பாரத நாட்டினை ஞானத்திலும் பரமோனத்திலும் உயர் மானத்திலும் அன்ன தானத்திலும் அமுத கானத்திலும் கவிதையிலும் உயர்ந்த நாடாகக் காண்கின்றார். இமயமலையினை எண்ணியும் இன்னறு நீர்க் கங்கையாற்றினை எண்ணியும் கவிஞர் பெருமிதங் கொள்வதோடு,

'பூரண ஞானம் பொலிந்தநன் னாடு
புத்தர் பிரானருள் பொங்கிய நாடு
பாரத நாடு பழம்பெரு நாடே;
பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே —எங்கள் நாடு: 2

என்று உலகில் பாரதநாடே பழம்பெரும் பூமி என்றும், ஆன்மீக ஞானமும் அன்பும் கைவரப் பெற்றமைந்த நாடென்றும், ஞாலத்திற்கு முழக்கம் செய்கின்றார் பாரதியார்.

பாரத நாட்டைப் பாடிய கவிஞர், தாம் பிறந்த தமிழ் மண்ணினை மறந்தாரில்லை.

'செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே!—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே!' —செந்தமிழ் நாடு: 3

என்று கூறித் தம் தமிழ் நாட்டன்பினைப் புலப்படுத்து கிருர்.

இன்று அரசியலில் பெரிதும் பேசப்படுகின்ற ஒருமைப்பாட்டினை அன்றே இலக்கியத்தில் எழுதிச் சென்றவர் பாரதியார், 'ஒரே உலகம்' (One World) என்னும் நூலை இயற்றிய 'வெண்டல் வில்கி' என்னும் அமெரிக்க எழுத்தாளருக்கு இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன் வாழ்ந்த சங்கத் தமிழ்க் கவிஞர் கணியன் பூங்குன்றனுர், 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்று உலக ஒருமைப்பாட்டினை—உலக மாந்தர் அனைவரும் ஒரே குடும்பத்தினர் என்கிற கருத்தினை உலகுக்கு உணர்த்திச் சென்ருர்.

பாரதியார் சாதி மதங்களைப் பாராது, வேதியரும் வேறு குலத்தவரும் ஒருமித்து இணைந்து வாழும் வாழ் வினை வற்புறுத்தி,

'எப்பதம் வாய்த்திடு மேனும்—நம்மில்
யாவர்க்கும் அந்த நிலை பொது வாகும்;
முப்பது கோடியும் வாழ்வோம்!—வீழில்
முப்பது கோடி முழுமையும் வீழ்வோம்!'

—வந்தே மாதரம்: 5

என்று ஆவேசக் குரலில் ஒற்றுமையினை முரசறைந்து மொழிகின்ருர். மேலும் அவர்,

'முப்பது கோடி முகமுடையாள் உயிர்
மொய்ம்புற வொன்றுடையாள்—இவள்
செப்பு மொழிபதி னெட்டுடை யாள்எனிற்
சிந்தனை ஒன்றுடையாள்!'

—எங்கள் தாய்: 3

என்று பல்வேறு மொழி பேசும் பாரதநாட்டு மக்களின் ஒற்றுமைப்போக்கினை உணர்த்தி, பாரதத் தின் தென்கோடிச் சேரநாட்டு இளமகளிரோடு வடக்கே சிந்து நதியின்மிசை நிலவினில் சுந்தரத் தெலுங்கினில்

பாட்டிசைத்துத் தோணிகளோட்டி வரும் தமிழனைக் கூறுமுகத்தான், நாட்டு ஒருமைப்பாட்டிற்கு நல்ல தொரு சித்திரம் தீட்டிக் காட்டியுள்ளார்.

**'சிந்து நதியின்மிசை நிலவினிலே**
**சேரநன் னாட்டிளம் பெண்களுடனே**
**சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்துத்**
**தோணிக ளோட்டிவிளை யாடிவருவோம்!'**

**—பாரத தேசம்: 5**

'மக்கள் ஆக்கா மனுவேந்தர்கள் கவிஞர்கள்' (Poets are the unacknowledged legislators of the worlds) என்றார் 'ஷெல்லி'. மக்கள் வாக்குரிமை அளித்து அரசியல் பதவிக்கு அனுப்பி வையாமல், மக்கள் கவி யாய் விளங்கும் பாரதியார், மக்கள் நலனுக்குத் தம் கவிதையில் திட்டம் தீட்டுகின்றார். 'சிங்களத் தீவினுக் கோர் பாலம் அமைப்போம்', என்றும், 'வங்கத்தில் ஓடி வரும் நீரின் மிகையால் மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்!' என்றும், பாரதியார் வகுக்கும் திட்டம் பாராட்டத் தக்கதன்றோ!

ஒத்து வரும் பொதுவுடைமைத் தத்துவத்தினையும் பொருந்தப்பாடுகின்றார் பாரதியார். 'எல்லோரும் இந் நாட்டு மன்னர்' என்ற தொடரே பாரதியார் படைத் தளித்த தொடர்தானே! அவர் அளித்த பிச்சையன்றோ அது! 'ஏழையென்றும் அடிமையென்றும் எவனும் இல்லை ஜாதியில்' என்றும், 'இழிவு கொண்ட மனிதரே இந்தியாவில் இல்லை' என்றும் கூறும் பாரதியார், மனிதர் உணவை மனிதர் பறிக்கும் வழக்கத்தைக் கண்டிக்கிறார். மேலும்,

**இனியொரு விதிசெய்வோம்—அதை**
**எந்த நாளும் காப்போம்;**
**தனியொருவனுக் குணவில்லையெனில்**
**ஜகத்தினை அழித்திடுவோம்!'**

**—பாரத சமுதாயம்:**

என்று சொல்லிச் சமுதாயத்தின் வீரக்குரலை வேட்கை வெறியுடன் வெளிப்படுத்துகின்ருர்.

பாரதியார் நாட்டு விடுதலைக்கு ஆற்றிய பணி அளவிடற்கரியது! நாட்டுப் பற்றுக்கொண்ட நல்ல தொண்டராய் அவர் தொடக்கம் முதல் இறுதிவரை விளங்கினுர். புதுவை வாழ்வு அவரது அரசியல் வாழ்வின் பரிசுதானே!

'என்று தணியும் இந்தச் சுதந்திரத் தாகம்?
என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்?
என்றெம தன்னை கை விலங்குகள் போகும்
என்றெம தின்னல்கள் தீர்ந்துபொய் யாகும்!,
—சுதந்திர தாகம் : 2

என்று கொதித்தெழுந்து, நாட்டின் விடுதலையாம் வேள்வித் தீயில் தம்மையே காணிக்கையாகத் தந்தவர் பாரதியார். இனிமை நிறைந்த மனை வாழ்வினைத் துறந்து நிறைவாழ்வு பெற்றுப் பழி மிகுந்த இழிவு வந்துற்றுலும் சுதந்திர தேவியினைத் தொழுதிடல் மறக்கவொத தூய சிந்தையர் பாரதியார். 'தொண்டு செய்யும் அடிமை!—உனக்குச் சுதந்திர நினைவோடா?' என்று ஆங்கிலேயர் கேட்க, 'நாங்கள் முப்பதுகோடி ஜனங்களும் நாய்களோ?—பன்றிச் சேய்களோ? நீங்கள் மட்டும் மனிதர்களோ?' என்று எதிர் வினு எழுப்பி,

'நாமிருக்கும் நாடுநமது என்பதறிந்தோம்!—இது
நமக்கே உரிமையாம் என்ப தறிந்தோம்!—இந்தப்
பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்!—பரி
பூரணனுக் கேயடிமை செய்துவாழ்வோம்!'
—சுதந்திரப் பள்ளு: 5

என்ற நம்பிக்கையைக் கொடிகட்டிப்பிடித்து, 'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்' என்று அன்றே ஆனந்தப் பள்ளுப் பாடினுர் பாரதியார்.

'இம்மென்ருல் சிறைவாசம்; ஏனென்ருல்வனவாசம்' என்று 'செம்மையெலாம் பாழாகிக் கொடுமையே அறமாகித் தீர்ந்த போதில்'

**'வீர சுதந்திரம் வேண்டிநின்ருர் பின்னர்**
**வேறென்று கொள்வாரோ—என்றும்**
**ஆரமு துண்ணுதற் காசைகொண் டார்கள்ளில்**
**அறிவைச் செலுத்துவாரோ?'**

**—சுதந்திரப் பெருமை.**

என்ற விடுதலைக் கீதங்களை இயற்றி, மக்கட்சமுதாயத்தில் புரட்சிக்கனல் பொங்கியெழப் பெரிதும் காரணராயிருந்தார் பாரதியார்.

'பெல்ஜியத்திற்கு வாழ்த்து' என்னும் தலைப்பில் காணும்,

**'அறத்திஞல் வீழ்ந்து விட்டாய்;**
**அன்னியன் வலிய ஞகி**
**மறத்திஞல் வந்து செய்த**
**வன்மையைப் பொறுத்தல் செய்தாய்;**
**முறத்திஞற் புலியைக் காக்கும்**
**மொய்வரைக் குறப்பெண் போலத்**
**திறத்திஞல் எளியை யாகிச்**
**செய்கையால் உயர்ந்து நின்ருய்!'**

என்னும் பகுதி அன்பின் வெற்றி—பண்பின் வெற்றி, பண்பாட்டின் வெற்றி-தோல்வியில் வெற்றி என்று குறிப்பிட இயைந்ததாகும்.

மாந்தர் அனைவரும் ஒன்றுபட்ட சிந்தையராய், 'ஒன்று பரம்பொருள்; நாமதன் மக்கள்' என்று வாழ்ந்தால், உலகு இன்பக்கேணியாகும் என்று உணர்த்திஞர் பாரதியார். 'வண்ணங்கள் வேற்றுமைப்படினும், மானிடர் வேற்றுமைப்படுவதில்லை' என்று கூறி,

ஒற்றுமையில் முகிழ்க்கும் ஓர் உலக சமுதாயம் காணத் துடித்துக் கிடந்தார் பாரதியார்.

சான்றோர்களைப் புகழ்கின்ற பாரதியாரின் பாட்டில் மையமும் நற்கருத்தும் நன்கு துலங்கக் காணலாம். டாக்டர் சாமிநாத ஐயர் அவர்களை வாழ்த்தும் போது,

**'பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்**
**காலமெலாம் புலவோர் வாயில்**
**துதியறிவாய்; அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்**
**இறப்பின்றித் துலங்கு வாயே!'**

என்று அழகுபடப் பாடியுள்ளார். இதுபோன்றே தேசியத் தலைவர் 'காந்தியண்ணலை'ப் பாடும் பொழுதும்,

**வாழ்கநீ! எம்மான்! இந்த வையத்து நாட்டி லெல்லாம்**
**தாழ்வுற்று வறுமைமிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப்**
**பாழ்பட்டு நின்ற தாமோர் பாரததேசந் தன்னை**
**வாழ்விக்க வந்த காந்தி மஹாத்மா! நீ வாழ்க! வாழ்க!'**

என்று பொருட் பொருத்தமுறப் பாடியுள்ளார்.

'கல்விப் பணியே கலைமகள் பணி' என்பது பாரதியாரின் அழுத்தமான எண்ணம். இதனை.

**'இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்**
**இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்**
**அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்**
**ஆல யம்பதி னாயிரம் நாட்டல்**
**பின்னருள்ள தருமங்கள் யாவும்**
**பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்**
**அன்ன யாவினும் புண்ணியம் கோடி**
**ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்'**

**—பாரதி: வெள்ளைத் தாமரை : 9**

என்னும் பாடலில் காணலாம்.

இந்தக் கல்வி விளங்க வேண்டுமானுல் மக்கள் வயிருர உண்பதற்கு உணவு வேண்டும். இதையும் பாரதியார் பாடுகின்ருர்:

**'வயிற்றுக்குச் சோறிட வேண்டும்—இங்கு**
**வாழும் மனிதருக் கெல்லாம்;**
**பயிற்றிப் பலகல்வி தந்து—இந்தப்**
**பாரை உயர்த்திட வேண்டும்.'**

**—பாரதி: முரசு: 30**

'பாரதியார் தேச பத்தர் மட்டுமல்லர்; சிறந்த தெய்வபத்தரும் ஆவார்' என்பர், திரு. பரலி சு. நெல்லை யப்பர்; 'முன்னவனே முன்னின்ருல் முடியாப் பொரு ளுளதோ?' என்பது தமிழ் உரை. பாப்பாப் பாட்டில், பாரதியார்,

**'தெய்வம் நமக்குத் துணை பாப்பா!—ஒரு**
**தீங்குவர மாட்டாது பாப்பா!'**

என்றும்,

**'துன்பம் நெருங்கி வந்த போதும் — நாம்**
**சோர்ந்துவிட லாகாது பாப்பா!**
**அன்பு மிகுந்ததெய்வ முண்டு—துன்பம்**
**அத்தனையும் போக்கிவிடும் பாப்பா!'**

என்றும் தெய்வ பத்தியினை வலியுறுத்திக் கூறியிருப்ப தோடு, வாழும் முறையினைக் குறிப்பிடுகின்ற போதும், வேண்டிய மூன்று பண்புகளுள் ஒன்ருகத் தெய்வ நம்பிக்கையினை வற்புறுத்தியுள்ளார்:

**'உயிர்க ளிடத்தில் அன்பு வேணும்;—தெய்வம்**
**உண்மையென்று தானறிதல் வேணும்!**
**வயிர முடைய நெஞ்சு வேணும்;—இது**
**வாழும் முறைமையடி பாப்பா!'**

**—பாப்பா பாட்டு: 16**

தெய்வபத்தி சுடர்விட்டு எரிகிறது பாரதியாரின் உள்ளத்திலே! தொந்திக் கணபதியை முந்தி வணங்கி

'உனக்கெயென் ஆவியும் உள்ளமும் தந்தேன்;
மனக்கேதம் யாவினையும் மாற்றி—எனக்கேநீ
நீண்டபுகழ் வாணாள் நிறைசெல்வம் பேரழகு
வேண்டுமட்டும் ஈவாய் விரைந்து.'

என வேண்டுகிறார். அடுத்து, தென்மலைக் காட்டிலே, சொல்லினைத் தேனிற்குழைத்துரைக்கும் சிறு வள்ளியைக் கண்டு சொக்கி மரமென நின்ற வேலவனை,

'கருதிக் கருதிக் கவலைப் படுவார்
கவலைக் கடலைக் கடியும் வடிவேல்'

என்கிறார். மோனை நயம கனிந்த இப்பாடல், ஒலி நயம் பயப்பதனைக் காணலாம்.

'வீரத் திருவிழிப்பார்வையும்—வெற்றி
வேலும் மயிலும்என் முன்னின்றே—எந்த
நேரத் திலும்என்னைக் காக்குமே!'

என்று, வேலும் மயிலும் துணை என்ற தாரக மந்திரத்தைச் சாற்றுகின்றார். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய்' எங்கள் 'இறைவா, இறைவா. இறைவா!' என்று ஆனந்தக் கூத்தாடும் பாரதியார், தன் வழிபடு தெய்வமாம் பராசக்தியினைக் 'காணி நிலம் வேண்டும்' என்று வரங் கேட்கின்றார். பாரதியாரின் 'காணி நிலம் வேண்டும்' என்ற பாட்டு உயரிய படைப்பு. இயற்கையோடு இயைந்து வாழும் வாழ்வினை எடுத்தியம்பும் இப்பாடலில், பாரதியார் வேண்டும் வாழ்வினை அவர் கவிதை கொண்டே காணலாம்:

'காணி நிலம்வேண்டும்;—பராசக்தி
காணி நிலம்வேண்டும்;—அங்கு,
தூணில் அழகியதாய்—நன்மாடங்கள்
துய்ய நிறத்தினதாய்—அந்தக்
காணி நிலத்திடையே—ஓர்மாளிகை
கட்டித் தரவேண்டும்;—அங்கு,
கேணியருகினிலே—தென்னைமரம்
கீற்று மிளநீரும்

'பத்துப் பன்னிரெண்டு—தென்னைமரம்
பக்கத்திலே வேணும்;—நல்ல
முத்துச் சுடர்போல நிலாவொளி
முன்பு வரவேணும்;—என்றன்
சித்தம் மகிழ்ந்திடவே—நன்றாயிளந்
தென்றல் வரவேணும்;
பாட்டுக் கலந்திடவே—அங்கேயொரு
பத்தினிப் பெண்வேணும்;—எங்கள்
கூட்டுக் களியினிலே—கவிதைகள்
கொண்டு தரவேண்டும்;—அந்தக்
காட்டு வெளியினிலே;—அம்மா! நின்றன்
காவலுற வேணும்!—என்றன்
பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப்
பாலித்திட வேணும்.'

'நல்லதோர் வீணை', 'மஹா சக்திக்கு விண்ணப்பம்' 'அன்னையை வேண்டுதல்' என்னும் பாடல்கள், அன்னையிடம் வரம் வேண்டி நிற்கும் கவிஞரின் எண்ணப் புதையல்களாகும்.

'இன்னுமொரு முறைசொல்வேன், பேதை நெஞ்சே
எதற்குமினி உலைவதிலே பயனொன் றில்லை;
முன்னர்நம திச்சையினாற் பிறந்தோ மில்லை;
முதலிறுதி இடைநமது வசத்தில் இல்லை;
மன்னுமொரு தெய்வத்தின் சக்தியாலே
வையகத்திற் பொருளெல்லாம் சலித்தல் கண்டாய்;
பின்னையொரு கவலையுமிங் கில்லை; நாளும்
பிரியாதே விடுதலையைப் பிடித்துக் கொள்வாய்!'
—பேதை நெஞ்சே: 1

என்று பேதை நெஞ்சை நோக்கிக் கவிஞர் உரைக்கும் உபதேசத்தில், வாழ்வின் உயர்ந்த தத்துவமே அடங்கிக் கிடக்கின்றது. 'முத்துமாரி' என்றும் பாடலில், 'மனம் வெளுக்க வழியில்லை,' 'பேதைமைக்கு மாற்றில்லை'

என்று கூறும் கவிஞரின் கூற்று, பொருள் நிறைந்த தாகும்.

'கண்ண பெருமானே' என்னும் பாட்டில், காயில் புளித்தும், கனியில் இனித்தும், நோயில் படுத்தும், நோன்பில் உயிர்த்தும், காற்றில் குளிர்ந்தும், கனலில் சுட்டும் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரதத்துவத் தினை விளக்குகின்றார் பாரதியார். 'நந்தலாலா'ப் பாட்டில் காக்கைச் சிறகின் கருமையிலும், பார்க்கும் மரத்தின் பசுமையிலும், கேட்கும் ஒலியின் கீதத்திலும், தீக்குள் விரலை வைத்து அடையும் உணர்ச்சியிலும் கண்ணனைக் காண்கிறார் கவிஞர்.

பிறிதோரிடத்தில், ஞாலமுற்றும் பராசக்தியின் தோற்றமாகக் காண்கிறார் கவிஞர். அங்கு ஞான மென்ற விளக்கினை ஏற்றிக் காலமுற்றும் காதலென்ப தோர் கோயிலின்கண் துதித்து நிற்கிறார் கவிஞர்.

மங்கியதோர் நிலவில் பொங்கிவரும் பெருநிலவு போன்ற முகமும், புன்னகையின் புதுநிலவும் போற்ற வருந் தோற்றமும் கொண்ட அழகுத் தெய்வத்தினைக் கனவில் கவிஞர் காண்கின்ற காட்சி, அற்புதக் காட்சியாகும்.

அடுத்து, பாரதியார் பெண்களைப் பற்றியும் காதலைப் பற்றியும் பாடியுள்ள பகுதிகளை நோக்கு வோம்.

'அமுதூற்றினையொத்த இதழ்கள், நிலவூறித் ததும்பும் விழிகள், பத்து மாற்றுப் பொன்னொத்த மேனி' எனக் கண்ணம்மாவை எண்ணிக் களிக்கிறார் கவிஞர்.

**'காதலெனுந் தீவினிலே ராதே ராதே—அன்று**
**கண்டெடுத்த பொன்மணியே ராதே ராதே!'**

என்னும் ராதைப்பாட்டில், 'காதலெனுந் தீவினிலே

என்ற அழகான தொடரினை நமக்கு அறிமுகம் செய்து வைக்கின்றார் கவிஞர்.

காதலின் ஆற்றலைப் படிக்கும் நம் மனத்திற் பசு மரத்தாணியெனப் பதியும் வண்ணம் பாரதியார் நமக்கு அறிவுறுத்தியுள்ளார். காதலினால் அறிவெய்தும் என்றும், காதல் கவிதைப் பயிரை வளர்க்கும் என்றும், காதலினால் உயிர் வீரத்திலேறும் என்றும் கவினுற விளக்கும் கவிஞர், காதலின் புகழினை,

**'காதலினால் மானிடர்க்குக் கலவி யுண்டாம்;**
**கலவியிலே மானிடர்க்குக் கவலை தீரும்;**
**காதலினால் மானிடர்க்குக் கவிதை உண்டாம்;**
**கானமுண்டாம் சிற்பமுதற் கலைக ளுண்டாம்**
**ஆதலினால் காதல் செய்வீர் உலகத்தீரே!'**

என்று காதற்பேரரசின் வலிமையினைப் புலப்படுத்துகின்றார்.

'நல்ல காதல் புரியும் அரமபையர் போல் இளங் கன்னியர் சூழ்ந்த தமிழ்நாடு' என்று கூறிய பாரதியார்,

**'.........கவிதைக் கனிபிழிந்த**
**சாற்றினிலே பண்கூத் தெனுமிவற்றின் சாரமெலாம்**
**ஏற்றி, அதனொடு இன்னமுதைத் தான்கலந்து**
**காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்**
**மாதவனின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்'**
**—குயிற்பாட்டு: 242–246**

என்று பெண்ணின் அழகுப் பொலிவினைப் பாடுகின்றார்.

அடுத்து, 'பெண்ணென்று சொல்லிவிடில் ஒரு பேயும் இரங்கும்' என்று பெண்ணின் மேன்மை கூறி, அதே நேரத்தில் புதுமைப் பெண்ணையும் படைத்துக் காட்டுகின்றார் பாரதியார். 'ஞானம், நல்லறம், வீர சுதந்திரம் முதலியன நற்குடிப் பெண் பேணும்

குணங்கள் என்றும், 'நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டும்' என்றும் கூறிய பாரதியார்,

**'நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்**
**நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்**
**திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்**
**செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்'**

**—புதுமைப் பெண்: 7**

என்று குறிப்பிடுகின்றார்.

பட்டங்கள் பெற்றுச் சட்டங்கள் செய்வதோடு, எட்டும் அறிவினில் ஆணுக்கு இளைப்பில்லாத பெண்கள் சாதம் படைப்பதோடு தெய்வச் சாதியினையும் படைக்கின்றார்கள். 'படித்து விட்டால் திருமணம் வேண்டா' என்று கூறும் பெண்களுக்குச் சவுக்கடி கொடுப்பவளைப் போலப் புதுமைப் பெண் பின் வருமாறு கூறுகிறாள்:

**'காதலொருவனைக் கைப்பிடித்தே அவன்**
**காரியம் யாவிலும் கைகொடுத்து**
**மாத ரறங்கள் பழமையைக் காட்டிலும்**
**மாட்சி பெறச்செய்து வாழ்வமடி!'**

'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்தி, தாதர் என்ற நிலைமை மாறி ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே!' என்கிறார் பாரதியார். 'காதற்பெண்கள் கடைக்கண் பணியிலே காற்றிலே ஏறி அவ்விண்ணையும் சாடுவோம்!' என்கின்றனராம் ஆடவர்.

பாரதியாரின் படைப்புகளில் முதல் இடம் பெறுவது 'கண்ணன் பாட்டே!'' கண்ணனைத் தோழனாய், தாயாய், தந்தையாய், சேவகனாய், அரசனாய், சீடனாய், சற்குருவாய், விளையாட்டுப் பிள்ளையாய், காதலனாய், காந்தனாய், ஆண்டானாய்க் காண்கின்றார் பாரதியார். இதுபோன்றே, கண்ணம்மாவைக் குழந்தையாய், காதலியாய், குலதெய்வமாய்க்

கண்டு நாமணக்கும் பாடல்களைப் புனைந்துள்ளார், பாட்டுக்கொரு புலவராய் நாட்டு மக்கள் நெஞ்சில் உறையும் பாரதியார்.

'நெஞ்சிலுள்ள காதல் பெரிதெனக்குக் காசு பெரிதில்லை' என்கிறுன் சேவகன்; மக்களுக்கு வாத்தியாய், வளர்ப்புத் தாயாய், வைத்தியனுய் விளங்கும் சேவகன் பெண்டுகளைத் தாய்போலப் பிரியமுற ஆதரித்து, நண்பனுய், மந்திரியாய், நல்லாசிரியனுய், பண்பிலே தெய்வமாய், பார்வையிலே சேவகனுய் உள்ளான்.

'தீராத விளையாட்டுப் பிள்ளை' எனத் தொடங்கும் பாடலைப் பல முறை பாடிப் பாடிச் சுவைத்துச் சுவைத்து மகிழ வேண்டும். கண்ணன் செய்யும் குறும்பில் ஒன்று காண்போம்.

**'அழகுள்ள மலர்கொண்டு வந்தே—என்னை**
**அழ அழச் செய்துபின், 'கண்ணைமூ டிக்கொள்**
**குழலிலே சூட்டுவேன் என்பான்;—என்னைக்**
**குருடாக்கி மலரினைத் தோழிக்கு வைப்பான்.'**

கண்ணம்மாவைக் குழந்தையாக எண்ணிப் பாரதியார் பாடும் பாட்டு, உயரிய பாட்டாகும். பிள்ளைக் கனியமுதாய்ப் பேசும்பொற் சித்திரமாய் விளங்கும் கண்ணம்மாவின் உச்சிதனை மோந்தால், உள்ளத்தில் கருவம் ஓங்கி வளர்கிறதாம்! கன்னத்தில் முத்தமிட்டால் உள்ளம் கள்வெறி கொள்கிறதாம்! தழுவினுல், உள்ளம் உன்மத்தமாகிறதாம்! நெற்றி சுருங்கக் கண்டால், நெஞ்சம் பதைக்கிறமாம்; கண்ணம்மாவின் கண்ணில் நீர் வழிந்தால், நெஞ்சில் உதிரம் கொட்டுகிறதாம்! கண்ணிற் பாவையன்ன கண்ணம்மா சொல்லும் மழலையில் துன்பம் தீர்த்து, முல்லைச் சிரிப்பால் மூர்க்கத்தினைத் தவிர்த்து, அன்பு தருவதில் தெய்வமாய் சின்னஞ்சிறு கிளியாய், செல்வக் களஞ்சியமாய் விளங்குகிறுள்.

இன்பக் கதைகளெல்லாம்—உன்னைப்போல்
ஏடுகள் சொல்வ துண்டோ?

என்று பராசக்தியைக் குழந்தை கண்ணம்மாவாகக் கொண்டு பாரதியார் அரிய பாட்டொன்று புனைந்துள்ளார்.

பழைய கதையில் புதிய கருத்தை நுழைத்துப் பாடிய பாட்டு, 'பாஞ்சாலி சபதம்' ஆகும். உணர்ச்சி நிறைந்த காவியம் இது. 'நன்றி கெட்ட விதுரா! சிறிதும் நாண மற்ற விதுரா?' என்று விதுரனை விளித்துத் துரியோதனன் கூறும் கூற்றில், உணர்ச்சி கொப்பளித்து வருவதனைக் காணலாம். 'ஐவருக்கு நெஞ்சும்—எங்கள் அரண்மனைக்கு வயிறும்' என்பது என்ன அழகான தொடர்!

பாஞ்சாலி சபதத்தில் உவமை அழகிற்கும் குறை வில்லை என்பதனைப் பின்வரும் பாடலிற் காணலாம்.

'கோயிற் பூசை செய்வோர்— சிலையைக்
கொண்டு விற்றல் போலும்,
வாயில் காத்து நிற்போன் வீட்டை
வைத்தி ழத்தல் போலும்
ஆயிரங்களான— நீதி
யவைஉ ணர்ந்த தருமன்
தேயம் வைத் திழந்தான்;—சிச்சீ!
சிறியர் செய்கை செய்தான்!'

—பாஞ்சாலி சபதம்: 219

பாஞ்சாலி சபதம், 'தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும், தருமம் மறுபடி வெல்லும்'......'கருமத்தை மேன்மேலுங் காண்போம், இன்று கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; காலம் மாறும்' என்னும், அரிய கருத்தினை உணர்த்தி நிற்கின்றது.

'முன்னிக் கவிதை வெறிமூண்டே நனவழியப் பட்டப் பகலிலே' பாரதியார்க்குத் தோன்றிய

நெட்டைக் கனவின் நிகழ்ச்சியே குயிற்பாட்டு. காதலை வேண்டிக் கரையும் குயில், காதல் இன்றேல் சாதலை வேண்டித் தவிக்கின்றது. 'பாட்டினைப் போல் ஆச்சரியம் பாரின் மிசை இல்லையடா', என்று கூறும் பாரதியார், குயிற்பாட்டிலே அழகிய தத்துவ விளக்கம் காட்டி, பாட்டின் இறுதியில், 'கற்பனையே யானலும் வேதாந்தமாக விரித்துப் பொருளுரைக்க இட முண்டா?' என்ற வினு எழுப்பியுள்ளார்.

இவ்வாறு உள்ளத்தில் உண்மையொளி பெற்று, வாக்கினிலே இனிமை கொண்டு பாடிய பாரதியாரின் பாடல்கள் இந்தத் தலைமுறையின் அரிய சொத்தாகும். பாரதியாரின் பாடல்கள் பல துறைகளையும் உள்ளடக்கியனவாகும். சொல்ல வந்த பொருளை அழகுடன் சொல்லி அழியாப் புகழ் பெற்ற அமர கவிஞர் பாரதியார்.

பாரதியாரைக் குறித்துப் 'பாரதிதாசனர்' புனைந்துள்ள கவிதை, பாரதியாரின் நலம் விரிக்கும் நயம் சான்றது.

**'தமிழகம்! தமிழுக்குத் தகும்உயர் வளிக்கும்**
**தலைவனை எண்ணித் தவங்கிடக் கையில்**
**இலகு பாரதிப் புலவன் தோன்றினன்!**
**பைந்த மிழ்த்தேர்ப் பாகன்; அவனெரு**
**செந்தமிழ்த் தேனீ; சிந்துக்குத் தந்தை!**
**குவிக்கும் கவிதைக் குயில்; இந் நாட்டினைக்**
**கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவியரசு**
**நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா**
**காடு கமழும் கற்பூரச் சொற்கோ**
**கற்பனை ஊற்ரும் கதையின் புதையல்;**
**திறம்பாட வந்த மறவன்; புதிய**
**அறம்பாட வந்த அறிஞன்; நாட்டிற்**
**படரும் சாதிப் படைக்கு மருந்து!**
**மண்டும் மதங்கள் அண்டா நெருப்பவன்;**
**அயலார் எதிர்ப்புக் கணையா விளக்கவன்;**
**என்னென்று சொல்வேன்! என்னென்று சொல்வேன்!**

'தமிழால், பாரதி தகுதி பெற்றதும்,
தமிழ்பா ரதியால் தகுதி பெற்றதும் !'
—பாரதிதாசன் கவிதை : இரண்டாம் தொகுதி

பல்கலைச் செல்வர்-பேராசிரியர்-தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் அவர்கள், பாரதியார் பாடல்களைப் பற்றிப் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

"பாரதி திலகர் யுகத்தின் இனிய உயிருள்ள குரலாக நின்று தமிழ் நாட்டில் பாடத் தொடங்கினுர். பொது மக்களுக்கு விளங்கும் நடையில், பொது மக்கள் விரும்பிப் பாடிவந்த நாடோடிப்பாடல் நடையில் பாடினுர். புதிய உணர்ச்சி—ஆனல் உள்ளூற உள்ளத்தில் துடிக்கும் உணர்ச்சி—இன்றைய இழிவு, சென்ற காலத்தின் சிறப்பு, எதிர்காலத்தில் நம்பிக்கை, உலக முழுதிற்குமாகத் துடிக்கின்ற துடிப்பு, உரிமை வேட்கை, எங்கும் கடவுளென்ற பழங்கொள்கையின் புது விளக்கம். இதன் பயனுகப் 'புலையனுக்கும் விடுதலை' என்று பாடுவதோடு நில்லாமல், 'காக்கை குருவி எங்கள் ஜாதி' என்று காணும் விடுதலைச் சகோதரச் சமத்துவம், ஆன்ம நேய ஒருமைப்பாடு, மதம் பிடித்த யானையை உடன் பிறப்பின் அன்போடு நெருங்கி உயிர் கொடுக்கும் கொள்கையின் உறுதி. உலகத் துன்பத்தை எவ்வகையேனும் மறந்து, இந்த உயரிய உணர்ச்சிகளைப் பாட்டாகப் பாடி, மக்களை எழுப்பத் துடிதுடிக்கும் உள்ளத்துடிப்பு, ஆனுல், இவையனைத்தையும் கடவுள் வழிபாடென்ற நோக்கம், ஆற்றல் மிக்க சக்தி வழிபாடு, இந்தத் தாயாம் பெருஞ் சக்தியாகத் தமிழ் நாட்டையும் இந்திய நாட்டையும் தமிழரையும் இந்தியரையும் அத்தாயின் கைகளாகக் கொண்டு விளக்க முந்தும் நெஞ்சுரம், பழைய பண்பாட்டின் நிலையங்களாக இந்த மக்களைக் காண்கின்ற காட்சி, தன் கடவுளைக் கண்ணனுக்கி எல்லா உறவு

களிலும் தொடர்புகளிலும் அவனைக் கண்டு அன்பு நெக்குருகும் பக்தி, அடிமைத் தளையைத் தகர்த்தெறிய முயலும் முயற்சியைப் பரிபூரணன் வடிவமாய்க் கிடக்கும் இந்திய நாட்டு மக்களின் வழிபாடாக உணரும் ஆழம், கடவுள்வழிபாடு, இவ்வாறு மக்கள் வழியாகத் தோன்றும் உண்மை, இந்தக் காட்சியால் விடுதலைப் போராட்டத்திற்கென எழும் புதிய ஊக்கம், அரசியல் விடுதலை மட்டுமின்றிச் சமுதாய விடுதலைக்கென ஆனந்தப் பள்ளுப்பாடும் களிப்பு, பொருளாதார விடுதலையினை நாடியதால், "தனியொருவனுக் குணவில்லையெனில் சகத்தினை அழித்திடுவோம்!" என்ற வீரமுழக்கம், பெண்களைச் சக்திகளாகக் கொண்டு கும்மியடிக்கும் இன்பக் கூத்து, விடுதலையை எதிர்த்து நிற்பாரைப் பழைய பாடல்களைப் பாடி இகழும் நையாண்டித்தனம், எதிர்ப்பை எரிக்கும் எரிவு, நாட்டின் இழிவினையும் நாட்டு மக்கள் அங்கங்கே படும் துன்பத்தையும் எண்ணி, "ஆ! கரும்புத் தோட்டத்திலே" என்று கதறும் கதறல், சிறுவரையும் தட்டியெழுப்பி, 'அச்சமில்லை, அச்சமில்லை, 'ஜயபேரிகை கொட்டடா!' என்ற ஆரவாரம், பெருமக்களை எல்லாம் பண்பாட்டின் அடையாளமாக்கி வாழ்த்தி எடுத்துக்காட்டும் நன்றி மறவா உள்ளம், பாரதப் பழங்கதையினையும் தீமையின் வீழ்ச்சியை விளைவிக்கும் பெண்ணின் பெருமையாகப் பாடும் வீரக்காப்பிய வீறுப்பு—இந்தப் பல வகை விடுதலை வாழ்வை எல்லாம் சித்தர்கள் பாட்டைப் போல ஆன்மியக் காதல் வாழ்வாகக் கண்டதனை வெளியிடும் குயிற்பாட்டு, இவையெல்லாம் ஒருங்கு திரண்டதே பாரதியாரின் பாடல்."

தேசியக் கவியாயும், பாட்டுக்கொரு புலவராயும் வாழ்ந்த பாரதியாரின் பாடல்களைப் பாடிப்பாடிக் கவிதையழகில் களிப்புற்று, மாறாத மனமகிழ்ச்சியில் திளைத்திருப்போமாக.

## 5. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

தென்திருவாங்கூரைச் சேர்ந்த நாஞ்சில் நாட்டின் தேரூரில் கி. பி. 1876ஆம் ஆண்டு. கவிமணி அவர்கள் 'சிவதாணுப் பிள்ளை'க்கும், 'ஆதி லட்சுமி அம்மை' யாருக்கும் அருந்தவப்புதல்வராய்ப் பிறந்தார். திருவா வடுதுறை ஆதீனத்துச் சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ்க்கல்வி பயின்ற இவர், முதன்முதல் 'அழகம்மை ஆசிரிய விருத்தம்' என்னும் கவிதை நூலினை 1895 ஆம் ஆண்டில் இயற்றினர்; 1901இல் புத்தேரி புனிதவதி உமையம்மையாரை மணம் முடித்து, அவ் வாண்டே கோட்டாற்றுத் தொடக்கப்பள்ளியில் ஆசிரியப் பணியினை மேற்கொண்டார்; பின்னர்த் திருவனந்தபுரம் மகாராஜா பெண்கள் கல்லூரித் தமிழ் விரிவுரையாளராய் விளங்கினர்: சாசன ஆராய்ச்சியில் ஈடுபட்டார். 'மருமக்கள் வழி மான்மியம்' என்னும் நகைச்சுவை நூலினை வெளியிட்டார். இனிய நண்பர் களுடன் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட இவர், 1931 ஆம் ஆண்டு ஆசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்று, 1936 ஆம் ஆண்டில் 'காந்தளூர்ச்சாலை' என்னும் சரித்திர ஆராய்ச்சி நூலினை வெளியிட்டார். 1938ஆம் ஆண்டில் 'மலரும் மாலையும்' என்னும் இவரது கவிதைத் தொகுதி வெளி வந்தது. 1940இல் 'கவிமணி' என்னும் பட்டத்தைப் பெற்ற இவர், 1941இல் புத்தர் வரலாற்றினைப் பழகு தமிழில் கூறும் 'ஆசிய ஜோதி' என்னும் நூலினை வெளியிட்டார். 1945இல் 'உமார் கய்யாம்' என்னும் கவிதை நூல் வெளியாயிற்று. 1953இல் 'கவி மணியின் உரை மணிகள்' என்னும் நூலும், 'தேவியின் கீர்த்தனங்கள், என்னும் இசை நூலும் வெளி வந்தன. 1954ஆம்

ஆண்டு செப்டெம்பர்த் திங்கள், இருபத்தாறும் நாள், கவிமணி அவர்கள் இம்மண்ணுலக வாழ்வை நீத்தார்கள். கவிமணியினை 'நாமக்கல் கவிஞர்' நம் மனக்கண் முன் தோற்றுமாறு கொண்டு வந்து காட்டுகின்றார். பின வரும் பாடலைக் காண்க:

' துரும்பென மெலிந்த தேகம்
துலங்கிடும் குளிர்ந்த பார்வை
இரும்பினும் வலிய உள்ளம்
இனியவே செய்யும் எண்ணம்
பரம்பொருள் நினைவே காட்டும்
பாரெலாம் பரந்த நோக்கம்
கரும்பினும், இனிய சொற்கள்
'கவிமணி' வடிவ மாகும்.'

கவிமணியின் பாடல்கள் எளிமையும் இனிமையும் நிறைந்தவை. 'எளிமை இல்லையென்றால், கவியில்லை,' என்பது இன்றைய அளவுகோல். பெண்மை, தன்மை, எளிமை ஆகிய மூன்று பண்புகள் கவிமணியின் பாடல்களில் வேரோடி நிற்பதைக் காணலாம். அன்பு, அருள், ஆழ்ந்த தெய்வ பக்தியில் முகிழ்த்தவை அவருடைய பாடல்கள். எங்கும் காணும் எளிய வாழ்வின் உண்மைகளே அவர் பாடலின் அடிப்படை ஊற்றுகளாய்த் துலங்குகின்றன. மக்கட் பண்பாட்டின் உரைகல்லாய்க் கவிமணியின் பாடல்கள் கருக்கொண்டுள்ளன.

' உள்ளத் துள்ளது கவிதை—இன்பம்
உருவெடுப்பது கவிதை
தெள்ளத் தெளிந்த தமிழில்—உண்மை
தெரிந்து ரைப்பது கவிதை '

—மலரும் மாலையும் : கவிதை 7

என்று கவிமணி அவர்கள் கவிதைக்கு இலக்கணம் கண்டுள்ளார்கள். அவ்விலக்கணத்திற்கு இயைந்து

எழுந்த இலக்கியப் படைப்புகளே கவிமணியின் கவிதைகளாகும்.

எளிய சொற்களும், உயர்ந்த கருத்துகளும் விழுமிய ஓசையும் கவி மணியின் கவிதைகளில் கட்டாயம் கலந்திருக்கக் காணலாம். அவர் பாடியுள்ள சரசுவதி துதிப்பாடலைக் காண்க:

**'நாடிப் புலங்கள் உழுவார் கரமும்; நயவுரைகள்**
**தேடிக் கொழிக்குங் கவிவாணர் நாவும் செழுங்கருணை**
**ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும் உவந்துநடம்**
**ஆடிக் களிக்கும் மயிலே! உன் பாதம் அடைக்கலமே'**

'கோயில் வழிபாடு' என்ற தலைப்பில் கவிமணி பாடியுள்ள பாடல் ஓர் அரிய கருத்தினை உள்ளடக்கி நிற்பது. கோயில் முழுவதுங் கண்டும், உயர் கோபுரம் ஏறிக் கண்டும், தேவாதிதேவனைக் காண இயலவில்லை. ஏன்? கண்ணுக்கினிய கண்டு, மனத்தைக் காட்டில் அலையவிட்டு மக்கள் வாழும்போது, பண்ணிடும் பூசையாலே பயன் விளைந்து பரமன் தோன்றுவானோ? தோன்றான் அன்றோ? பின், இறைவன் எங்குளன்? கவிஞர் காட்டுகின்றார்:

**'உள்ளத்தில் உள்ளான் அடி!—அது**
**உணர வேண்டும் அடி!**
**உள்ளத்தில் காண்பாய்எனில்—கோயில்**
**உள்ளேயுங் காண்பாய் அடி!'**

இந்தப் பாடலோடு,

**'நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே**
**மஞ்சனநீர் பூசை கொள்ள வாராய், பராபரமே!'**

என்னும் 'தாயுமானவர்' வாக்கினை ஒப்பிடுக.

'பாரதியும் பட்டிக்காட்டானும்' என்னும் கவிதை பாரதியாரின் கவிதைக்கு உரிய உறைகல்லாகும்.

பாமரனும் பாரதியாரின் பாடலில் உயர்வைக் கூறு முகத்தான் 'புலவர் காய்ச்சல்' என்ற இழிசொல்லினைப் புறந்தள்ளுகின்றார் கவிமணி அவர்கள்.

**' சொல்லுக்குச் சொல்லழகும் ஏறுமேஅடா!—கவி**
**துள்ளும் மறியைப் போலே துள்ளுமேஅடா**
**கல்லும் கனிந்துகனி யாகுமேஅடா பசுங்**
**கன்றும்பால் உண்டிடாது கேட்குமே அடா!'**

கவிஞன் படைப்பாம் கவிதைக்கு நல்ல விமரிசன மன்றோ இவ்வடிகள்!

இது போன்றே கவிச்சக்கரவர்த்தி கம்பநாடரின் கவிதைச் சிறப்பினை,

**' அயன் படைப்பினையும்—திருத்தி**
**அழகு செய்திடு வோன்;**
**நயம்தெ ரிந்துகதை—நடத்தும்**
**நாடகக் கவிஞன்'**

என்று புகழ்ந்துரைத்துள்ளார்.

குழந்தையைப் பற்றிப் பாடல்களைப் புனைந்த கவிஞர்களுள் கவிமணி முதன்மை இடத்தினைப் பெறுகிறார். "நீங்கள் குழந்தைகள் போன்று ஆகுங்கள்; குழந்தைகள் போன்றவர்களே இறைவனடியை அணுகுதற்குத் தகுதியுடைவர்கள்' என்ற ஏசுபெருமான் பொன்மொழியினைக் கருத்திற்கொண்டு, குழந்தைப் பாடல்களை நெஞ்சம் கொள்ளை கொள்ளும் வண்ணம் கவிமணி பாடியுள்ளார். குழந்தையைத் தாலாட்டும் தாய், பின் வருமாறெல்லாம் பாடுகின்றாள்:

**' முல்லை நறுமலரோ ?**
**முருகவிழ்க்குந் தாமரையோ ?**
**மல்லிகைப் பூவோ ?**
**மருக்கொழுந்தோ ? சண்பகமோ ?**

நெஞ்சிற் கவலையெல்லாம்
நீங்கத் திருமுகத்தில்,
புன்சிரிப்பைக் காட்டி, எம்மைப்
போற்றும் இளமதியோ?'

—தாலாட்டு : 3, 6

இவ்வாறு குழந்தையின் பெருமையினைக் கூறிய அவர், நெஞ்சை உலுக்கும் அவலத்தோடு, 'ஆசிய ஜோதி'யில் குழந்தையை இழந்த தாயின் வருத்தத்தினை வடித்துள்ளார். 'சுஜாதை' என்ற தாயின் மகவினை அரவு தீண்டி அக்குழந்தை இறந்து விடுகின்றது. சுஜாதை நெஞ்சிற் கிடத்தியும், நித்திரை நீக்கிக் காத்தும், விஞ்சு தவத்தினில் பெற்றும், பின்னைப் பிரிந்தறியாமலும், நிழலாய் இருந்த ஒரேபிள்ளை பிரிந்து விட்டதனைப் பொறுக்க இயலவில்லை. ஆற்றொணாத் துயரம் வந்து அவளை அலைக்கழிக்கின்றது. அவல ஓலம் அவள் அடி மனத்திலிருந்து பொங்கிப் பீறிடுகின்றது. புத்த பகவானிடத்தில் சென்று தன் மகவை உயிர்ப்பிக்குமாறு வேண்டி நிற்கும்போது, குழந்தையின் நிலையினை ஆறாத் துயரத்தோடு எடுத்துரைக்கின்றாள் சுஜாதை:

'வாய்முத்தம் தாராமல் மழலையுரை யாடாமல்
சேய்கிடத்தல் கண்டெனக்குச் சிந்தைதடு மாறுதையா!

.............................................

'பின்னி முடிச்சிடம்மா! பிச்சிப்பூ சூட்டிடம்மா!'
என்னும் மொழிகளினி எக்காலம் கேட்பனையா?
நெஞ்சிற் கவலையெல்லாம் நிற்காமல் ஓட்டும் அந்தப்
புஞ்சிரிப்பைக் காணது புத்திதடு மாறுதையா!
இட்டளைந்து கூழைஎனக்கு இன்னமுதம் ஆக்கியகை
கட்டழிதல் கண்டுமனம் கறங்காய்ச் சுழலுதையா!
சோலைப் பசுங்கிளிகள் தோழனையும் காணமல்
நாலு திசைகளிலும் நாடித் திரியாவோ?

..................

**சித்திரத் தேரும் சிறுபறையும் கூடிஎனைப்**
**பித்திலும் பித்தி பெரும்பித்தி ஆக்குதையா!'**

இந்தப் பாடல்களைப் படிக்கும் போது நம் கண்களில் நாமறியாமல் நீர் பெருக்கெடுக்கின்றது.

ஓசை நயமே உயர் கவிதையின் இனிமைக்குதவும் கருவியாகும். கவி மணியின் பாடல்களில் எளிய சந்தநயம் யாண்டும் விளங்கக் காணலாம். சான்றாக,

**' வட்ட மாயுன் கழுத்திலே**
**வான வில்லை ஆரமாய்**
**இட்ட மன்னர் யாரம்மா?**
**யான் அறியக் கூறம்மா!**

.....................

**' பவழக்காரத் தெருவிலே**
**பவழங்காண வில்லையாம்;**
**எவர்எடுத்துச் சென்றனர்?**
**எனக்கறிந்து சொல்வையோ'**
**—மலரும் மாலையும் : கிளியை அழைத்தல் : 3, 5**

'பசுவும் கன்றும்' என்னும் பாடல் எளிமையின் இமயம் எனலாம். அன்பில் அடித்தளம் அமைத்து, எளிமையில் இனிமை கண்டு, கருத்தில் உயர்வு கொண்டு, கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்ச் சொற்கள் துலங்கி, உயிரோட்டம் ஊட்டி நிற்கும் கவிதை இனிமையெலாம் இப்பாடலில் விளங்கக் காணலாம்.

**'தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு—அங்கே**
**துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி**
**'அம்மா' என்குது வெள்ளைப்பசு—உடன்**
**அண்டையில் ஓடுது கன்றுக்குட்டி**

**நாவால் நக்குது வெள்ளைப்பசு—பாலை**
**நன்ருய்க் குடிக்குது கன்றுக்குட்டி**
**'முத்தம் கொடுக்குது வெள்ளைப்பசு—மடி**
**முட்டிக் குடிக்குது கன்றுக்குட்டி'**

'எனது சுகதுக்கங்கள்' என்னும் கவிதை உயரிய ஒரு படைப்பு; அருமையான தத்துவ விளக்கம்:

**'வான வெளிதனிலே—கவிந்தெழு**
**மாலைப் பொழுதினிலே**
**கூனப் பிறைவரவே—சிவன்திருக்**
**கோலம் தெளிவேன் அடி'**

என்று மகிழ்ந்த கவிமணியின் இதயம்,

**காவுயர் சோலையிலே—பசுவோடு**
**கன்று களிக்கையிலே,**
**தாவிப் புலிவிழவே—வருந்துயர்,**
**தாங்க முடியவில்லை'**

என்று ஓலமிடுகின்றது. கனிவு நிறைந்த உள்ளம் கவிமணியின் உள்ளம்.

'வாழ்க்கைத் தத்துவங்கள்' என்ற பகுதியில், ஒருவர் உயர்வுக்கு அவர் செயல்களே காரணமாய் அமைகின்றன என்னும் அரிய உண்மையினை அழகுறப் புலப்படுத்தியுள்ளதனைக் காணலாம்.

**'உள்ளந் தேறிச் செய்வினையில்**
**ஊக்கம் பெருக உழைப்போமேல்,**
**பள்ளம் உயர்மே டாகாதோ?**
**பாறை பொடியாய்ப் போகாதோ?'**

இவ்வாறு கூறுவதனோடு கவிஞர் நில்லாமல், இறைவனது ஆணையினை அறச்சட்டத்தினை—எவர்

ஒருவர் மதித்து நடக்கின்ருரோ அவரே இன்பமடைவர் என்னும் உண்மையினை,

**' கால நதியின் கதியதனில்**
**கடவுள் ஆணை காண்பீரேல்**
**ஞாலமீது சுகமெல்லாம்**
**நாளும் அடைந்து வாழ்வீரே!'**

என்னும் கவிதை புலப்படுத்துகிறது.

பெண்ணின் பெருமையினைப் பேசாத கவிஞர் இலர். பெண்மைக்கு அவர் தரும் மதிப்பே அவர்தம் கவிதைப் படைப்புகளுக்கு உரமூட்டுகிறது. பெண்ணினைப் போற்றுவது பண்பினை—அன்பினை—தாய்மையினை மென்மையினைப் போற்றுவதாகும். இதனை நன்குணர்ந்தவர் கவிமணி. உடலும் உள்ளமும் மென்மை நிறைந்த அவர் பெண்மையினைப் பின் வருமாறு போற்றி புகழ்ந்துள்ளார்:

**' மங்கைய ராகப் பிறப்பதற்கே—நல்ல**
**மாதவஞ் செய்திட வேண்டும் அம்மா!**
**பங்கயக் கைநலம் பார்த்தலவோ—இந்தப்**
**பாரில் அறங்கள் வளரும் அம்மா!'**

உள்ளத்திற்கு உறுதியான பண்பாடுகளை வலியுறுத்தி வந்த கவிஞர், உடல் நலம் பேணலையும் வற்புறுத்தியுள்ளார். 'உடலில் உறுதி உடையவரே உலகில் இன்பம் உடையவராம்' என்றும், 'தூய காற்றும் நன்னீரும், சுண்டப் பசித்த பின் உணவும் நோயை ஓட்டி நூறு வயதுவரை வாழவைக்கும்' என்றும் குறிப்பிடுகின்ருர் கவிஞர்.

பொதுவுடைமைத் தத்துவம் புகழ் பூத்து நிற்கும் நேரமிது. பொதுவுடைமைப் பூங்காவாக நாடு பூத்துக் குலுங்கிப் பொலிவு பெறவேண்டும் என்று எண்ணுவோர் எண்ணிக்கை மிகுதி. தொழிலாளியின் முறையீடாகக் கவிஞர் அவர்கள்,

'பாடு படுபவர்க்கே—இந்தப்
பாரிடம் சொந்தமையா!
காடு திருத்திநல்ல—நாடு
காண்ப தவரலவோ?'

'மந்திர மோதுவதால் எங்கும்
வயல்வி ளைவதுண்டோ?
தந்திரப் பேச்சாலே—அரிசி
சாத மாயிடுமோ?'

'கட்டும் ஆடையாகப்—பருத்தி
காய்த்தளிப்ப துண்டோ?
சட்டி பானையெலாம்—மண்ணில்
தாமே எழுவதுண்டோ?'

என்று கூறி, 'உலகம் வாழ வேண்டுமானால், தொழிகல்ள் வளர வேண்டும்' என்றும், 'ஏழையென் றொருவன் உலகில் இருத்தலாகாது' என்றும் கூறுகின்றார்.

தமிழிசையில் தணியாத பற்றுடையவர் கவிமணி. 'தமிழிற்கு இசையுண்டோ?' எனச் சிலர் பொல்லாங்கு பேச, புயலெனச் சீறியெழுந்த அண்ணாமலை அரசர் சென்னையில் தமிழ் இசைச்சங்கம் கண்டார். தமிழிசை தழைத்தது. அங்கிலையில் கவிமணி பின்வரும் பாடலை எழுதினார்:

'வெந்தழல் நீரா மால்; வெள்ளெலும்பு பெண்ணுமால்;
வந்தமத வேழம் வணங்கிடுமால்—சந்தமெழப்
பாடுவார் உள்ளுருகிப் பாடும் தமிழிசைக்கு
நீடுலகில் உண்டோ நிகர்?'

இவ்வெண்பாவில் கவிமணியின் ஆழ்ந்த தமிழ்ப் பற்றுப் புலனுதல் காண்க.

கீர்த்தனங்களையும் எழுதிக் கீர்த்தி கொண்டவர் கவிமணி; தமிழிசை இயக்கத்திற்கு இவர் செய்த

தொண்டு சிறப்பிடம் வகிக்கத் தக்கது, சான்றாக ஒரு பாடலைக் காண்போம்.

**தில்லையப்பன்**

இராகம்—கரகரப்ரியா] [தாளம்—ஆதி

*பல்லவி*

**சொன்ன தெல்லாம் மறந்தாரோ? என்னைச்**
**சோதனை செய்யத் துணிந்தாரோ?**

*அநுபல்லவி*

**செந்நெற் கழனி சூழும்**
**தில்லைப் பதியார் அன்று**
**கன்னம் குழியமுத்தம்**
**கனிந்து கனிந்தளித்துச் (சொன்ன)**

*சரணம்*

**வருவார் வருவார்என்று நித்தம்—வரும்**
**வழிமேல் விழியாய் நின்றேன், தோழி!**
**ஒருவாரம் ஒருமாதம்**
**ஒருவருஷம்போச்சே**
**ஒருத்தி கிறுக்கி என்றிவ்**
**வூரும் சிரிக்க லாச்சே (சொன்ன)**

அடுத்து, கவிமணியினைச் சிறந்த மொழி பெயர்ப்புக் கவிஞர் எனலாம். 'உமார்கய்யாம் பாடல்கள்' இக் கூற்றிற்கு நல்ல சான்று பகரும். நிலையாமையின் நிலையினை,

**' புலர்ந்து விடியும் பொழுதினிலே**
**பொய்கைக் கரையஞ் சோலையிலே,**
**மலர்ந்து நல்ல மணம்வீசி**
**மகிழும் மலர்கள் ஆயிரமாம்;**
**உலர்ந்து வாடிச் சேற்றினிலே**
**உதிரு மவையும் ஆயிரமாம்;**
**கலந்து உலக வாழ்வை இதில்**
**கண்ணுற் கண்டு தெளிவாயே '**

**—உமர்கய்யாம் பாடல்கள் : 4**

'மலரும் மலர்கள் வாடலும், இவ்வாழ்வு நிலையா தோடலும் உலகம் கண்ட உண்மைகள்' என்று உரைத்திடும் கவிமணி, கண்ணிற்காணுச் சொர்க்கம் கனவென்றும், நண்ணும் கைப்பொருள்தனை நம்பி யிருக்க வேண்டுமென்றும், நண்ணாத பொருளை நச்சி நாளும் எண்ணி எண்ணி ஏங்கி அலைவதில் பயனில்லை என்றும் அறிவுறுத்துகின்றார்.

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்ற தத்து வத்தினை,

**நாடும் வெற்றி தோல்விகளெந்**
**நாளும் பந்து விரும்பிடுமோ?**
**ஆடு மவரின் அடிக்கேற்ப**
**அங்கும் இங்கும் அலைந்திடுமால்;**
**நீடும் இந்த நிலமீது**
**நின்னைத் தூக்கி இட்ட அவன்**
**ஈடு செய்வான் இரங்கிடுவான்**
**யாவும் அறிவான், நன்கறிவான்'**
**—உமார்கய்யாம் பாடல்கள் : 51**

என்னும் பாடலில் விளக்கியுள்ளார்; விதியின் வலிமை யினை,

**' எழுதிச் செல்லும் விதியின்கை**
**எழுதி எழுதி மேற்செல்லும்**
**தொழுது கெஞ்சி நின்றாலும்**
**சூழ்ச்சி பலவும் செய்தாலும்,**
**வழுவிப் பின்னால் நீங்கியொரு**
**வார்த்தையேனும் மாற்றிடுமோ?**
**அழுத கண்ணீ ராறெல்லாம்**
**அதிலோர் எழுத்தை அழித்திடுமோ?'**
**—உமார்கய்யாம் பாடல்கள் : 53**

என்று கூறி,

**இந்நாள் இனிய நாளானால்**
**இறந்த நாளுக்கு இரங்குவதேன்?**
**பின்னாள் எண்ணி நடுங்குவதேன்?'**

என்று வாழும் நெறியினை வடித்துரைக்கின்றார்.

உமார்கய்யாம் பாரசீக மொழியில் பாடிய பாடலைப் 'பிட்ஜிரால்ட்' என்பவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். கவிமணி, மூலத்தையும் விஞ்சும் வகையில் கவிதை புனைந்து வாகை சூடியுள்ளார் என்பதனை, இரு கவிதைகளையும் ஒப்பிட்டுக் காண்பவர் ஒப்புக் கொள்வர்

**ஆங்கிலம்:**

Herewith a loaf of bread beneath the bough
A flask of wine, a book of verse–and Thou
Besides me singing in the wilderness
and wilderness is Paradise now.

**கவிமணியின் தமிழ் மொழிபெயர்ப்பு:**

**'வெய்யிற் கேற்ற நிழலுண்டு;**
**வீசும் தென்றல் காற்றுண்டு;**
**கையில் கம்பன் கவியுண்டு;**
**கலசம் நிறைய மதுவுண்டு;**
**தெய்வ கீதம் பலவுண்டு;**
**தெரிந்து பாட நீயுண்டு;**
**வையந் தருமிவ் வனமின்றி**
**வாழும் சொர்க்கம் வேறுண்டோ?'**

இது, மூலத்தையும் விஞ்சிய மொழி பெயர்ப்பு என்பதோடு, தமிழ் மரபிற்கு இயைந்த முறையில், தமிழ்ப் பண்பாட்டின் வழியில் மலர்ந்த கவிதை என்பதிலும் ஐயமில்லை.

இறுதி இரண்டு பாடல்களில் உமார்கய்யாமின் வாழ்க்கைத் தத்துவம் உணர்த்தப்படுகிறது.

**' ஆழி சூழும் உலகாளும் அரச ஞக வேண்டுமெனில்,**
**வாழும் வாழ்வில் உன்னையும் மறந்து வாழ வேண்டுமடா!**
**ஏழை யாகி எளியவரின் எளிய ஞக வேண்டுமடா!**
**தோழ ஞகி யாவர்க்கும் தொண்ட ஞக வேண்டுமடா!'**

**' இல்லாப் பொருளுக் கேங்காமல்**
**இருக்கும் பொருளும் எண்ணுமல்**
**எல்லாம் வல்ல எம்பெருமான்**
**இரங்கி அளிக்கும் படிவாங்கி**
**நல்லார் அறிஞர் நட்பையும்**
**நாளும் நாளும் நாடுவையேல்,**
**நில்லா உலகில் நிலைத்தசுகம்**
**நீண்டு வளரும் நிச்சயமே.'**

**—உமார்கய்யாம் பாடல்கள் : 112–113**

'ரசிகமணி டி. கே சி.' அவர்கள், "தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் பாடல்கள் தமிழ் மக்களுக்குக் கிடைத்த பெருஞ்செல்வம்; அரிய செல்வம்; தெவிட்டாத அமிர்தம்; ஆயுள் நாள் முழுதுமே தமிழ் மகன் தன்னுடன் வைத்துக்கொண்டு அனுபவிக்க வேண்டிய வாடாத கற்பகப் பூச்செண்டு". எனப் புகழ்ந்து, கவிமணி அவர்களைக் 'கண்ணுரக் காண ஒரு கவிஞர்' என்ருர்.

**'தேசிக விநாயகத்தின் கவிப்பெருமை**
**தினமும் கேட்பதுஎன் செவிப்பெருமை!'**

என்றபடி, கவிமணியின் கவிதையில் நாமும் திளைப் போமாக!

## 6. பாவேந்தர் பாரதிதாசனார்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், கி. பி. 1891-ஆம் ஆண்டு புதுச்சேரியில் பிறந்து, இருபதாம் நூற்றாண்டில் இணையிலாத கவிஞராய்த் திகழ்ந்தவர் பாவேந்தர் பாரதிதாசனார். 'கனக சுப்புரத்தினம்' என்ற இயற்பெயர் கொண்ட இவர், பாரதியாரின் தொடர்பால், அவர்பால் தாம் கொண்ட மதிப்புக் காரணமாகப் பாரதிதாசனார் என்று தம் பெயரினை மாற்றியமைத்துக் கொண்டார். இளமையிலேயே தமிழிலும் பிரஞ்சு மொழியிலும் புலமை பெற்றுத் திகழ்ந்த பாரதிதாசனார், தம் பதினெட்டாம் வயதிலேயே தமிழாசிரியர் பணியினைத் தொடங்கினார். தொடக்கக் காலத்தில் பள்ளியிலும், பின்னர் அரசாங்கக் கல்லூரியிலும் தமிழ்ப்பணியினைத் திறம்பட ஆற்றிய இவர், இளமைப் பருவத்திலேயே சிறுசிறு பாடல்கள் புனைவதுண்டு. ஒருநாள் நண்பர் ஒருவரின் திருமணத்திற்குப் போயிருந்தார் நம் கவிஞர். விருந்திற்குப்பின் பாரதியாரின் நாட்டுப் பாடல்களை நயமுறப் பாடினார். பாரதியாரும் அவ்விருந்துக்கு வந்திருந்ததை நம் கவிஞர் அறியார். அப்பாடலே கவிஞரைப் பாரதியாருக்கு அறிமுகப்படுத்தி வைத்தது. பாரதியார் 'ஒரு பாடலைப் பாடு' என்று சொல்ல, சற்றும் தயங்காமல் கவிஞர் அவர்கள்,

'எங்கெங்குக் காணினும் சக்தியடா!—தம்பி
ஏழு கடல் அவள் வண்ணமடா!—அங்குத்
தங்கும் வெளியினிற் கோடியண்டம்!—அந்தத்
தாயின்கைப் பந்தென ஓடுமடா!—ஒரு
கங்குலில் ஏழு முகிலினமும்—வந்து
கர்ச்சனை செய்வது கண்டதுண்டோ:—எனில்

மங்கை நகைத்த ஒலியிலெலாம்—அவள்
மந்த நகையங்கு மின்னுதடா!
காளை ஒருவன் கவிச்சுவையைக்—கரை
காண நினைத்த முழுநினைப்பில்—அன்னை
தோளசைத் தங்கு நடம்புரிவாள்—அவன்
தொல்லறி வாளர் திறம்பெறுவான்:—ஒரு
வாளைச் சுழற்றும் விசையினிலே—இந்த
வைய முழுவதும் துண்டுசெய்வேன்!—என
நீள இடையின்றி நீநினைத்தால்—அம்மை
நேர்படு வாள் உன்றன் தோளினிலே!'

என்னும் பாடலைப் பாடினுர். இந்தப் பாடலின் அழகும் பொருளும் எல்லார் மனத்தையும் கவர்ந்தன. இப்பாடல், பாரதியாராலேயே, 'ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரின் கவிதா மண்டலத்தைச் சார்ந்த—கனக சுப்புரத்தினம் எழுதியது' என்னும் குறிப்புடன், சென்னை 'சுதேசமித்திரன்' இதழுக்கு அனுப்பப் பட்டது. மேலும், இப்பாடல் பல பத்திரிகைகளிலும் வெளிவந்தது. இந்தப் பாடலே பாவேந்தர் பாரதி தாசனுரைத் தமிழகத்திற்கு—கவிதை உலகிற்கு அறி முகப்படுத்தியது.

மேலைநாட்டிலே 'ஜான்சன்' என்னும் பேரறிஞரைக் குறிப்பிட்டுக் 'கோல்டுசுமித்து' என்னும் கவிஞர் பேசும் பொழுது, "அவர் தொடாத துறை ஒன்றுமில்லை; தொட்ட துறைகளை அழகுபடுத்தாமல் விட்டதில்லை" என்றுர் அருமையான கருத்தினை வெளியிட்டார். இதுபோன்று பாரதிதாசனுர் கவிதைக்கலை நன்கு கைவரப் பெற்றவர். கலைகளிலேயே நுண்மையான தொரு கலை கவிதைக் கலையாம். அக்கவிதைக் கலை யிலே தந்நேரில்லாத் தமிழ்ப்பெருங் கவிஞராய்ப் பாரதிதாசனுர் உலவினுர். அவர் எழுதுகோல் கவிதை யின் வண்ணத்தினை யெல்லாம் கவினுறக் காட்டியது.

இயற்கை, காதல், பெண்கள், சமூகம், நாடு, மக்கள், மொழி, இனம், தொழிலாளர் உள்ளிட்ட எல்லாத் துறைகளிலும் அவர் சிந்தனை படர்ந்தது. அவ்வெண்ணத்தின் விளைவாகக் கவிதைப் பூங்காவில் வண்ண வண்ண மலர்கள் நித்த நித்தம் பூத்துக் குலுங்கின.

"எனக்குக் குயிலின் பாடலும், மயிலின் ஆடலும், வண்டின் யாழும், அருவியின் முழவும் இனிக்கும்; பாரதிதாசன் பாட்டும் இனிக்கும்" என்று தமிழ்ப் பெரியார் 'திரு. வி. க' அவர்களும், "பாரதிதாசன் கவிதையில் வேகம் உண்டு; விடுதலைத்தாகம் உண்டு; பண்பும் உண்டு; பயனும் உண்டு" என்று பேராசிரியர் 'ரா. பி. சேதுப்பிள்ளை' அவர்களும், "பாரதியார் சொல்லும் வீரத்தமிழ்ச் சொல் இன்பத்தைப் பாரதிதாசன் பாடல்களில் காணலாம்", என்று பாரதியாருடன் பழகிய பெரியார் 'பரலி. சு நெல்லையப்பரும்', 'அறிவுக் கோயிலைக் கட்டி அதில் நம்மைக் குடியேற்ற விரும்புகின்ற பேரறிஞர் பாரதிதாசன்' என்று புதுமைப் பித்தனும், "பாரதிதாசனின் தமிழ்ப்பற்றுக்கு எல்லையில்லை; அவர் தம் பாடல்களைப் படிக்கின்ற அந்நியனும் தமிழனாகி விடுவான்," என்று டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்களும், "பாரதிதாசனுருடன் பழகுவதன்மூலம் 'பாரதியைப் பார்க்கவில்லையே! அவருடன் பழகவில்லையே!' என்ற குறை எனக்கு நிவர்த்தியாயிற்று" என்று, 'கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி' அவர்களும், பாரதிதாசனுரைப் பற்றியும் அவர் தம் கவிதை நலன் குறித்தும் கருத்துரை வழங்கியுள்ளார்கள்.

**'விடுதலை எல்லாம் கிளர்ச்சியால் வெல்லும்**
**விடுதலை வேட்கை வெறிகொண்ட வீரன்'**

என்று நாமக்கல் கவிஞர் 'வெ. இராமலிங்கம் பிள்ளை' அவர்கள் கவிஞர் அவர்களைப் பாராட்டியுள்ளார்.

சங்க இலக்கிய மரபு, 'அகம், புறம்' என்ற இரு துறைகளைத் தழுவியதாகும். இயற்கையின் பின்னணியிலே மக்கள் வாழ்வினைத் திறம்படச் சங்கக் கவிஞர்கள் இலக்கியமாக வடித்துத் தந்துள்ளார்கள். பின்னணியினைத் துறந்து வாழாத ஓவியம் போன்று, இயற்கையின் பின்னணியில் பொலிந்த சங்கப் பாடல்கள் கவிஞர்தம் நெஞ்சைப் பெரிதும் கவர்ந்திருக்க வேண்டும். மேலை நாட்டிலே 'வேர்ட்ஸ்வொர்த்து' என்னும் கவிஞரைக் குறிப்பிடும் பொழுது, இயற்கையே எழுதுகோல் பிடித்துக் கவிஞருக்குப் பதிலாகக் கவிதை புனைந்தது' (Nature itself wrote for him) என்பர். இக்கூற்று நம் கவிஞரைப் பொறுத்த வரையில் முற்றும் பொருந்துவதாகும்.

"இயற்கை அனைத்தும் அழகே. அந்த அழகு செந்தாமரை என்றும், நிலவென்றும், கதிரென்றும் சிரித்தது. காணும் பொருளிலெல்லாம் அழகைக் காணவும் கண்டவாறு தாமே சொல்லோவியம் தீட்டவும் திறம் பெறுதல் வேண்டும். தமிழர்கள் பிறமொழி, தமிழ் மொழி நூல்களில் பார்த்தபடியே எழுதும் நிலை தீர வேண்டும். அதற்கு இச்சிறு நூல் இயற்றிய வாயிலாக நான் இதை அறிஞர்க்கு நினைவுறுத்துகிறேன்" என்று கவிஞர் 'அழகின் சிரிப்பு' என்னும் நூலின் முன்னுரையில் சிந்தனையோடு குறிப்பிட்டுள்ளனர்.

'அழகுப் பொருள்கள் என்றும் அழியாத இன்பம் நல்கும்' (A thing of beauty is joy for ever) என்று கீட்ஸ்' என்னும் கவிஞர் பெருமான் குறிப்பிட்டார்.

பாரதிதாசனுருக்கும் அழகே கவிதை தருகின்றதாம்:

**'காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்**
**கடற்பரப்பில் ஒளிப்புனலில் கண்டேன்; அந்தச்**
**சோலையிலே மலர்களிலே தளிர்கள் தம்மில்**
**தொட்ட இடம் எலாம்கண்ணில் தட்டுப்பட்டாள்!**

**மாலையிலே மேற்றிசையில் இலகு கின்ற**
**மாணிக்கச் சுடரிலவள் இருந்தாள்! ஆலஞ்**
**சாலையிலே கிளைதோறும் கிளியின் கூட்டந்**
**தனில் அந்த அழகென்பாள் கவிதை தந்தாள்'**

**—அழகின் சிரிப்பு : அழகு: 1**

இவ்வாறு இளம் பரிதியிலும், கடற் பரப்பிலும், ஒளிப்புனலிலும், சோலையிலும், மலர்களிலும், தளிர் களிலும், மாலை மறையும் மாணிக்கச் சுடரிலும், ஆல மரத்தின் கிளையிலும், கிளையின் கிளியிலும் பொலி யும் அழகு, கவிஞர்தம் நெஞ்சில் உணர்ச்சி ஊற்றினைப் பெருக்கி உயர்கவிதைகளை உருவாக்கிற்று. 'அழகு தனைக் கண்டேன், நல்லின்பம் கண்டேன்' என்று அழகு தரும் அமைதியான இன்பத்தினைப் பேசும் கவிஞர், தாம் பெற்ற பேற்றினை நமக்கும் நல்க நல்லுளம் கொண்டு பின்வருமாறு பாடுகின்றார்:

**'பசையுள்ள பொருளிலெலாம் பசைய வள்காண்!**
**பழமையினாற் சாகாத, இளைய வள்காண்!**
**நசையோடு நோக்கடா எங்கும் உள்ளாள்!**
**நல்லழகு வசப்பட்டால் துன்ப மில்லை'**

**—அழகின் சிரிப்பு : அழகு: 3**

இப்பாடலடிகளைக் 'கீட்ஸின்' கூற்றோடு பொருத் திக் காண்க.

கடலலைகள் புரண்டு எழுந்து எழுந்து விழுந்து விழுந்து அழிவதனை,

**'நேரிடும் அலையோ கல்வி நிலையத்தின் இளைஞர்போலப்**
**பூரிப்பால் ஏறும்; வீழும் : புரண்டிடும்; பாராய் தம்பி!**

**—அழகின் சிரிப்பு : கடல் : 1**

என்று இளைஞர் தம் எழுச்சிக்கும் வீழ்ச்சிக்கும ஒப் பிட்டுப் பேசுகின்றார்.

தென்றலைப் பற்றிப் பெருமிதத்தோடு கவிஞர் பேசுகின்றார்: 'தென்னாட்டுப் பொதுமக்களின் தனிச் சொத்துத் தென்றல்' என்கிறார்.

**' தென்னாடு பெற்ற செல்வத் தென்றலே உன் இன்பத்தைத்**
**தென்னாட்டுக் கல்லால் வேறே எந்நாட்டில் தெரியச்**
**செய்தாய்?**

**—அழகின் சிரிப்பு: தென்றல்: 3**

அடுத்து எழில் பெற்ற குன்றத்தினை ஏற்றமுற வருணிக்கும் கவிஞர் கைவண்ணத்தினைக் கீழே காண்க:

**' நீலமுக் காட்டுக் காரி நிலாப்பெண்ணாள், வற்றக் காய்ந்த**
**பாலிலே உறைமோர் ஊற்றிப் பருமத்தால் கடைந்து பானை**
**மேலுற்ற வெண்ணெய் அள்ளிக் குன்றின்மேல் வீசி விட்**
**டாள்!**
**ஏலுமட் டுந்தோ ழாநீ எடுத்துண்பாய் எழிலை எல்லாம்!'**

**—அழகின் சிரிப்பு: குன்றம்: 9**

எழிலை எடுத்துண்பதற்கு எல்லாரையும் கவிஞர் 'சேர வாரும் செகத்தீரே' என்று தாயுமானவர் குரலிலே விளிக்கின்றார்.

ஆற்று வெள்ளத்தில் ஆதவன் ஒளி உமிழ்கின்றான். இது நாம் காணும் காட்சிதான். ஆயினும், கவிஞரின் கண்ணிற்பட்டு விட்ட அக்காட்சி கவினுற விரிகிறது, கவிஞரின் மணம் கமழும் பாடலாக:

**" இருகரை ததும்பும் வெள்ள நெளிவினில் எறியும் தங்கச்**
**சரிவுகள்! துறையோ முத்துத் தடுக்குகள்! சுழன்மீன்**
**கொத்தி**

**மரகத வீச்சு! நீரில் மிதக்கின்ற மரங்க ளின்மேல்**
**ஒரு நாரை வெண்டா ழம்பூ உவப்புக்கோ உவமை இல்லை'**

**—அழகின் சிரிப்பு: ஆறு: 7**

செந்தாமரை மலர் எவரையும் எளிதில் கவர்ந்து தன்பால் பார்வையை இழுக்க வல்லது. மலர்களின் மகிழ்ச்சிப் பொலிவினை மணக்கும் தமிழில் கவிஞர் கூறுவார்:

**'விண்போன்ற வெள்ளக் காடு மேலெல்லாம் ஒளிசெய் கின்ற**
**வெண்முத்தங் கள்கொழிக்கும் பச்சிலைக் காடு மேலே**
**மண்ணுளார் மகிழும் செந்தா மரைமலர்க் காடு; நெஞ்சைக்**
**கண்ணுளே வைக்கச் சொல்லிக் கவிதையைக் காணச்**
**சொல்லும்.**

**—அழகின் சிரிப்பு : செந்தாமரை: 5**

இம் மட்டோடு கூறிக் கவிஞர் நிறுத்திஞரில்லை. 'ஆயிரம் பெண்கள் நீரில் ஆர்ப்பாட்டம் போலும் பூக்கள்' என்று அழகுறக் குறிப்பிட்டுள்ளார்.

நீலவான் மறைக்கும் ஆலமரத்தை அழகுற வருணித்த கவிஞர், அம் மரத்தில் வாழும் குரங்கின் அச்சத்தினைக் குறிப்பிடும் போக்கு நம்மைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்கவைக்கின்றது. எளிய பாட்டு; எனவே, பாடலையே படித்துச் சுவைப்போம்:

**'கிளையினிற் பாம்பு தொங்க**
**விழுதென்று: குரங்கு தொட்டு**
**விளக்கினைத் தொட்ட பிள்ளை**
**வெடுக்கெனக் குதித்த தைப்போல்**

**கிளைதொறும் குதித்துத் தாவிக்**
**கீழுள்ள விழுதை யெல்லாம்**
**ஒளிப்பாம்பாய் எண்ணி எண்ணி**
**உச்சிபோய்த் தன்வால் பார்க்கும்**
**ஆலினைக் காற்று மோதும்;**
**அசைவனே எனச்சி ரித்துக்**
**கோலத்துக் கிளைகு லுங்க**
**அடிமரக் குன்று நிற்கும்!**
**தாலாட்ட ஆளில் லாமல்**
**தவித்திட்ட கிளைப்புள் ளெல்லாம்**
**கால்வைத்த கிளைகள் ஆடக்**
**காற்றுக்கு நன்றி கூறும்!'**

இவ்விரு பாடல்களும் கவிதையின் சிறந்த பெற்றியினை எல்லாம் சிறக்க உணர்த்தி நிற்கின்றன. 'ஆலினைக் காற்று மோதும், அசைவனே எனச் சிரித்துக் கோலத்துக் கிளைகுலுங்க அடிமரக் குன்று நிற்கும்'' ஆகா! என்ன அழகான கற்பனை! என்ன அழகான வண்ணச் சித்திரம்! 'தாலாட்ட ஆளில்லாமல் தவித்திட்ட கிளைப்புள் எல்லாம் கால் வைத்த கிளைகளாடக் காற்றுக்கு நன்றி கூறும்', என்ன காட்சி ஓவியம்! என்ன அரிய பண்பாடு! பாவேந்தர் பாரதிதாசனர் ஒருவரே இவ்வாறு கவிதை புனைய இயலும்! அட்டியில்லை அதற்கு.

புறாக்களின் பன்னிறத்தைப் படம் பிடித்துக் காட்டும் கவிஞரின் கவிதையில் எத்தனை வண்ணங்கள்! அடடா!

**'இருநிலா இணைந்து பாடி இரையுண்ணும்! செவ்வி தழ்கள்**
**விரியாத தாம ரைபோல் ஓர்இணை! மெல்லி யர்கள்**
**கருங்கொண்டை! கட்டி ஈயம் காயம்பூக் கொத்து! மேலும்**
**ஒருபக்கம் இருவா ழைப்பூ! உயிருள்ள அழகின் மேய்ச்சல்!'**

**—அழகின் சிரிப்பு: புறாக்கள்: 7**

கருங்குரங்குகளின் அகவாழ்வினைக் கூறிக் கற்பொழுக்கத் திண்மையின் எல்லையினை வற்புறுத்தியுள்ளார். 'கடுந்தோட்கரவீரன்' எனும் சங்கப் புலவர் (குறுங்: 66). இங்குக் கவிஞர் புறாவின் ஒழுக்கத்தினைக் கூறுமுகத்தான் மனித சமுதாயத்தின் களைகளுக்கு மாற்றுக் கூறி அறிவுரை புகட்டுகின்றார். அப்பாடல் வருமாறு:

'ஒருபெட்டை தன் ஆண் அன்றி
வேறொன்றுக் குடன்ப டாதாம்;
ஒருபெட்டை மத்தாப் பைப்போல்
ஒளிபுரிந் திடநின் றாலும்
திரும்பியும் பார்ப்ப தில்லை
வேறொரு சேவல்! தம்மில்
ஒருபுறா இறந்திட் டால்தான்
ஒன்றுமற் றொன்றை நாடும்'

—அழகின் சிரிப்பு: புறாக்கள்: 3

இன்னும், புறாக்கள் மனிதர்க்குப் பாடம் புகட்டுவதாகவும், அன்புக்கோர் எடுத்துக்காட்டாவதாகவும் கவிஞர் பாடல் புனைந்துள்ளார்.

கிளியினைக் கவிஞர் வருணித்துள்ள பாடலைப் படிக்கும்பொழுது, கோலக் கிளியே நம் கண்முன்னர் வந்து நிற்கின்றது.

'இலவின்காய் போலும் செக்கச்
செவேலென இருக்கும் மூக்கும்
இலகிடு மணத்தக் காளி
எழில்ஒளி செங்காய்க் கண்ணும்,

நிலே ஒளி தழுவும் மாவின்
நெட்டிலே வாலும், கொண்டாய்!
பலர் புகழ் நின்ற பச்சைப்
பசுங்கிளி !வாராய்!வாராய்!'
—அழகின் சிரிப்பு:கிளி:1

கிளியின் இருவகைப் பேச்சினைக் குறிப்பிடும் போது, 'கனியிருப்பக் காய் கவரும்' மனிதர் மடைமையினைக் கவிஞர் சாடுகின்றார்:

'காட்டினில் திரியும் போது
கிரீச்சென்று கழறு கின்றாய்;
கூட்டினில் நாங்கள் பெற்ற
குழந்தைபோல் கொஞ்சு கின்றாய்!
வீட்டிலே தூத்தம் என்பார்
வெளியிலே பிழைப்புக் காக
ஏட்டிலே தண்ணீர் என்பார்
உன்போல்தான் அவரும் கிள்ளாய்!
—அழகின் சிரிப்பு:கிளி:7

சிற்றூர்க்கும் பேரூர்க்குமுள்ள வேறுபாட்டினைக் கவிஞர் பின் வருமாறு கூறுவார்:

'இயற்கையின் எழிலே யெல்லாம்
சிற்றூரில் காண ஏலும்:
செயற்கையின் அழகை யெல்லாம்
பட்டணம் தெரியக் காட்டும்;
முயற்சியும் முழுது ழைப்பும்
சிற்றூரில் காணு கின்றேன்;
பயிற்சியும் கலேயு ணர்வும்
பட்டணத் திற்பார்க் கின்றேன்!'
—அழகின் சிரிப்பு:பட்டணம்:8

இயற்கையாக நிகழும் நிகழ்ச்சியின்மேல் கவிஞன் தன் குறிப்பினை ஏற்றிக் கூறுதல் 'தற்குறிப்பேற்ற

வணி' என்பர். கவிஞர் நீண்ட கழுத்துடைய மயிலோடு பேசும் பேச்சில் நகைச்சுவை கொப்பளிப்பதனைக் காணலாம். ஊடே ஓர் உளவியல் உண்மையையும் அவர் உணர்த்துகின்றார்.

**நீயும் பெண்களும் நிகர்என் கிறார்கள்:**
**நிசம் அது! நிசம்! நிசம் நிசமே யாயினும்**
**பிறர்பழி தூற்றும் பெண்கள் இப் பெண்கள்;**
**அவர்கழுத்து உன் கழுத் தாகுமோ சொல்வாய்!**
**அயலான் வீட்டில் அறையில் நடப்பதை**
**எட்டிப் பாரா திருப்ப தற்கே**
**இயற்கை அன்னை, இப்பெண் கட்கெலாம்**
**குட்டைக் கழுத்தைக் கொடுத்தாள்! உனக்கோ**
**கறையொன் றில்லாக் கலாப மயிலே;**
**நிமிர்ந்து நிற்க நீள்கழுத் தளித்தாள்!**
**இங்குவா! உன்னிடம் இன்னதைச் சொன்னேன்,**
**மனத்திற் போட்டுவை; மகளிர் கூட்டம்**
**என்னை ஏசும் என்பதற்காக!'**

**பாரதிதாசன் கவிதை I: மயில்**

காவடிச்சிந்து மெட்டிலே காடு பற்றிக் கவிஞர் பாடியுள்ள பாட்டு, ஒலி நய மிக்கது; சந்த இன்பம் தருவது. சான்றாக.

**'முட்புதர்கள் மொய்த்ததரை எங்கும்!—எதிர்**
**முட்டுகருங் கற்களும்நெ ருங்கும்—மக்கள்**
**இட்டடி எடுத்தெடுத்து வைக்கயிலே**
**கால்களில்த டுக்கும் —உள்**
**நடுக்கும்,'**

இப் பாடலைக் காண்க.

'கண்ணும் நெஞ்சும் கவர்கின்ற கடலை, வானைக் கவிஞர்கள் அந்நாள் 'வண்ணமயில் வேலோன்' என்றார் கள் என்று இவர் குறிப்பிடும் நயம் பாராட்டற்குரியது.

மாலையில் ஒளி மங்கி, இருள் தன் போர்வையை எங்கும் விரித்த பின்னர், இருட்பகை போக்கிட எழுகின்ற எழில் நிலாவினைப் பாடிய கவிஞர் பலர். ஆனாலும், நம் கவிஞர் நிலவை வண்ணமுற வருணிக்கிறார்; அவ்வருணனையின் இடையே தமது கருத்தினையும் பொருத்தமுறப் புகுத்தியுள்ளார். அழகாட்சி புரியும் நிலாப் பற்றிய அவர் கவிதையில் மூன்றனைப் படிக்கும்பொழுது, அவரை 'உலகக் கவிஞர்' (Universal Poet) என்று ஒருமனமாகப் பாராட்ட வேண்டியிருக்கிறது. கற்பனை (Imagination), உணர்ச்சி (Emotion) வடிவம் (Form), கருத்து (Content) ஆகிய நான்கும் அமைந்த அவர் பாடல்களைக் கீழேக் காண்க:

**'நீலவான் ஆடைக்குள் உடல்மறைத்து**
**நிலாவென்று காட்டுகின்றாய் ஒளிமுகத்தைக்**
**கோலமுழு தும்காட்டி விட்டால் காதற்**
**கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்**
**சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்!**
**சொக்கவெள்ளிப் பாற்குடமோ! அமுத ஊற்றோ!**
**காலைவந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்**
**கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பிழம்போ!**
**'அந்தியிரு ளாற்கருகும் உலகு கண்டேன்:**
**அவ்வாறே வான்கண்டேன்; திசைகள் கண்டேன்;**
**பிந்திய யந்தக் காரிருள்தான் சிரித்த துண்டோ?**
**பெருஞ்சிரிப்பின் ஒளிமுத்தோ நிலவே நீதான்!**
**சிந்தாமல் சிதறாமல் அழகை யெல்லாம்**
**சேகரித்துக் குளிரேற்றி ஒளியும் ஊட்டி**
**'இந்தாஎன் றே' இயற்கை அன்னை வானில்**
**எழில்வாழ்வைச் சித்தரித்த வண்ணந் தானோ!**
**'உனைக்காணும் போதினிலே என்னுளத்தில்**
**ஊறிவரும் உணர்ச்சியினை எழுது தற்கு**
**நினைத்தாலும் வார்த்தைகிடைத் திடுவ தில்லை:**
**நித்திய தரித்திரராய் உழைத்து ழைத்துத்**

**திணைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்**
**சிறிதுகூழ் தேடுங்கால் பானை ஆரக்**
**கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்**
**கவின்நிலவே! உனைக்காணும் இன்பந் தானே!'**
**—பாரதிதாசன் கவிதைகள்:புரட்சிக்கவி**

'இயற்கை வருணனையே என்றாலும், மக்கள் வாழ்வு தான் உயிர் நாடி; உரிப்பொருளே முதலிடம் பெறுவது,' என்கிற சங்கத் தமிழ் மரபு, சித்தர் பாட்டு, இப் பாடலில் விளக்கமுறக் காணலாம்.

இரண்டாம் தொகுதியில் இடம் பெற்றுள்ள 'தென்றல்' என்னும் கவிதை, கருத்தாழமுடையது; கற்பனையுணர்ச்சி கெழுமியது. தென்றலைத் திறம் படக் கவிஞர் காட்டுகின்றார்:

**அந்தியில் இளமுல்லை சிலிர்க்கச் செந்நெல்**
**அடிதொடரும் மடைப்புனலும் சிலிர்க்க என்றன்**
**சிந்தைஉடல் அணுஒவ்வொன் றும்சி லிர்க்கச்**
**செல்வம் ஒன்று வரும்! அதன் பேர் தென்றற் காற்று'**

என்கிறார். இம்முறையாகக் கிளத்துவது ஒரு நயமான முறை—நவமான முறையன்றோ?

கவிஞர் அந்தியில் கொல்லையில் மனைவியாரோடு இருந்தார். தென்றல் இதமாய் வீசிற்று. வெந்தயத்துக் கலயத்தைப் பூனை தள்ளிவிட்டதெனக் கவிஞர்தம் மனைவியார் அறைக்குள் போனார். தனித்திருந்த விசுப்பலகையில் கவிஞர் படுத்தார். பக்கத்தில் அமர்ந்து சிரித்துப்பேசிப் பழந்தமிழின் சாற்றோடே காதல் சேர்த்து நிற்காமல், பூனையை ஓட்டச்சென்ற பூவையார்மீது அடங்காத சினம் வந்தது கவிஞருக்கு. பிரிவால் வேதனையுற்றார் கவிஞர். மனைவியாரின் உடற்குளிர்ச்சி, மென்மை, மணம் இவற்றை நுகர

நினைவு கொண்டார். பின்னர் நடந்தது என்ன? கவிஞர் வாக்காலேயே கேட்போம்.

'தெரியாமல் பின்புறமாய் வந்த பெண்ணாள்!
சிலிர்த்திடவே எனைநெருங்கிப் படுத்தாள் போலும்!
சரியாத குழல்சரிய லானாள் போலும்!
தடவினாள் போலும் எனைத் தன்க ரத்தால்!
புரியாத இன்பத்தைப் புரிந்தாள் போலும்!
புரியட்டும் எனஇருந்தேன்; எதிரில் ஓர்பெண்
பிரிவுக்கு வருந்தினே னென்றாள் ஓகோ!
பேசுமிவள் மனைவிமற் றொருத்தி தென்றல்!'

கண்முன் காட்சித்திரையினை விரிக்கும் அழகுச் சித்திரம் இது!

இயற்கைக்கு அடுத்தபடியாகக் கவிஞர் காதலைப் பாடுகின்றார். காதலைப் பாடாத கவிஞர் இலர்; பக்தியினைப் பெருக்கும் பாசுரங்களிலும் கூட, 'நாயகன் நாயகி பாவம்' ஆன காதற்பாட்டுகள் மிகுதியாய் இருப்பதனை நந்தமிழில் காணலாம். காதல் கவிதையின் வற்றாத ஊற்றாகும் (Love is one of the perennial torrents of Poetry).

அழகின் சிறப்பில் 'அழகே கவிதை' எனக் கூறிய கவிஞர், 'எழுதாக் கவிதை'யில் காதலியின் அழகு, கள் வெறி செய்கிறது; விளைவு இதோ ஓர் அழகிய கவிதை:

'தண்ணிலவும் அவள்முகமோ! தாரகைகள் நகையோ!
தளிருடலைத் தொடும் உணர்வோ நன்மனஞ்சேர் குளிரும்,
விண்ணீலம் கார்குழலோ! காணும்எழி லெல்லாம்
மெல்லியின்வாய்க் கள்வெறியோ! அல்லிமலர்த் தேனின்

வண்டின்ஒலி அன்னவளின் தண்டமிழ்த்தாய் மொழியோ!
வாழியஇங் கிவையெலாம்! எழுதவரும் கவிதை!
கண்டெடுத்தேன் உயிர்ப்புதையல்! அதோவந்து விட்டாள்!
கண்டெழுத முடியாத நறுங்கவிதை அவளே!'

'இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்தினர்', என்ற கம்பர் கூற்று.

'என்னுளத்தில் தன்வடிவம் இட்டஎழில் மங்கை
இருப்பிடத்தில் என்னுருவம் தன்னுளத்திற்
கொண்டாள்'

என்று எளிய தமிழில் நடைபோடுகின்றது.

காதலுக்கு ஏற்படும் தடையினைக் கவிஞர்,

'ஒட்டும் இரண்டுளத்தைத்—தம்மில்
ஓங்கிய காதலினை
பிட்டுப்பிட் டுப்புகன்றார்—அதைப்
பெற்றவர் கேட்கவில்லை
குட்டை மனத்தாலே—அவர்
கோபப் பெருக்காலே
வெட்டிப் பிரிக்கவந்தார்—அந்த
வீணையின் நாதத்தினை!'

என்றும் நெஞ்சில் ஈரம் கசிய மொழிந்துள்ளார். மேலும் காதலின் நெஞ்சக உணர்வினை,

'அண்டைஇல் லத்தினிலே—என்
அன்பன் இருக்கின்றான்!
உண்ணும் அமுதிருந்தும்—எதிர்
உண்ண முடிந்ததில்லை!
தண்டமிழ்ப் பாட்டிருந்தும்—செவி
சாய்த்திடக் கூடவில்லை!
வண்ணமலர் சூடவில்லை—அது
வாசலிற் பூத்திருந்தும்!'

என்று உவமை வாயிலாகப் புலப்படுத்துகின்ருர். அமுதிருந்தும் உண்ண இயலாது. இசைப்பாட்டிருந்தும் கேட்க இயலாது, பூத்திருந்தும் மலரைச் சூட இயலாது கிடக்கும் தலைவியின் துயரந்தான் என்னே! இதனை,

**'பழத்தோட்டம் அங்கே தீராப்**
**பசிக்காரி இவ்விடத்தில்**

என்று 'எதிர்பாராத முத்தத்'தில் தலைவி பூங்கோதையின் ஆற்ருமைக் கூற்றோடு ஒப்பிட்டுக் காணலாம். மேலும், பெண்களே காதலில் முன்னணியில் நிற்பதாகக் கவிதையில் காணலாம். சான்ருகக் கவிஞர் அவர்களின் கவிதை புனையும் தனிப்போக்கினைப் பூங்கோதை தன் காதலன் பொன்முடிக்கு எழுதிய கடிதத்திற் காண்க.

'காதல் பிறந்த கதை'யில், கவிமணி 'கண்ணும் கண்ணும் கலந்து பேசின பேச்சில் பிறந்தது காதலே' என்பார். பாரதிதாசனுர் கவிதையில், காதலி ஒருத்தி தன் காதல் அனுபவத்தினை,

**'கொழிக்கும் ஆணழகன்!—அவன்**
**கொஞ்சிவந் தேனது**
**விழிக்குள் போய்ப்புகுந்தான்—நெஞ்ச**
**வீட்டில் உலாவுகின்ருன்'**

என்று குறிப்பிடுகின்ருள். **'விழிக்குள் புகுந்து நெஞ்ச வீட்டினுள் உலாவுகின்ருன்'**. எத்தனை நயம் இத்தொடரில்!

**'காதலி ருவர்களும்—தம்**
**கருத்தொ ருமித்தபின்**
**வாதுகள் வம்புகள் ஏன்?—இதில்**
**மற்றவர்க் கென்னஉண்டு?**
**சூது நிறையுளமே—ஏ**
**துட்ட இருட்டறையே!**

**நீதிகொள் என்றுலகை — அவள்**
**நிந்தனை செய்திடுவாள்.'**

என்று காதலனுக்காகப் புலம்பும் தலைவி நம் கருத்தில் நிற்கின்றாள்.

தலைவனுக்கும் காதல் நெஞ்சம் இல்லாமற் போமா?

**'வேல்விழியால் என்றன் விலாப்புறத்தைக் கொத்தாதே!**
**பால்போல் மொழியால் பதைக்கஉயிர் வாங்காதே!**
**கண்ணாடிக் கன்னத்தைக் காட்டிஎன் உள்ளத்தைப்**
**புண்ணாக்கிப் போடாதே! போபோ! மறைந்துவிடு!'**

**—பாரதிதாசன் கவிதைகள்: புரட்சிக் கவி**

என்று, தலைவன் தலைவியின் அழகில்; காதலில் கட்டுண்டு கிடக்கிறான். மேலும்,

**'கிட்டரிய காதற் கிழத்திஇடும் வேலைவிண்ணில்**
**விட்டெறிந்த கல்லைப் போல் மேலேறிப் பாயாதோ!**
**கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்**
**மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர்கடுகாம்!'**

**—பாரதிதாசன் கவிதைகள்: சஞ்சீவி பர்வதத்தின் சாரல்**

என்று காதலின் ஆற்றலை வடித்துத் தருகிறார், நம் எண்ணமெலாம் இனிக்கும் வண்ணத் தமிழ்க் கவிஞர்.

'ஒருவனும் ஒருத்தியுமாய் மனம் உவந்திடில் பிழையென உரைக்கலாகாது,' என்றும், 'சாதல் எனில் இருவருமே சாதல் வேண்டும்; தவிர்வதெனில் இருவருமே தவிர்தல் வேண்டும்' என்றும் கவிஞர் கூறுகின்றார்.

காதல் உணர்வு என்னும் உலகில் சாதல், வாழ்தல், துன்பம், மோதல், மேவல், மொய்த்தல், நீங்கல் முதலியன இல்லையென்று கூறும் கவிஞர், காதற் குற்றவாளிகளை நமக்குப் பின்வருமாறு அறிமுகப் படுத்துகின்றார்.

**'கூடத்தி லேமனப் பாடத்திலே—விழி**
**கூடிக் கிடந்திடும் ஆணழகை,**
**ஓடைக் குளிர்மலர்ப் பார்வையினல்—அவன்**
**உண்ணத் தலைப்படும் நேரத்திலே**
**பாடம் படித்து நிமிர்ந்தவிழி—தனிற்**
**பட்டுத் தெரித்தது மானின்விழி!**
**ஆடை திருத்திநின் ருள் அவள்தான்—இவன்**
**ஆயிரம் ஏடு திருப்புகின்ருன்!'**

இக்கவிதைக்கு விளக்கம் கூறல் தகாத செயலாம். மீட்டும் மீட்டும் பாட்டைப் படித்துச் சுவைத்துக் கவிஞரின் உளவியல் நுட்பமும், சொற்றிறனும் கண்டு கண்டு மகிழ்க.

தலைவனின் காதற்சேட்டையினை நினைந்து நினைந்து நெஞ்சம் உவக்கின்ருள் தலைவி. அவள், 'தலைவரின் செயலைத் தோழிக்குச் 'சொல்வதென்ருல் வெட்கமடி தோழி' என்று சொல்லிக் கூறத் தொடங்கு கின்ருள்:

**'பின்னலைப்பின் னேகரும்பாம் பென்ருன்—உடன்**
**பேதைதுடித் தேன் அணைத்து நின்ருன்;**
**கன்னலென் ருன்கனி யிதழைக்**
**காதல் மருந்தென்று தின்ருன்.'**

காதற்சுவை இப்பாடலில் கனிந்து நிறைந்துள்ளது.

காதல் வெறியிலே காதலியைப் புகழும் தலைவன் இரண்டே வரிகளில் அவளை அழகின் உச்சிக்கே கொண்டு சென்று விடுகின்ருன்.

**'மின்னலிடை; கன்னல்மொழி; இன்னும் சொன்னல்**
**விரியுலகில் ஒருத்தி நீ அழகின் உச்சி!'**

**—பாண்டியன் பரிசு: 57;5**

இயற்கையோடு காதலியின் வாழ்வினையும் பின்னிப் பிணைந்து பாடும் கவிஞர் திறம் களியூட்டக் கூடியது.

'அகல்வானில் விட்டுவிட்டு மின்னல் போல
ஆங்காங்குச் சென்றுபின் மீண்டா ளாகிப்
பகல்வானம் மாணிக்கப் புனலா டுங்கால்
படர்முல்லை சிரித்திருக்கும் சோலை கண்டு
புகலானள்; குதிரையினை விட்டாள்; அங்குப்
புன்னைவர வேற்பளிக்கத் தென்றல் வந்து
துகிர் உடலில் மணந்தடவ இசைய ரங்கு
தும்பியர் துவக்கினர்! அமர்ந்தாள் அன்னம்'

—பாண்டியன் பரிசு: 62: 1

மாலையில் முல்லை மலர்ந்த சோலையில் புன்னை மர நிழலில் அமர்ந்து தென்றற்காற்றால் சோர்வு நீங்கித் தும்பி பாடிய இசைப்பாட்டால் மனம் மகிழ்ந்தாள் தலைவி என்பதனை, எவ்வளவு இயற்கையாக, இயற்கையோடு இணைத்துப் பாடிவிட்டார் கவிஞர் என்பதனைக் காணும்போது, உள்ளத்தில் உவகை மலர்கின்றது.

'பாண்டியன் பரிசு' காப்பியத்தலைவன், கட்டழகன் வேலன், காப்பியத் தலைவி, அன்னத்திடம் காதல் மீதூரக் காதற்பேச்சினைக் கட்டுரைக்கின்றான் :

'கரும்பெடுத்துப் பிழிந்ததுவும் என்சொல் தானோ?
கனியெடுத்து வைத்ததுமென் இதழோ? இல்லை
அரும்பெடுத்துக் கொட்டியதும் என் சிரிப்போ?
அடியெடுத்தால் அழகெடுக்கும் அன்ன மே! உன்
சுரும்பெடுத்த இசைபோலும் சொல்லெ டுத்தால்
சுவைஎடுப்பாய் இருக்கும்; இனிக் கொஞ்சிப் பேசி
இரும்பெடுத்துச் செய்திருக்கும் என்றன் காதில்
இன்னமுதைப் பாய்ச்சாயோ? என்றான் வேலன்.'

—பாண்டியன் பரிசு: 66

பாவேந்தர் பாரதிதாசனாரின் 'சேர தாண்டவம்' ஓர் ஒப்பற்ற காதற்கதை. கவிதை நலங் கெழுமிய உரை நடையில் 'ஆதிமந்தி—ஆட்டனத்தி' வரலாறு இந்நூலில் கூறப்படுகின்றது.

பெண் வருணனை கவிதைத் தமிழில் கவினுறக் கிளத்தப்படுகின்றது. ஆதிமந்தியைப் பற்றிய அழகு ஓவியம் இது:

"தச்சுக்கலை! அவளை நோக்கி அது புதுக்கப்பட வேண்டும். ஏறிட்டுப் பார்க்கும்போதெல்லாம் அவள் இருவிழிகள் இதழ் விரிந்த செந்தாமரைகள்! எதிர் நோக்கிச் சாயும் அவள் பார்வை, காதல் முழங்கி, காண்பார் உளத்தில் மின்னிப் பொழியும் அமுத மழை! நெற்றிக்கு மேல் அமைந்த கருங்குழல் நிலவுக்கு மேலமைந்த கருமுகில்; புன்சிரிப்பில் முத்துப் பிறக்கும்; மாணிக்கம் சிந்தும்; வாய் விட்டுச் சிரிக்கையில் இளைஞர் உள்ளம் அதிர்கிறது! பொன்னோ, தன் வன்மை இழந்து, மென்மை அடைந்து, மெருகுடன் அமைந்ததோ என்னும் கன்னம்; சின்ன இடை கொடிபோல அசையப் பொன்னுடையும், பன்மணி நகைகளும் சுமந்து, சிலம்பு பண்பாட, அவள் நடக்கை யில் வல்லவன் ஆக்கிய ஓவியமே நடக்கக் கண்டோம்."

இவ்வாறு பெண்ணைக் கிளர்ச்சியுடன் வருணிக்கும் கவிஞர், காதல் உரையாடல்களிலும் சிலேடை நயம் வைத்து, நம் சிந்தையைக் குளிர்விக்கின்றார். பின் வரும் உரையாடலைக் காண்க:

**ஆதிமந்தி :** சோறும் கறியும் கொதிப்பதும் வேவது மாயிருக்கின்றன.

**தோழி :** ஆதிமந்தி, அவரிடம் சொன்னேன் அங்கே கொதிக்கிறது என்று. 'இங்கே மட்டும் என்ன குளிர்கிறதோ! இங்குந்தான் என் நெஞ்சம் கொதிக் கிறது' என்று சிடுசிடு என்று கூறினார்.

**ஆதிமந்தி :** ஐயையோ! ஓடு, ஓடு! இறக்கும் நேரம்; 'இதோ வந்துவிட்டாள் ஆதிமந்தி,' என்று கூறி விட்டு வா.

**தோழி :** இறக்கும் நேரம் என்று அவரிடம் சொன்னதற்கு, 'இங்கு மட்டும் நான் வாழும் நேரமா? நானும் இறக்கும் நேரந்தான்' என்று எரிந்து வீழ்ந் தார்.'

இத்தகைய உரையாடலின் கருத்து நயம் நினையுந் தொறும் மகிழ்வூட்டுவதாகும்.

மேலும் ஆதிமந்தி சோழப் பேரரசன் கரிகாற் பெருவளத்தானின் அருமைத் திருமகளாய் இருப் பினும், தன் காதற்கொழுநனுக்குத் தானே சமையல் செய்யவும், எண்ணெய் தேய்க்கவும் விரும்புவதாகக் கூறும் கவிஞர், காதல் வாழ்வின் நுட்பத்தினையும் பெற்றியினையும் பாங்குறப் புலப்படுத்துகின்றார்.

"அத்தானுக்கு என்ன பிடிக்கும், மாமிக்கு எந்தக் கறி பிடிக்கும் என்பது எனக்கல்லவா தெரியும்? உணவு ஆக்கும் பொறுப்பைப் பணிப்பெண்களிடம் ஒப்படைக் கலாமா?"

"உங்கள் திருமேனி தீண்டி எண்ணெய் இட்டு எழில் மார்பில் இரு கண்ணையிட்டுத் தூய்மை செய்யும் இன்பப் பணியை நான் பணிப்பெண்ணுக்கோ கொடுக்க உடன்படுவேன்?"

**திருமேனி தீண்டி எண்ணெய் இட்டு எழில் மார்பில் இருகண்ணை இட்டு'—என்ன'** நயமான—அழகான தொடர்!

பெண்ணுரிமை பேசிய பெருங்கவிஞர் பாரதி தாசனார் பாட்டில் பாரதியாரும், உரைநடையில் 'திரு. வி. க.'வும பெண்ணின் பெருமை பேசினர். பாரதிதாசனார் அத்துறையில் பல பாடல்களைப் புனைந்துள்ளார். 'ஜான் மில்டன்' என்ற மேல் நாட்டுக் கவிஞர், பெண்களை 'வலிமையற்ற படைப்புகள்' (Women are the weaker vessels) என்று குறிப்பிட்டார். பாரதிதாசனார் பாடுகிறார்:

'ஆடை, அணிகலன், ஆசைக்கு வாசமலர்
தேடுவதும் ஆடவர்க்குச் சேவித் திருப்பதுவும்
அஞ்சுவதும், நாணுவதும் ஆமையைப்போல் வாழுவதும்
கெஞ்சுவது மாகக் கிடக்கும் மகளிர்குலம்
மானிடர் கூட்டத்தில் வலிவற்ற ஓர்பகுதி'

—பாரதிதாசன் கவிதைகள்: வீரத்தாய்

என்று பெண்கள் நிலையினைக் குறிப்பிட்டுள்ளார். ஆயினும், இந்நிலை அறவே கடியப்பட வேண்டும் என்பதனையும் கடுமையான குரலில் முழங்குகின்றார். பாரதிதாசனுர் பெண்ணைத் தூற்றும் பேயர்களைப் பின்வருமாறு சாடுகின்றார்:

'பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாஎன் கின்றீரோ?
மண்ணுக்குக் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை?
பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே'

'ஊமைஎன்று பெண்ணை உரைக்குமட்டும் உள்ளடங்கும்
ஆமை நிலைமைதான் ஆடவர்க் கும்உண்டு
புலன் அற்ற பேதையாய்ப் பெண்ணைச்செய் தால்அந்
நிலம்விளைந்த பைங்கூழ் நிலைமையும் அம்மட்டே!'

—பாரதிதாசன் கவிதைகள்: சஞ்சீவி பர்வதத்தின் சாரல்

என்ற பாடலில் பெண்ணின் பேதைமை நீங்கப் பெரிதும் முயல வேண்டும் என ஆடவரை அழைக்கின்றார் கவிஞர்; எனவே, பெண் கல்வியினை வற்புறுத்திப் பேசுகின்றார்; குடித்தனம் பேணுவதற்கும் மக்களைப் பாதுகாப்பதற்கும், உலகினை உணர்ந்து கொள்வதற்கும், கல்வியைப் போற்றுதற்கும் பெண்களுக்குக் கல்வி வேண்டும் என்று கூறுகின்றார்.

'கல்வியில் லாத பெண்கள் களர்நிலம் அந்நி லத்தில்
புல்விளைந் திடலாம்; நல்ல புதல்வர்கள் விளைதல் இல்லை!

**கல்வியை உடைய பெண்கள் திருந்திய கழனி; அங்கே**
**நல்லறி வுடைய மக்கள் விளைவது நவில வோநான்!'**
**—குடும்ப விளக்கு:இரண்டாம் பகுதி**

என்று கல்லாத பெண்ணைக் களர்நிலம் என்றும், கற்ற பெண்ணை விளைநிலம் என்றும் உவமை காட்டிப் பெண் கல்வியின் சிறப்பினை உணர்த்துகின்றார். தந்தை பெண்ணுக்குக் கூறுவதாக அமைந்துள்ள அழகான இசைப்பாடலில், இக்கருத்து இசையுற இனிமையுறக் கிளத்தப் படுகின்றது:

**'தலைவாரிப் பூச்சூடி உன்னைப்—'பாட**
**சாலைக்குப் போ'என்று சொன்னாள்உன் அன்னை;**
**சிலைபோல ஏனங்கு நின்றாய்—நீ**
**சிந்தாத கண்ணீரை ஏன் சிந்துகின்றாய்?**
**விலைபோட்டு வாங்கவா முடியும்? கல்வி**
**வேளைதோ றும்கற்று வருவதால் படியும்!**
**மலைவாழை அல்லவோ கல்வி?—நீ**
**வாயார உண்ணுவாய் போஎன் புதல்வி!**
**படியாத பெண்ணா யிருந்தால்;—கேலி**
**பண்ணுவார் என்னைஇவ் வூரார் தெரிந்தால்!**
**கடிகாரம் ஓடுமுன் ஓடு!—என்**
**கண்ணல்ல! அண்டைவீட்டுப்பெண்களோடு!**
**கடிதாய் இருக்குமிப் போது—கல்வி**
**கற்றிடக் கற்றிடத் தெரியுமப் போது!**
**கடல்சூழ்ந்த இத்தமிழ் நாடு—பெண்**
**கல்விபெண் கல்விஎன் கின்றதன் போடு!'**
**—இசையமுது 1, தந்தை பெண்ணுக்கு**

தந்தை சொல் கேட்டுப் பெண்ணும் பிள்ளையும் பள்ளி நோக்கிச் செல்கின்றனர். பிள்ளைகள் பள்ளி செல்லும் காட்சியே தனி ஆனந்தக் காட்சி! தாய் 'எழுங்கள்' என்றனர்; பிள்ளைகள் எழுந்தார்கள். சுவடியை ஒழுங்குற அடுக்கி உடையை அணிவித்து

புன்னை இலைபோல் புதையடிச் செருப்புகளைச் சின்னவர் காலிற் செருகி, சிறு குடை கையில் தந்து, கையொடு கூட்டி, தெருவரை தானும் நடந்து, பள்ளி நோக்கித் தள்ளாடி நடக்கும் பிள்ளைகள் பின்னழகு வெள்ளம் பருகி நிற்கின்ருள்.

இத்தகு மனைவி பொருளையும் பெரிதென்று எண்ணு மல், பூணையும் வேண்டாமல், தன்னை மணந்த கண வனது அருளையே உயிராக எண்ணும் அன்பு உடைய வள். எனவே, தன் கணவன் மிக விரும்பிச் சுவைக் கும் உருளைக் கிழங்கு வருவலைச் சமைக்கும் போது' 'உடையானுக்கிருக்கும் ஆசைத் திருவுளம் எண்ணி எண்ணிச் செவ்விள நகை செய்கின்ருள்.' விருப்ப மாகக் கணவன் உண்டனன்; உண்ணக் கண்ட அவள், அவன் உவப்பை உண்டாள்.

'உண்டனன்; உண்ணக் கண்ட
நகை முத்தோ உவப்பை உண்டாள்.'
—குடும்ப விளக்கு:மூன்ரும் பகுதி:

இஃது என்ன இனிமையான குடும்பம்! நல்ல குடும்பம் ஒரு பல்கலைக்கழகம் அன்ருே! இத்தகைய மாண்புமிக்க மனையாட்டியை மணத்தில் மணமாகப் பெற்றவன் கிடைப்பருஞ் செல்வம் பெற்றவன் அன்ருே?

'இளகிய பொன் உருக்கின்
சிற்றுடல் இருநீ லக்கண்
ஒளிவிடும் பவழச் செவ்வாய்
ஒருபிடிக் கரும்பின் கைகால்
அளிதமிழ் உயிர்பெற் றங்கே
அழகொடும் அசையும் பச்சைக்
கிளியினைக் காணப் பெற்ருன்
கிடைப்பருஞ் செல்வம் பெற்ருன்!'
—குடும்ப விளக்கு : நான்காம் பகுதி.

கணவன் 'காலிற் செருப்பணிந்து கைக்குடையை மேல் விரித்து, மேலும் ஒரு தடவை மெல்லி முகம் தான் நோக்கிச் சென்றான். அவன் செல்லும் அழகருந்தி நின்றாள் அன்னம். பின் நெஞ்சுருகித் திரும்பினாள்.

முன்பு கற்ற அவள் இப்பொழுது திருமணத் திற்குப் பின் கற்பிப்பவள் ஆனாள். அற்றைநாள் மகளாய் இருந்தவள் இன்று அன்னை ஆகிவிட்டாள்.

**'தலைமட்டும் இரண்டென் றாலும்**
**குழந்தையும், தாயும் ஒற்றைக்**
**குலையேயாம், உயிரும் ஒன்றே!**
**உள்ளத்தின் கூறும் ஒன்றே!'**

''காக்கா காக்கா' காட்டிக் குழந்தைக்குச் சோறூட்டுகிறாள் தாய். அவள் பாடும் பாடலில்தான் என்ன கருத்தாழம்!

**'உன்வாய் பெரிய ஒளிவாயாம்;**
**ஒண்டொடி வாய்தான் கிளிவாயாம்;**
**தன்னால் உண்ணும் என்தங்கம்**
**தண்ணீர் குடிக்க வா அஞ்சும்?**
**சொன்னால் கேட்கும் என்பட்டும்**
**சோற்றை உண்ணும் இம்மட்டும்**
**இன்னும் காக்கா நெருங்கிவா**
**இதையும் உண்டு பறந்துபோ.'**

**—குடும்ப விளக்கு: நான்காம் பகுதி.**

இப்படி இன்பமாக அன்பின் அடித்தளத்தில் அமையும் இல்லற வாழ்க்கை இளமைக் காலத்தில் மட்டுமன்றி முதுமையிலும் மகிழ்ச்சி மண்டிக் கிடப்பதாகவே இலங்குகிறது. வயது முதிர்ந்த கணவன் தன்னைப் போலவே முதிர்ந்த நிலையிலிருக்கும் தன் மனைவி பற்றிக் கூறுவான்;

'புதுமலர் அல்ல; காய்ந்த
புற்கட்டே அவள்உ டம்பு!
சதிராடும் நடையாள் அல்லள்
தள்ளாடி விழும்மூ தாட்டி;
மதியல்ல முகம்அ வட்கு;
வறள்நிலம்! குழிகள் கண்கள்!
எதுஎனக் கின்பம் நல்கும்?
''இருக்கின்றாள்'' என்ப தொன்றே.'

—குடும்ப விளக்கு: முதியோர் காதல்.

இவ்வாறு அன்புள்ளம் கண்டு அகத்தின்பம் காண்கின்ற வாழ்வு; அமைதிப் பெருவாழ்வு. இந்த வாழ்வு வந்தால், பின் நமக்கு வேறென்ன வேண்டும்?

அடுத்து, பாரதிதாசனாரின் தமிழ்ப் பற்றினைக் காண்போம்: அவர் தமிழின்பால் கொண்ட பெருமதிப்பினைப் 'பற்று' என்ற சொல்லால் தளையிட்டு விடலாகாது. அவருடைய ஆழ்ந்த பற்றினை— தமிழ் நெறியாம் பண்பினை—அவர்தம் பாக்கள் பறைசாற்றுகின்றன.

'என் தாய்மொழிக்குப் பழி வந்தால், சகிப்பதுண்டோ?' என்று கூறும் கவிஞர்,

'கனியிடை ஏறிய சுளையும்—முற்றல்
கழையிடை ஏறிய சாறும்,
பனிமலர் ஏறிய தேனும்—காய்ச்சுப்
பாகிடை ஏறிய சுவையும்
நனிபசு பொழியும் பாலும்—தென்னை
நல்கிய குளிரிள நீரும்,
இனியன என்பேன் எனினும்—தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்!'

—பாரதிதாசன் கவிதைகள் 1

என்று தமிழினைத் தம் இனிய உயிரெனவே எண்ணுகின்றார். தமிழனை வளர்க்கும் தமிழை, உயிரை

உணர்வை வளர்க்கும் தமிழை, 'இன்பத்தமிழ்' எனப் பாவிசைத்து இறும்பூ தெய்துகின்ருர் கவிஞர்.

**'தமிழுக்கும் அமுதென்றுபேர்—அந்தத்**
**தமிழ்இன்பத் தமிழ் எங்கள் உயிருக்குநேர்**
**தமிழுக்கு நிலவென்றுபேர்—இன்பத்**
**தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்குநீர்!**
**தமிழுக்கு மணமென்றுபேர்!—இன்பத்**
**தமிழ்எங்கள் வாழ்வுக்கு நிருமித்தஊர்!**
**தமிழுக்கு மதுவென்றுபேர்!—இன்பத்**
**தமிழ்எங்கள் உரிமைச்செம் பயிருக்குவேர்!'**

**—பாரதிதாசன் கவிதைகள் 1**

இத்தகு சிறந்த இன்பத்தமிழினை யாவரும் கற்ருல் துன்பங்கள் நீங்கி, நெஞ்சில் சுகம் வந்து, தூய்மையும் வீரமும் வளரும் என்று பாரதிதாசனுர் தமிழார்வம் தழைக்கக் குறிப்பிடுகின்ருர். 'தனிமைச் சுவையுள்ள சொல்லை, எங்கள் தமிழினும் வேறெங்கும் யாங்கண்ட தில்லை' என்று மார் தட்டிச் சொல்கிருர்.

மேலும், 'கன்னற் பொருள் தரும் தமிழே! நீ ஓர் பூக்காடு;நானோர் தும்பி!' என்று தம்மைக் 'கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!'யெனக் கூறிக் கொள் கிருர்.

**'தமிழரின் மேன்மையை இகழ்ந்தவனை என்**
**தாய்தடுத் தாலும்விடேன்!**
**'எமைநத்து வாயென எதிரிகள் கோடி**
**இட்டழைத் தாலும்தொடேன்!**

**—இசையமுது:தமிழன்**

என்று ஆவேசமாகத் தமிழ்ப் பகைவர்களைச் சாடும் கவிஞர், 'வெண்ணிலாவும் வானும் போல, வீரனும் கூர் வாளும் போல, வண்ணப்பூவும் மணமும் போல, மகர யாழும் இசையும் போல, கண்ணும் ஒளியும் போல, கன்னல் தமிழும் தாமுமாகக் கூறிக் கொள்

கின்ருர்; பாண்டியன் பரிசு'க் காப்பியத் தலைவன் வேலன் கூற்றாகத் தமிழ்ப் பற்றினை வெளிப்படுத்தியுள்ளார்:

**'எனை ஈன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்**
**இனம்ஈன்ற தமிழ்நாடு தனக்கும் என்ஞல்**
**தினையளவு நலமேனும் கிடைக்கு மென்ருல்**
**செத்தொழியும் நாள்எனக்குத் திருநா ளாகும்!'**

**—பாண்டியன் பரிசு:இயல்:55**

இசைத்தமிழ்ப் பற்றும் குறைவற நிரம்பியவர் கவிஞர்; 'வெள்ளாடு வேங்கைப் புலியிடம் நெருங்கு கையில் மகிழாது; மாருகத் தன் உயிர், வேங்கைக்கு இரையாகி ஒழியுமே என்று வருந்தும். அதுபோன்றே தெலுங்கிற் பாடும் தமிழன் செய்கை தேஞகாது' என்று இடித்துரைக்கின்ருர்.

'துன்பம் நேர்கையில் யாழ் எடுத்து நீ இன்பம் சேர்க்கமாட்டாயா!' என்ற இசைப்பாடலில், 'நல்லன் பில்லா நெஞ்சில் தமிழிற்பாடி நீ, அல்லல் நீக்க மாட்டாயா' என்று இசைத்தமிழ் வளர்க்கும் இனிய தொண்டினைப் புலப்படுத்துகின்ருர். 'தமிழின் உயர்வே தமிழன் இயர்வு; தமிழன் உயர்வே தமிழின் உயர்வு என்பதனை,

**'செந்தமி ழே!உயிரே! நறுந் தேனே!**
**செயலினை மூச்சினை உனக்களித் தேனே!**
**நைந்தா யெனில்நைந்து போகுமென் வாழ்வு!**
**நன்னிலை உனக்கெனில் எனக்குந் தானே!'**

**—இசையமுது 1:தமிழ்**

என்னும் பாடலிற் புலப்படுத்தியுள்ளார்.

**'நன்று தமிழ்வளர்க!—தமிழ்**
**நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!**
**என்றும் தமிழ்வளர்க!—கலை**
**யாவும் தமிழ்மொழி யால்விளைந் தோங்குக!''**

இன்பம் எனப்படுதல்—தமிழ்
இன்பம் எனத்தமிழ் நாட்டினர் எண்ணுக!'
—பாரதிதாசன் கவிதைகள்: தமிழ் உணர்வு

என்று தம் தண்டாத தமிழார்வ வெள்ளத்தினை வெளிப்படுத்துவதோடு தமிழ் வளர்ச்சிக்குத் தளராது செய்யவேண்டிய கடமையினையும் வற்புறுத்துகின்றார்.

'எளியநடை யில் தமிழ்நூல் எழுதிடவும் வேண்டும்;
இலக்கணநூல் புதிதாக இயற்றுதலும் வேண்டும்;
வெளியுலகில், சிந்தனையில் புதிதுபுதி தாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளிவுறுத்தும் படங்களொடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும்வேண்டும்
எளிமையினால் ஒரு தமிழன் படிப்பில்லை யென்றால்
இங்குள்ள எல்லோரும் நாணிடவும் வேண்டும்!
—பாரதிதாசன் கவிதைகள் : தமிழ் வளர்ச்சி

மேலும், தமிழர் வாழ்விற்கு வற்றாத வளம் சேர்ப்பது தமிழே என அறுதியிட்டுக் கூறி, தமிழர் ஒன்று சேர்ந்து ஒரு முகப்பட்டுத் தமிழின் உயர்விற்குச் செயலாற்றவேண்டிய சிறப்பினையும் குறிக்கின்றார் கவிஞர்.

'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு!
எங்கள் பகைவர் எங்கோ மறைந்தார்,
இங்குள்ள தமிழர்கள் ஒன்றுதல் கண்டே!

'திங்களோடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்களோடும்
மங்குல்கடல் இவற்றோடும் பிறந்ததமி
ழுடன் பிறந்தோம் நாங்கள்; ஆண்மைச்
சிங்கத்தின் கூட்டமென்றும் சிறியோர்க்கு
ஞாபகம்செய் முழங்கு சங்கே!

'சிங்களஞ்சேர் தென்னாட்டு மக்கள்
தீராதி தீரரென் றூது சங்கே!
பொங்கு தமிழர்க் கின்னல் விளைத்தால்
சங்காரம் நிசமெனச் சங்கே முழங்கு!
வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும்!
தோளெங்கள் வெற்றித் தோள்கள்!
கங்கையைப்போல் காவிரிபோல் கருத்துக்கள்
ஊறுமுள்ளம் எங்கள் உள்ளம்!
வெங்குருதி தனிற்கமழ்ந்து வீரஞ்செய்
கின்றதமிழ் எங்கள் மூச்சாம்!'
—பாரதிதாசன் கவிதைகள்: 'சங்க நாதம்'

"பாரதிதாசனார் தமிழ்ப் பற்றுக்கு எல்லையில்லை. அவருடைய பாடல்களைப் படிக்கும் அந்நியனும் தமிழனாகிவிடுவான்" என்ற கூற்று மிகவும் உண்மை! தமிழ் வெறிநெறி கொள்ள இந்த ஒரு பாடலைப் படித்தாலே போதும்!

'இசையமுது' என்னும் நூலில் அமைந்துள்ள பாடல்கள் எல்லாம் தித்திக்கும் தேனூறுகள்; செந்தமிழ் இசை சேர்ந்த பூங்காக்கள்; பண் மிழற்றிடும் தும்பிகள். 'வண்டிக்காரன்,' மாடு மேய்ப்பவன்,' 'ஆலைத்தொழிலாளி,' 'தபாற்காரன்,' 'சுண்ணும்பிடிக்கும் பெண்கள்,' 'இன்பம்' 'நிலா,' 'பாண்டியன்மேற் காதல்,' 'தமிழன்,' 'தமிழ்,' 'தந்தை பெண்ணுக்கு' என்னும் பாடல்கள் இசை கூட்டும் உயிர்ப் பாட்டுகளாம்.

நிலாவைப் பற்றிக் கவிஞர் பாடியுள்ள பாட்டுக் கருத்தாழம் நிறைந்தது; எளிமை சான்றது; இனிமை மிகுந்தது.

'முழுமைநிலா! அழகுநிலா!
முளைத்தது விண்மேலே!—அது
பழமையிலே புதுநினைவு
பாய்ந்தெழுந்தாற் போலே!

..................................................

**குருட்டு விழியும் திறந்ததுபோல்**
**இருட்டில் வான விளக்கு —இசையமுது: நிலவு**

இளைஞர்க்காகவும் இனிய பாடல்கள் பல புனைந்துள்ளார் பாவேந்தர் பாரதிதாசனார். 'இளைஞர் இலக்கியம்' என்னும் நூலில் இத்தகு பாடல்களைச் சிறக்கக் காணலாம்; இந்நூலில் 'நிலவு' என்னுந் தலைப்பில் காணும் பாடல்களுள் ஒன்று வருமாறு:

**'சொக்க வெள்ளித் தட்டு—மிகத்**
**தூய வெண்ணெய்ப் பிட்டு**
**தெற்கத்தியார் சுட்டு—நல்ல**
**தேங்காய்ப் பாலும் விட்டு**
**வைக்கச் சொன்ன தோசை—அது**
**வயிரவட்ட மேசை;**
**பக்கமீன்கள் பலவே—ஒரு**
**பட்டத் தரசு நிலவே.'**

**—இளைஞர் இலக்கியம்: நிலா**

தொடக்க நாள் முதல் சாதி சமய பேதங்களை வெறுத்துச் சீர்திருத்த எண்ணமும் ஆவேசமும் கொண்டு தம் குன்றாத கொள்கைக்குப் போராடும் உயர் குணம் கொண்டவர் பாரதிதாசனார். புரட்சி உள்ளங் கொண்டு சமுதாயச் சீர்கேடுகளைச் சாடும் கவிஞர், 'காரிருளால் சூரியன் ஒளி மறைவதில்லை,' என்றும், 'கறைச் சேற்றால் தாமரை மலரின் மணம் மட்டுப்படுவதில்லை,' என்றும், 'பேரெதிர்ப்பால் உண்மை ஓடி ஒளியாது,' என்றும் கூறும் நெஞ்சுரம் மிக்கவர். அவர் வன்மை பெறக் கூறும் சில சீர்திருத்தக் கருத்துக்களைக் காண்போம்.

பெண் குழந்தைத் தாலாட்டில்:

**'மூடத்தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற**
**காடு மணக்கவரும் கற்பூரப் பெட்டகமே!'**

என்று பாடும் அவர், ஆண் குழந்தைத் தாலாட்டில்

''எல்லாம் அவன்செயலே என்று பிறர்பொருளை
வெல்லம்போல் அள்ளி விழுங்கும் மனிதருக்கும்,
காப்பார் கடவுள்உமைக் கட்டையில்நீர் போகுமட்டும்
வேப்பீர், உழைப்பீர் எனஉ ரைக்கும் வீணருக்கும்,
மானிடரின் தோளின் மகத்துவத்தைக் காட்டவந்த
தேனின் பெருக்கே! என் செந்தமிழே! கண்ணுறங்கு!'

என்று மூட மடமைக்கு முதலிற் சாவுமணி அடிக்கிறார்.

அடுத்துச் சாதி பேதச் சமயச் சழக்கினைக் கடிகிறார். 'பகுத்தறிவு ஒன்றே இப்பேய்களை வெருட்டி ஒட்டுவதாகும்' என்று ஓங்கி முழக்கமிடுகிறார் புரட்சிக் கவிஞர்:

'இருட்டறையில் உள்ளதடா உலகம்! சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின் றானே!
மருட்டுகின்ற மதத்தலைவர் வாழ்கின் றாரே!
வாயடியும் கையடியும் மறைவ தெந்நாள்?
சுருட்டுகின்றார் தம்கையில் கிடைத்தவற்றை;
சொத்தெல்லாம் தமக்கென்று சொல்வார் தம்மை
வெருட்டுவது பகுத்தறிவே! இல்லை யாயின்
விடுதலையும் கெடுதலையும் ஒன்றே யாகும்,'

—பாண்டியன் பரிசு: இயல் 56:3

'பொதுநலம் பேணாமல், தன்னலத்தைக் கொண்டிருப்போன் கடுகு போன்று சிறுத்த உள்ளத்தினன்,' என்றும், 'அவனால் எவருக்கும் பயனில்லை,' என்றும் கூறுகிறார்:

'தன்பெண்டு தன்பிள்ளை சோறு வீடு
சம்பாத்தியம் இவையுண்டு தானுண் டென்போன்
சின்னதொரு கடுகுபோல் உள்ளங் கொண்டோன்
தெருவார்க்கும் பயனற்ற சிறிய வீணன்!

—பாரதிதாசன் கவிதைகள்: உலக ஒற்றுமை

சாதி சமய பேதங்களையும் மூடப் பழக்க வழக்கங்களையும் முறியடித்து முன்னேற்றப் பாதையில் முனைந்து சென்று புத்துலகம் காண வேண்டும் என்ற புலவர் தம் எண்ணத்தினை,

**'சாதிமத பேதங்கள் மூடவழக் கங்கள்**
**தாங்கிநடை பெற்றுவரும் சண்டையுல கிதனை**
**ஊதையினால் துரும்புபோல் அலக்க ழிப்போம் பின்னர்**
**ஒழித்திடுவோம்; புதியதோர் உலகம் செய்வோம்:'**

என்ற அடிகளிற் காணலாம்.

'எல்லோரும் ஓர் நிறை' என்னும் ஒப்பற்ற உறுதிப்பாடான உண்மையினை,

**ஓடப்ப ராயிருக்கும் ஏழை யப்பர்**
**உதையப்ப ராகிவிட்டால், ஒரு நொடிக்குள்**
**ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி**
**ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப் பாரீ!'**

என்று அழுத்தம் திருத்தமாக—அதே நேரத்தில் ஆவேசக் குரலில்—முழங்குகின்றார் கவிஞர்.

எளியோரை வருத்தும் வலியோர் வாட்டம் நீங்கக் 'கொலை வாளினை எடடா!' என்று கட்டளை பிறப்பிக்கின்றார் கவிஞர்; மேலும் 'செத்து மடிவதிலும் சேர்ந்து பிறப்பதிலும் இவ்வுலக மக்களிலே என்ன பேதங் கண்டாய்?' என்று எதிரிகளைப் பார்த்து எக்காளமிடுகிறார். பிரபுத்துவ முறையினைக் கண்டிக்கும் போக்கில்,

**'எலியாக முயலாக இருக்கின் றார்கள்!**
**ஏமாந்த காலத்தில் ஏற்றங் கொண்டோன்**
**புலிவேஷம் போடுகின்றான்! பொதுமக் கட்குப்**
**புல்லளவு மதிப்பேனும் தருகின் றானா!'**

**—புரட்சிக் கவி**

என்று பாடுகின்றார் கவிஞர்.

'முப்பத்துமுக்கோடி மக்கள் வாழ்ந்தாலும், அவர்களுக்கிடையே உள்ள வேறுபாடுகளும் அத்தொகை இருக்கும்', என நொந்து பேசும் கவிஞர்,

**'உறுதியுடன் தமிழரெலாம் ஒன்றுபட்டால் எவ்வெதிர்ப்பும்**
**ஒழிந்து போகும்' —தமிழியக்கம்: 13**

என்று குறிப்பிடுகின்ருர்.

'இல்லாமைப் பிணியொழிந்து, கல்வி நலம் எல்லார்க்கும் வாய்க்க வேண்டும்' என்றும் கவிஞர் முரசு கொட்டுகிருர்.

'ஒருவனும் ஒருத்தியுமாய் மனம் உவந்திடில் பிழையென உரைப்பதுண்டோ?' என்று கவிஞர் காதல் திருமணத்தினை வரவேற்கிருர்.

**'ஏடி வடிவத்தின் ஆதிக்கமே!—மூடர்**
**எதிர்ப்பில் வெளிப்படும் நமது சக்தி!—மற்றும்**
**பேடி வழக்கங்கள் மூடத்தனம்—இந்தப்**
**பீடைகளேஇங்குச் சாத்திரங்கள்'**

என்று, 'மாந்தோப்பில் மணம்' என்னும் கவிதையில் குறிப்பிடும் கவிஞர், கைம்பெண் நிலைக்குக் கழிவிரக்கம் கொண்டு,

**'கோரிக்கை யற்றுக் கிடக்குதண்ணே இங்கு**
**வேரில் பழுத்த பலா'**

என்று கூறி,

**ஆடவரின் காதலுக்கும் பெண்கள் கூட்டம்**
**அடைகின்ற காதலுக்கும் மாற்ற முண்டோ?**
**பேடகன்ற அன்றிலைப்போல் மனைவி செத்தால்**
**பெருங்கிழவன் காதல்செயப் பெண்கேட் கின்ருன் ;**
**வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்**
**மணவாளன் இறந்தால்பின் மணத்தல் தீதோ?**
**பாடாத தேனீக்கள் உலவாத் தென்றல்**
**பசியாத நல்வயிறு பார்த்த துண்டோ?'**

என்னும் வினவை எழுப்பி, நம்மைச் சிந்திக்க வைக்கிருர்.

பொதுவுடைமைக் கருத்தில் உளம் தோய்ந்தவர் பாரதிதாசனுர். 'திருடர்களை உருவாக்குபவன் பொருளைக் குவித்து வைத்திருப்பவனே' என்றும், பொதுவுடைமையோன் 'அத்திருட்டைக் களைவிக்கிருன்,' என்றும் கருத்துரை வழங்கியுள்ளார்.

'எல்லார்க்கும் தேசம், எல்லார்க்கும் உடைமைஎலாம்
எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே!
எல்லார்க்கும் கல்வி சுகாதாரம் வாய்ந்திடுக!
எல்லார்க்கும் நல்ல இதயம் பொருந்திடுக!

—வீரத்தாய்

என்று விடுதலை முரசம் முழக்குகின்ருர் புரட்சிக் கவிஞர்.

பாரதிதாசனுர் பாடல்களில் வரும் உவமைகள் எளிய சிறிய உவமைகளாய் உருவகங்களாய் அமைந்து அரிய பெரிய கருத்துக்களை வழங்குகின்றன. எடுத்துக் காட்டுகள் சிலவற்றைக் காண்போம்;

**பாண்டியன் பரிசு:**

'பனைமரங்கள் இடிவிழக் கிழிந்து வீழும்
பான்மைபோல் இருதிறத்தும் மறவர் வீழ்ந்தார்'

—இயல் 5:2

'கைத்தூண்டிற் சிறுமீனுய்க் கலங்குகின்ற'

—இயல் 10:2

'நெய்யாலே மூண்டெழுந்த நெருப்பைப் போலே'

இயல்—19:2

'வல்லூறு குறிவைத்த புருப்போல் வாழும்
மலர்க்கொடியாள் அன்னத்தின் உள்ள மொன்று'

—இயல் 20:1

'செந்நீரில் புரளுகின்ற இரண்டுடம்பும்
தெண்ணீரின் கரைமீனுய்த் துடிக்கும்'

—இயல் 47:1

'அனற்கொள்ளி பட்டபிள்ளை கதறும் போதில்
அம்மாஎன் பதுபோலே'

—இயல் 37: 3.

'மணமிழந்த விரிமலரைப் போலிருந்தாள்.'

—இயல் 39:2.

'கேள்விஇலார் நெஞ்சம்போல் இருண்டு மீளும்
வழக்குடையார் செல்வம்போல் மின்னி மாய்ந்து
வண்பொருளை இழந்தான்போல் அதிர்ந்து பின்னர்
மழைக்கண்ணீர் உகுத்தது வான்!'

—இயல்53:1.

பழக்குலைமேல் எறிந்தகுறுந் தடியே போலப்
பாய்ந்ததொரு பெருங்காற்றுப் படகு நோக்கி!'

—இயல் 53:1

தீனியிட்டுக் கோழியினை மடக்கு வார்போல்
மூடிவிட்டார் பேழையினை.'

—இயல் 57:10

'கிளிக்கழுத்தின் பொன்வரிபோல் அரும்பும் மீசை
கீழ்க்கடலின் மாலைவெயில் கலந்த நீல
ஒளித்திரைபோல் தலைமயிர்ச்சங் கத்தின் தோற்றம்
உயிர்ப்பரிதி வான்போன்ற மேனி வாய்ந்தான்:'

—இயல் 62:4

'பணையி னின்று
'காய்இற்று வீழ்வதுபோல் நரிக்கண் ணன்தன்
கருந்தலைவீழ்ந் ததுவே அன் னத்தின் வாளால்!.

—இயல் 74: 1

## பாரதிதாசன் கவிதைகள்: I

'கோட்டைப் பவுன் உருக்கிச்—செய்த
குத்து விளக்கினைப் போன்ற குழந்தைகள்'

—இயல் 20: 1.

'வெள்ளம்போல் தமிழர் கூட்டம்.'

—இயல் 3:27

'கண்களும் ஒளியும் போலக்
கவின்மலர் வாசம் போலப்
பெண்களும் ஆண்கள் தாமும்'

—எந்நாளோ?: 9

பாரதிதாசன் கவிதைகள் II

'மல்லிகையின் அரும்புபோல் அலகும், நல்ல
மாணிக்கக் காலும்மணி விழியும் பால்போல்
துல்லியவெண் சிறகும்உற்ற பெண்பு ருவாய்த்
துலங்கினாள்.'

—கற்பனை உலகம்: 4

எதிர்பாராத முத்தம்:

' தணலிலே நின்றிருப்போர் தண்ணீரில் தாவுதல்போல்
எழுத்தினை விழிகள் தாவ இதயத்தால் வாசிக்கின்றான்'

—ஷை—8:2,3

பழைய மரபினையொட்டியும் பாடல்கள் பாடுவதில் பாவேந்தர் பாரதிதாசனார் வல்லவராய்த் திகழ்கிறார். சான்றாகக் 'காண்பவை எல்லாம் அவளே போறல்' என்ற தமிழ் இலக்கண மரபுப்படி, காதலியைக் காணாது ஏங்கித்தவிக்கும் காதலன், எப்பொருளை நோக்கினாலும் அப்பொருளில் தன் காதலியின் உருவத்தினையே காண்கின்றான்:

'ஆடப்போம் புனலிலெல்லாம் அவளே! காற்றில்
அசையப்போம் பொழிலிலெலாம் அவளே! கண்ணால்
தேடப்போம் பொருளிலெலாம் அவளே! நேரில்
தின்னப்போம் சுவையிலெலாம் அவளே! வண்டு
பாடப்போம் மலரிலெலாம் அவளே! மேற்கில்
படுகதிரில் அவள்வடிவே காண்பேன் என்று

**வாடக்கண் துயிலாமல் இருந்தான் வேலன்;**
**மலர்ந்திட்ட காலையிலும் அவளைக் கண்டான்.**

**—பாண்டியன் பரிசு: இயல், 76, 8.**

வருணிக்கும் போக்கில் அப்பொருளை நம் கண் முன்னர் அப்படியே கொண்டு வந்து காட்டுதல் கவிஞரின் தனித்திறனாகும். சான்றாகச் 'சஞ்சீவி பர்வதத்தின் சார'லின் தொடக்கத்தினைக் காண்க:

**'குயில்கூவிக் கொண்டிருக்கும்; கோலம் மிகுந்த**
**மயிலாடிக் கொண்டிருக்கும்; வாசம் உடையநற்**
**காற்றுக் குளிர்ந்தடிக்கும்; கண்ணாடி போன்றநீர்**
**ஊற்றுகள் உண்டு; கனிமரங்கள் மிக உண்டு;**
**பூக்கள் மணங்கமழும்; பூக்கள்தோறும் சென்றுதேன்**
**ஈக்கள் இருந்தபடி இன்னிசைபாடிக் களிக்கும்;**
**வேட்டுவப் பெண்கள் விளையாடப் போவதுண்டு;**
**காட்டு மறவர்களும் காதல்மணம் செய்வதுண்டு;**
**நெஞ்சில் நிறுத்துங்கள்; இந்த இடத்தைத்தான்**
**சஞ்சீவி பர்வதத்தின் சாரல்என்று சொல்லிடுவார்.**

இதுபோன்றே எதிர்பாராத முத்தத்தில் கதைத் தலைவி பெண்ணழகி பூங்கோதை—வள்ளியூர் மறை நாய்கன் வீட்டுப் புள்ளிமான்—நீலப் பூவிழி நிலத்தை நோக்க, கோலச் சிற்றிடை கொடிபோல் துவள, நிறப் பட்டாடை காற்றில் நெகிழ, பாதச் சிலம்பு பாட, நிலா முகம் சீதளம் சிந்த, செவ்விதழ் மின்ன, செப்புக் குடத்தில் இடக்கை சேர்த்து, அப்படியிப்படி வலக்கை அசைத்து, அன்னப்பேடுபோலத் தண்ணீர்த் துறைக் குச் சென்றாள், ' என்று எழிலுற வருணித்துள்ளார்.

'காதல்' வாழ்வு, குறித்து வசனகவிதை போன்று பாவேந்தர் எழுதியுள்ளவை சிந்தையை மகிழ்வித்துக் கருத்தைக் கவர வல்லனவாகும். அவற்றில் இரு பகுதி கள் காதலின் ஆழத்தைக் காட்டுவனவாயுள்ளன.

"கெண்டைகள் துள்ளி விளையாடி நீரின் அடி மட்டத்தில் அள்ளி நுகர்வன இன்பத்தை!"

"நாமும் அங்கு இன்பம் நுகர்வோம்—அடடா நாம் மீன்களல்லவே!"

"கண்ணிமைப்போது நான் நீருக்குள் ஒளிந்து கொள்கிறேன். பிற்பகுதியும் கேள்."

"நிறுத்துங்கள்! முற்பகுதியே என் பாதி உயிரைப் போக்கிவிட்டது."

"மாற்றிச் சுவைக்கும் நான்கு விழிகள் தம்மிற் பிரியாமல் நீராடின."

—காதல் வாழ்வு: ஐந்து

"தேம்பி அழுது திட்டென்று வீழ்ந்து கண்ணீரை ஆருய்ப் பெருக்கினை அன்புடையாளே!"

"இறக்கமாட்டேன் அத்தான்! உன்னை விட்டுப் பிரியவில்லை, என்று நீங்கள் உறுதி கூறுமட்டும்."

"கடமை என் வாயை அடைக்கிறது."

"என் மடமை கிடந்து துடிக்கிறது.,,

"மடமை அல்ல; உயிரின் இயற்கை."

"தந்தை சொற்படி நடக்கட்டும் என் அத்தான் என்று என் நெஞ்சுக்குக் கூற என்னுல் முடிகிறது; உயிருக்குச் சொல்லி நிறுத்த முடியவில்லை..'

—காதல் வாழ்வு:எட்டு

கவிஞர் அவர்களின் 'அமைதி' ஒரு புது முயற்சி யாகும். "இச்சிறு நாடகம் நாடக உறுப்பினர்—நடிகர் எவருக்கும் பேச்சில்லாது, நிகழ்ச்சிகளைக் கண்ணுல் காணுவதால் மட்டும் கருத்தறியுமாறு அமைக்கப் பெற்றுள்ளது," எனக் கவிஞர் நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளது போன்றே ஊமை நாடகமாய் அமைந்துள்ளது. 'அமைதி'யில் வீறிடும் செயல்களைக் காண்க:

"அடுத்த சிற்றூரில் நுழைகிருன்; பகலவன் மேற்றிசையில் விழுகிருன். பறவைகள் தழைக்கிளைகளில் அடங்குகின்றன. குடிசைகளில் விளக்கேற்றப் படுகின்றது. பனி புகைகின்றது. ஊரின் பொதுச் சாவடியில் ஒரு கிழவி மேலாடையின்றித் தன் கையால் மெய் போர்த்துக் குளிரால் நடுங்கியபடி மூலையில் ஒண்டியிருக்கிருள். மண்ணுங்கட்டி காணுகிருன். அவன் முகம் துன்பத்தை யளாவுகின்றது."

—அமைதி: நான்கு

நாடக நிகழ்ச்சி போல் நெஞ்சக் கடலில் நினைவலைகள், அடிக்கடி ஒன்றன்பின் ஒன்ருகக் காட்சிகள் தொடரும் திரைப்படம் போன்று, நிகழ்ச்சிகளை அடுக்கிக்கொண்டு போகும் கலை, கவிஞர்க்கு நன்கு கைவந்த கலை என்பதைப் பின்வரும் பாடற் பகுதி கொண்டு அறியலாம்.

**'நெஞ்சத்தில் அவள் வந்தாள்: கடைக்கண் ணுல்என்**
**நிலைமைதனை மாற்றிவிட்டாள்; சிரித்தாள்; பின்னர்க்**
**கஞ்சமலர் முகத்தினையே திருப்பிக் கோபம்**
**காட்டினுள்; பூ மலர்ந்த கூந்தல் தன்னில்**
**மிஞ்சும்எழில் காட்டினுள்! அவன்தன் கோபம்**
**மிகலாபம் விளைத்ததன்ருே என்ற னுக்கே!**
**அஞ்சுகமே வா! என்று கெஞ்சி னேன் நான்:**
**அசைந்தாடிக் கைப்புறத்தில் வந்து சாய்ந்தாள்.**

**—பாரதிதாசன் கவிதைகள் 1; கற்பனை உலகில்: 2**

இவ்வாருகக் கவிதைக் கலையின் கவினை வகையுறக் கண்ட கவிஞரேறு பாரதிதாசனரின் கவிதைகள் தமிழ் உள்ளளவும் நிலைத்து வாழும். அவருடைய மறைவு குறித்துப் பேராசிரியர் 'டாக்டர் மு. வரதராசனர்' அவர்கள் குறிப்பிடும் கருத்துகளை ஈண்டுத்

தருதல், உள்ளபடியே அவர் தம் கவிதைச் சிறப்பின் சிறந்த நிலையினைப் புலப்படுத்துவதாகும். அப்பகுதி வருமாறு:

"புரட்சிக் கவிஞர் என்றாலே இந்த நூற்றாண்டிலும் இதற்கு முந்திய நூற்றாண்டிலும் வேறு யாரையும் குறியாமல், பாரதிதாசனார் ஒருவரையே குறிக்குமாறு, **தமிழிலக்கிய வரலாற்றிலே அவர் சிறப்பிடம் பெற்றுவிட்டார்.** சிறந்ததை மிக மிக விரும்பிப் போற்றுதலும், தீயதை மிக மிக வெறுத்துத் தூற்றுதலும் அவர் இயல்பு. இந்த நாட்டிற் புகுந்து சமுதாயத்தில் இடம் பெற்று விட்ட தீய பழக்க வழக்கங்களையும் மூடக்கருத்துக் களையும் கடிந்து பாடி, படிப்பவர் உள்ளத்தில் புத்துணர்ச்சியை எழுப்பிய புரட்சியாளர் அவர். அவரு டைய பாட்டுகளில் விழுமிய கற்பனையும் உண்டு; வேகமான உணர்ச்சியும் உண்டு. பழந்தமிழ் மரபும் உண்டு; புத்துலகச் சிந்தனையும் உண்டு. தமிழர் வாழ்வுக்கு அவர்தம் எழுத்தும் பேச்சும் அரண் செய்து வந்தன. அவர் பிரிவு தமிழினத்துக்குப் பெரிய இழப்பாயிற்று."

இதுகாறும் கூறியவற்றால், பாவேந்தர் பாரதி தாசனார் தமிழ் இலக்கியவரலாற்றில் நிலையான இடம் பெற்று வாழும் கவிஞர் என்பது நன்கு விளங்கும். கால வெள்ளத்தையும் கடந்து வாழும் அவருடைய கவிதைகள் சிந்தையை மகிழ்விக்கும் வற்றாத செந் தமிழ்க் கருவூலங்களாகும்.

## 7. நாமக்கல் கவிஞர் திரு. வே. இராமலிங்கம் பிள்ளை

கி. பி. 1888ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 29ஆம் நாள், போலீஸ் துறையில் பணியாற்றிய 'வெங்கடராம பிள்ளை'க்கும் அவர் மனைவியார் 'அம்மணி அம்மாளு'க்கும் பிறந்தவர் இராமலிங்கம் பிள்ளை அவர்கள். ஏழு பெண்களுக்குப் பிறகு பிறந்த முதல் ஆண் மகன் ஆனதால், இவர் செல்வமாக வளர்க்கப்பட்டார். இளமையிலேயே ஓவியக் கலையிலும் கவிதைக் கலையிலும் ஈடுபட்ட இவர், தம் தந்தையார் பணியாற்றிய போலீஸ்துறை வேலைக்குப் போவதனை வெறுத்தார். இதனால் தந்தையாரோடு மனவேறுபாடு கொண்டு வீட்டை விட்டு வெளியேறிய இவர், பின்னர் வீட்டுக்கு அழைத்து வரப்பட்டுத் தாலுக்கா அலுவலக வேலையும், ஆசிரியர் வேலையும் பார்த்தார். பின்னர்த் தம் மனத்திற்கிசைந்த ஓவியக் கலையினையே பணியாக மேற்கொண்டார். கல்வி கற்கும் நாளில் கல்லூரி முதல்வர் எலியட்டுத் துரையிடம் பெற்ற பரிசுப் பட்டியல், 'ஐந்தாம் ஜார்ஜ்' அரசர் வரையில் பரிசு பெறும் நிலைக்கு நீண்டது. மகாகவி பாரதியாரும் ஒருமுறை இவரிடம் 'பிள்ளைவாள்! நீர் நம்மை ஓவியத்தில் தீட்டும், நாம் உம்மைக் காவியத்தில் தீட்டுவோம்,'' என்று, இவர்தம் ஓவியக்கலைத் திறமையை உளம் உவந்து பாராட்டியுள்ளார்.

ஓவியக்கலையில் மட்டுமின்றிக் காவியக் கலையிலும் கவிதைக் கலையிலும் திரு. இராமலிங்கம் பிள்ளை வல்லவர் என்பதை முன்பே குறிப்பிட்டோம். ஓவியக்கலை

யினைப் பாராட்டிய பாரதியாரே இவரை, "பலே பாண்டியா! பிள்ளை! நீர் ஒரு புலவர்; ஐயமில்லை," என்று இவரைப் புலவரென மதித்துப் பாராட்டியுள்ளார்.

தொடக்க நாட்களில் அக்காலத்தில் நாடகத்துறையில் நற்பெயரும் புகழும் ஈட்டிய 'கிட்டப்பா'வின் நாடகங்களுக்கு இவர் திரைச் சீலைகளும் (Scenes) பாடல்களும் எழுதிக் கொடுத்துள்ளார்.

கவிஞர் பிறந்த காலத்தில் நாடெங்கும் அரசியல் கொந்தளிப்பு நிலவியது. அடிமைத்தளையை வேரோடு அறுத்தெறிய வேண்டுமென்று அண்ணல் காந்தியின் தலைமையில் மக்கள் கிளர்ச்சி செய்து வந்தார்கள். இந்த விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொள்ள விருப்புக் கொண்டார் கவிஞர். காந்தியக் கருத்துக்கள் கவிஞர் நெஞ்சில் ஊன்றின. நம் நாட்டு விடுதலை வரலாற்றில் காந்தியடிகள் நடத்திய தண்டி உப்புச் சத்தியாக்கிரகம் பெயர் பெற்றது. தமிழ் நாட்டில் அதே நேரத்தில் 'ராஜாஜி' அவர்கள் தலைமையில் வேதாரணியத்தில் உப்புக் காய்ச்ச ஒரு தொண்டர் படை சென்றது. அந்த நாட்டு விடுதலைத் தொண்டர்கள், கவிஞர் அவர்கள் எழுதிக் கொடுத்த பின்வரும் பாடலைப் பாடிச் சென்றனர்.

**'கத்தியின்றி ரத்த மின்றி**
**யுத்தமொன்று வருகுது**
**சத்தி யத்தின் நித்தி யத்தை** **(சத்)**
**நம்பும் யாரும் சேருவீர்!'**
**'ஒண்டி அண்டிக் குண்டு விட்டு**
**உயிர்ப றித்த லின்றியே**
**மண்ட லத்தில் கண்டி லாத**
**சண்டை யொன்று புதுமையே'** **(கத்)**
**'குதிரை யில்லை யானை யில்லை**
**கொல்லும் ஆசை இல்லையே!**

எதிரி யென்று யாரு மில்லை
 எற்றும் ஆசை யில்லதாய்' (கத்)
'கோப மில்லை தாப மில்லை
 சாபங் கூறல் இல்லையே
பாபமான செய்கை யொன்று
 பண்ணு மாசை யின்றியே (கத்)
'கண்டதில்லை கேட்டதில்லை
 சண்டை யிந்த மாதிரி
பண்டை செய்த புண்ணியம்ப
 லித்ததேநாம் பார்த்திட (கத்)
'காந்தி யென்ற சாந்த மூர்த்தி
 தேர்ந்து காட்டும் செந்நெறி
மாந்தருக்குள் தீமை குன்ற
 வாய்ந்த தெய்வ மார்க்கமே.' (கத்)

இந்தப் பிரசித்தி பெற்ற பாட்டுத்தான் நாமக்கல் கவிஞரை நம் தமிழ்மக்களுக்கு நன்கு அறிமுகப்படுத்தி வைத்தது. எவரையும் எளிதிற் புகழ்ந்து விடாத ராஜாஜியும், இந்தப் பாட்டுத் தொண்டர்களுக்கு ஊட்டிய உற்சாகத்தினை நேரில் உணர்ந்து, "இந்நேரம் பாரதியார் இல்லையே என்று எண்ணினேன்; ஆனால், அந்தக் குறையை நீங்கள் நீக்கிவிட்டீர்கள்!" என்று கவிஞருக்கு ஒரு கடிதம் எழுதினார்.

இவ்வளவு புகழ் பெற்ற கவிஞர் அவர்கள், அடக்கமே உருவானவர்கள்; அறநாட்டம் மிகுந்தவர்கள். பண்பும் பணிவும் அன்பும் அறிவும் நிறைந்தவர்கள். 'தன்னைத் தானே தாழ்த்திக் கொள்பவன் பிறரால் உயர்த்தப்படுவான்,' என்பது புனித ஏசு நாதரின் திருவாக்கு. அக் கூற்றிற் கிணங்கக் கவிஞர்,

'பாரதி பாட்டைக் கண்ட
 பழையஇத் தமிழர் நாட்டில்

'யாரது?' என்று கேட்க
யானுமிக் கவிகள் சொன்னேன்.'

என்று தம்மை அடக்கத்தோடு அறிமுகப்படுத்திக் கொள்கிருர்.

இனி, இவரது கவிதையின் பெற்றியினைக் காண் போம்:

'தமிழன் இதயம்', 'சங்கொலி', 'காந்தி அஞ்சலி' தமிழ்த்தேன்' முதலியன இவருடைய கவிதை நூல்கள். 'அவனும் அவளும்' என்பது இவர் இயற்றிய காவியம். இவரது வரலாறு கூறும் நூல், 'என் கதை' எனப்படுவது. 'இலக்கிய இன்பம்' என்பது இவர் எழுதிய இலக்கியக் கட்டுரைத் தொகுதி. திருக்குறளுக்குப் புத்துரை எழுதியிருக்கும் கவிஞர், நல்ல நாவலாசிரியருமாவர். இவர் எழுதிய 'மலைக்கள்ளன்' என்னும் நாவல் திரைப்படமாய் வந்து, மக்களுடைய பாராட்டுதலினையும், மத்திய அரசினரின் பரிசினையும் ஒரு சேரப் பெற்றது. ஏறத்தாழ முப்பது நூல்களை இவர் எழுதியுள்ளார்.

'தமிழன் இதயம்' என்னும் நூலில் தமிழினப் பெருமையினைத் தரணிக்குப் பறை சாற்றுகின்ருர் கவிஞர்:

'தமிழன் என்ருெரு இனமுண்டு
தனியே அவற்கொரு குணமுண்டு;
அமிழ்தம் அவனுடை மொழியாகும்;
அன்பே அவனுடை வழியாகும்'

எளிய சொற்களைக் கொண்டு உயரிய எண்ணங்களை உருவாக்குகின்ருர் கவிஞர் என்பதனை இப்பாடல்களைப் படிப்பவர் உணர்வர்.

நாத்திக வாடை நாட்டிலே தலை விரித்தாடி நிலையில், கவிஞர் அவர்கள் இறைவன் இருப்பை விளக்கி, எல்லா மதத்தவரும் இனிது வாழ வேண்டிய வழியினை வகையுற எடுத்து மொழிகின்ருர்.

சூரியன் வருவது யாராலே?
சந்திரன் தெரிவது எவராலே?
காரிருள் வானில் மினிமினிபோல்
கண்ணிற் படுவன அவை என்ன?
பெருமழை பெய்வது எவராலே?
பேரிடி மின்னல் எதனாலே?
ஆரிதற் கெல்லாம் அதிகாரி?
அதைநாம் எண்ணிட வேண்டாவோ!

என்று, தோன்றாத் துணையாய் நின்று உயிர்களை இயக்கும் இறைவன் செயல்களைக் குறிப்பிட்டு, இறை வழிபாட்டின் இன்றியமையாமையினை அடுத்துக் குறிப்பிடுகின்றார் கவிஞர்:

'அல்லா வென்பார் சிலபேர்கள்;
அரன் அரியென்பார் சிலபேர்கள்;
வல்லான் அவன்பர மண்டலத்தில்
வாழும் தந்தை என்பார்கள்;
சொல்லால் விளங்கா 'நிருவாணம்
என்றும் சிலபேர் சொல்வார்கள்;
எல்லா மிப்படிப் பலபேசும்
ஏதோ ஒருபொருள் இருக்கிறது!

'அந்தப் பொருளை நாம்நினைத்தே
அனைவரும் அன்பாய்க் குலவிடுவோம்!
எந்தப் படியாய் எவர் அதனை
எப்படித் தொழுதால் நமக்கென்ன?
நிந்தை பிறரைப் பேசாமல்,
நினைவிலும் கெடுதல் செய்யாமல்,
வந்திப் போம் அதை வணங்கிடுவோம்;
வாழ்வோம் சுகமாய் வாழ்ந்திடுவோம்!'

—தமிழன் இதயம் : யாராலே

படைத்தவனை எண்ணாது பணத்தையே நாட்டமாய்க் கொண்டுழலும் பணப்பித்தர்களை,

**'பாழும் பணத்தைத் தேடிப்**
**படும் பாடு கணக்கில்லே**
**பகவானை எண்ண மட்டும்**
**அவகாசம் உனக்கில்லே.'**
**—தமிழன் இதயம் : நெஞ்சோடு இரங்கல்**

என்று சாடுகின்றார்.

'கடவுளை அறிந்தவர்கள்' என்னும் கவிதையிலே உண்மையான பத்தர்களைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**'துன்பப் படுவோர் துயரம் சகியார்**
**துடிதுடித் தோடித் துணைசெயப் புகுவார் ;**
**இன்பம் தமக்கென எதையும் வேண்டார்;**
**யாவரும் சுகப்படச் சேவைகள் பூண்பார்.'**

என்று குறிப்பிட்டு, இத்தகையவரே கடவுளை அறிந்தவராவர் என்றும், அனைவரும் மதித்திடத் தகுந்தவராவர் என்றும் அறிவிக்கின்றார்.

பாட்டின் திறத்தாலே பாரினை உயர்த்திட வந்தவர்களெனக் கம்பனையும் காளிதாசனையும் தியாகையரையும் பாரதியையும் கவிஞர் குறிப்பிடுகின்றார்:

**'கவிபாடிப் பெருமைசெயக் கம்ப னில்லே;**
**கற்பனைக்கிங் கில்லேயந்தக் காளி தாசன்;**
**செவிநாடும் கீர்த்தனைக்குத் தியாக ரில்லே;**
**தேசீய பாரதியின் திறமும் இல்லே.'**

காந்தியக் கொள்கையில் வெறியுடையவர் நாமக்கல் கவிஞர். காந்தியைப் பற்றி இவர் பாடியுள்ள பாடல்கள் பலவும் இதனை மெய்ப்பிக்கின்றன. 'உவமானம் வேறெவரும் உரைக்கவொண்ணு உத்தமராம் காந்தியாரை' இவர் உவந்து பேசுகின்றார்.

**'உள்ளம் உருகுது கள்ளம் கருகுது**
**உத்தமன் காந்தியை நினைந்துவிட்டால்!**

வெள்ளம் பெருகிட கண்ணீர் வருகுது
வேர்க்குது இன்பமும் தேக்குதடா!'

—தமிழன் இதயம்: உத்தமன் காந்தி

என்று காந்தி பத்தியில் மூழ்கிக் கவிஞர் பாடுகின்றார்.

சாந்தி சாந்தி சாந்தி யென்று
சங்கு கொண்டு ஊதுவோம்;
சோர்ந்தி ருக்கும் உலகி னுக்குச்
சுகமெ டுத்து ஓதுவோம்!
மாந்த ருக்குள் கோப தாப
வாது சூது மாறவே
காந்தி சொன்ன மார்க்க மன்றிக்
கதிநமக்கு வேறிலை.'

—தமிழன் இதயம் : காந்தீய சேவை

என்று காந்தியத்தில் கருத்தூன்றிய இக்கவிஞரை, ராஜாஜி அவர்கள், 'திலகர் விதைத்த வித்து, பாரதியாய் முளைத்தது, காந்தி தூவின விதை நாமக்கல் கவிஞராய்த் தோன்றியது,' என்று பொருத்தமுறப் புகன்றுள்ளார்கள்.

'பாம்பறியும் பாம்பின் கால்' என்ற பழமொழிப்படி பாரதியாரின் கவிதைச் சிறப்பினைக் கவிஞர் மனம் விட்டுப் பாராட்டுகின்றார்:

'படித்தறியா மிக ஏழைக் கிழவ னேனும்,
பாரதியின் பாட்டிசைக்கக் கேட்பா னாகில்,
துடித்தெழுந்து தன்மெலிந்த தோளைக் கொட்டித்
தொளைமிகுந்த கந்தலுடை சுருக்கிக் கட்டி
'எடுத்தெறிய வேணுமிந்த அடிமை வாழ்வை
இப்பொழுதே இக்கணமே!' என்றென் றார்த்து
அடித்துரைத்தே ஆவேசம் கொள்வா னென்றால்
அப்பாட்டின் பெருமை சொல யாரோ வல்லார்?'

—தமிழன் இதயம் : பாரதி பாட்டு

மேலும், புலமைக்காய்ச்சல் என்பதின்றிப் புலவரைப் புலவரே பாராட்டிப் பாடும் பண்பு மேம்பாட்டினையும் இப்பாடலில் நாம் காண்கின்றோம்.

இனிய இசைப்பாடல்களை இயற்றி இசைத் தமிழிற்கும் ஏற்றமான தொண்டினை நாமக்கல் கவிஞர் நலம்பட ஆற்றியுள்ளார்:

**'தாயே வந்தனம்—இந்தியத்**
**தாயே வந்தனம்'**

**'சுதந்திர சூரியன் உதிக்கிற நேரம்**
**தூங்கா தேதமிழா!'**

**'நல்ல சமயமடா!—இதை**
**நழுவ விடுவாயோ?'**

**'தமிழ னென்று சொல்லடா!**
**தலை நிமிர்ந்து நில்லடா!'**

**'கொடி பறக்குது கொடிபறக்குது**
**கொடிப றக்குது பாரடா!**
**கோண லற்ற கோலில் எங்கள்**
**கொடி பறக்குது பாரடா!'**

**'ஆடு ராட்டே சுழன் றுடுராட்டே**
**சுழன்று சுழன்றுசுழன் றுடுராட்டே!—இனிச்**
**சுயராஜ்யம் வந்ததென்று ஆடுராட்டே!'**
**'கொஞ்சும் கிளிமொழிக் கோதையரே நாம்**
**கூடி யாடுவோம் கோலாட்டம்'**

என்னும் இத்தகைய இசைப்பாடல்கள் எளிமையும் இனிமையும் கொண்டு இலங்குகின்றன.

'தமிழில் இசை பாடுவதா!' 'தமிழில் இசைப்பாடல்கள் உண்டா?' என்றெல்லாம் கேள்வி எழுந்தபொழுது

சங்கீதம் பாடுதற்கும் மொழிக்கும் என்ன
சம்பந்தம் என்றெவரும் சாதிப் பாரேல்
இங்கேதும் தடையில்லை; ஏற்றுக் கொள்வோம்;
எல்லாமே தமிழ்ப்பாட்டா யிருந்தா லென்ன?
சிங்கார வாதங்கள் பலவும் பேசிச்
சிறப்பான முயற்சியிதைச் சிதைக்க லாமோ?
தங்காமல் தயங்காமல் தளர்ந்தி டாமல்
தமிழ் நாட்டார் இச்செயலைத் தாங்க வேண்டும்!'
—தமிழன் இதயம்: தமிழ் இசை.

என்று, தமிழ் இசை இயக்கத்திற்கு ஆதரவு நல்குகிறார் கவிஞர்.

'கலையென்றால் உணர்ச்சிகளைக் கவ்வ வேண்டும்;
களிப்பூட்டி அறிவினைப்போய்க் கவ்வ வேண்டும்!

என்று கலைக்கு இலக்கணம் கூறும் கவிஞர், கைத் தொழிலின் மேன்மையினை,

கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்;
கவலை உனக்கில்லை ஒத்துக்கொள்;
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருந்திடல் உனக்கே சரியாமோ?'

என்ற பாடலில் புலப்படுத்துகின்றார்.

'பாட்டாளி' மக்களின் பசி தீரவும்; பணமென்ற மோகத்தின் விசை தீரவும், கூட்டாளி வர்க்கங்கள் குணம் மாறவும். புதிய சமுதாயம் ஒன்று காண வேண்டும்'' என்று, உலகிற்குக் கவிஞர் அறை கூவல் விடுக்கின்றார்.

'மான்சேர மயிலாடக் குயில்பாட மலர்கள்
தேன் சோர மகரந்தம் திசைதோறும் சிதற
மீன்சேரும் சிற்றோடை மெல்லோசை தவழும்
பூஞ்சோலை அதிலுற்றுப் புளகித்து மகிழ்வோம்!'
—தமிழ்த்தேன்: பூஞ்சோலை

என்று பூஞ்சோலையை வருணிக்கும் கவிஞர், சில நேரங்களிலேதான் இயற்கை குறித்துப் பாடுகின்றார். பெரும்பாலும் மக்களைப் பற்றிப் பாடும் கவிஞராகவே இவர் துலங்குகின்றார்.

எளிய சொற்கள், எளிய நடை, எளிய சந்தம் இவற்றினைக் கொண்டு, பொதுமக்கள் விரும்பும் முறையில் இயற்றப்பட்ட காவியமே, 'அவளும் அவனும்' என்பது. இக்காவியம் கவிஞர் தம் படைப்பில் சீரிய இடத்தினைப் பெறுகின்றது. முதற்கண் 'அவளை' அறிமுகப்படுத்தி வைக்கும் கவிஞர்தம் கவிதையில், பாட்டின் சிறந்த பெற்றியினையெல்லாம் ஒருங்கே காணலாம்.

**'மான்' என அவளைச் சொன்னால்**
**மருளுதல் அவளுக் கில்லை;**
**'மீன் விழி உடையா' ளென்றால்**
**மீனிலே கருமை இல்லை;**
**'தேன்மொழிக் குவமை சொன்னால்**
**தெவிட்டுதல் தேனுக்குண்டு;**
**'கூன்பிறை நெற்றி என்றால்**
**குறைமுகம் இருண்டு போகும்!'**

**—அவளும் அவனும்: அவள்.**

என்று காவியத் தலைவி கமலத்தை நமக்கு அறிமுகப் படுத்துகின்றார். முழுப்பாடலையும் படித்தால் கவிஞரின் கற்பனைச் சிறப்பும் கவிதை நயமும் நன்கு புலனாகும்.

அடுத்து, காவியத் தலைவன் மாதவனை,

**'நீண்டன கைகள்: ஆழ்ந்து**
**நிமிர்ந்தது அகன்ற மார்பு;**
**தீண்டிடக் கல்லைப் போலத்**
**திரண்டன இரண்டு தோளும்;**
**தூண்எனத் தோன்றும் கால்கள்;**
**துணைதர நடக்கும் பாதம்;**

ஆண்தகை முற்றும் தக்க
அளவொடு அமையப் பெற்றேன்'
—அவளும் அவனும்-அவன்

என்று அறிமுகப்படுத்துகின்றார்.

கவிஞர் இக்காவியத்தில் சிலவிடங்களில் பிற மொழிச் சொற்களையும் கையாண்டுள்ளார். "ஓடிய குதிரை உடனே நின்றது. எதையோ பார்த்து எகிறிக் குதித்து மருண்டு வெருண்டு **மக்கர்** செய்தது'', என்று கவிஞர் 'மக்கர்' என்ற அரபுச் சொல்லினை ஆண்டுள்ளார்.

கமலத்திற்கும் மாதவனுக்கும் காதல் பிறந்த கதையினைக் கவிஞர்,

'ரயிலில்', 'மெயிலில்' ராத்திரி வண்டியில்
இஞ்சின் முன்னால் இருட்டை விரட்டிடும்
இரண்டு விளக்குகள் ஏககா லத்தில்
தன்னுடைக் கண்களைத் தாக்குதல் போலத்
தகதக வென்று தன்னையே பார்த்தன!
கண்கள் கூசினன்;உள்ளம் களித்தது!'

என்று குறிப்பிடுகின்றார். மேலும், 'இசை' என்பது கருத்துடன் ஓசையும் இசைவது என்றும், 'சங்கீதம்' என்பது ஓசையின் சங்கதி என்றும், 'கவிதை' என்பது கற்பனை உள்ளது என்றும், 'காமம்' என்பது தேகம் கலத்தல் என்றும், 'காதல்' என்பது அறிவு உணர்ச்சி ஆன்மாவினோடும் கலந்து போவது என்றும் கவிஞர் விளக்கங் கூறியுள்ளார்.

பெண்ணின் பேரழகினை,

'மகரந் தப்பொடி மிகவும் படிந்து
பொன்னிறம் மிஞ்சிய செந்நிலப் பூவென,
தங்க நிறத்தொரு தாமரை மலர்போல்,

**நிலத்திற் கிடக்கும் நிறங்களை நீக்கி**
**வான வில்லின் வர்ணம் தீட்டிய**
**சித்திர மோ! ஒரு சிலையோ! பெண்ணே!'**

என்னும் அடிகளில் வருணித்துள்ளார்.

முழுநிலவினை வருணிக்கும் கவிஞர், அந்நிறை நிலா, அழுகின்ற குழந்தைக்கு அம்புலியாகவும், விளையாடும் சிறுவர்க்கு வீதி வெளிச்சமாகவும், உலாவுகின்றவர்களுக்கு உல்லாச ஒளியாகவும், தெருக் கூத்துக்குத் திரை விளக்காகவும், களியாட்டங்களின் காரணக் கருவியாகவும், கள்ளர்கள் அஞ்சும் காவற் காரனுகவும், காதல் கண்டவர் அமுதக் கலசமாகவும், காமப் பித்தரைக் கருக்கும் கனலாகவும், கலைஞருக் கெல்லாம் கற்பனை ஊற்ருகவும், கலைகளுக்கெல்லாம் கவிதையாகவும், தெய்வம் காட்டும் திருவிளக்காகவும் இருப்பதாக இயைபுணர்ந்து கூறியுள்ளார்.

கவிஞர், 'அவளும் அவனும்' என்னும் காவியத் தில் கையாண்டிருக்கும் உவமைகள் பின் வருவன வாகும்:

**முன்விளக் கவிந்த 'மோட்டார் கார்' என,**
**டங்குவார் அறுந்த ஜட்கா வண்டிபோல்,**
**கைத்தடி இழந்த கிழவன் கணக்காய்,**
**ஊற்றுமை தீர்ந்த பேனாவின் ஒப்பாய்,**
**தாளம் கெட்ட சங்கீ தம்போல்,**

என்றும்,

**'மோனம் பலித்த முத்தரைப் போல்'**

என்றும்,

**'மரணதண் டனையில் மன்னிப் படைந்து**
**விடுதலை பெற்று வீட்டுக்கு வந்த**
**குற்ற வாளியின் குதூக லத்துடன்'**

என்றும் இவர் ஆண்டிருக்கும் உவமைகளை, சொல்

ளின் செல்வர் 'பேராசிரியர் சேதுப்பிள்ளை' அவர்கள் பாராட்டியுள்ளார்.

'சங்கொலி எழுந்தது! சங்கட மழிந்தது!
தைரியம் கொள்வாய் தமிழ்மகனே!'

என்று சங்கநாதம் செய்யும் கவிஞரை, கவிஞர் திரு. 'பெ. தூரன்', "காந்தியத்தை இனிய கவிகளால் ஒலிக்கும் தமிழ்ச்சங்கு" என்று பாராட்டுகின்றார்' கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை,

'சிந்தனையால் வாக்கதனால் செய்கை தன்னால்
தேசத்திற் கோயாது தொண்டு செய்தோன்'

என்று புகழ்ந்துரைத்துள்ளார்.

இவ்வாறு காந்திய நெறியை தம்மைக் கவர்ந்த நெறியெனக் கொண்டு, காந்தியக் கருத்துகளையே தம் வாழ்நாளில் கவிதை வாயிலாகப் பரப்பிய நாமக்கல் கவிஞர் திரு. வே. இராமலிங்கம் பிள்ளை அவர்களை' நாம் 'காந்தியக் கவிஞர்' என வழங்குவோமாக!

'கன்னி முதல் வேங்கடத் தமிழ்நாடு முழுவதும்
காந்தீய சேவை செய்யக்
களைதீரும் சத்திய சாந்தநெறி பாடிடும்
கவிராம லிங்கன்'

என்று, கவிஞர் தாம் வரைந்தனுப்பிய சீட்டுக் கவி யொன்றில் தம்மைக் 'காந்திய சேவை செய்யக் களை தீரும் சத்திய சாந்த நெறி பாடிடும்' கவிஞரெனக் குறிப்பிட்டுள்ளார். காந்தி யுகத்தின் காந்தியக் கவிஞராய் விளங்கும் இவர் கவிதைகள், யாராலும் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய எளிய கவிதை களாகும்.

## 8. உவமைக் கவிஞர் சுரதா

கலை மலிந்த தஞ்சை மாவட்டத்தில், சிங்கார வேலன் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிக்கல் நகரையடுத்த பழையனூரில் பிறந்த 'கவிஞர் சுரதா' இராசகோபாலன் என்னும் இயற்பெயர் கொண்டவர். சிறந்த சொற்களைச் சிறந்த முறையில் சிறந்த இடங்களில் ஆண்டு, சொல்லாட்சி நிறைந்த கவிதைகள் பல வற்றை இவர் உருவாக்கியிருக்கிருர். உவமைகளை இவர் கையாளும் நயம் இவருக்கே சிறக்கக் கைவந்த கலையாகும். புதிய புதிய உவமைகளைப் பொருட் பொருத்தமுற ஆளுகின்ற சிறப்பால், இவர் 'உவமைக் கவிஞர்' என்று உவகையோடு பலரால் வழங்கப்படுகின்ருர்.

இனி, கவிஞர் சுரதா அவர்கள் இயற்றியுள்ள 'தேன் மழை' என்னும் கவிதைத் தொகுதியினைக் காண் போம். பல்வேறு துறைகளை உள்ளடக்கிய பதினுறு தலைப்புகளில் கவிஞரவர்கள் சிந்தனை சென்று செய்யுள் வடிவம் பெற்றுப் பாடும் நா மணக்கும் பாக்களாய் வெளிப்பட்டுள்ளன. பாரதியாருக்கு ஒரு தாசர் கிட்டினுர்; அவரே பாரதிதாசனுர். அவரது இயற் பெயரைத் தம் பெயருக்குமுன் இணைத்துக் கொண்ட சுரதா—சுப்புரத்தின தாசர் ஆவர். இவர் பாவேந்தர் பாரதிதாசனுர் பரம்பரையினர். ஆயினும், இவர் நெஞ்சாழம் கொண்ட நிறைகவிஞர் என்பதை இவர் தம் முன்னுரையிலேயே காணலாம். "நான் பிறரைப் பின்பற்றி எழுதுவதுமில்லை; பிறர் என்னைப் பாராட்ட வேண்டும் என்பதற்காக எழுதுவதுமில்லை,' என்கிருர் கவிஞர்.

நூலினிற் புகுந்து 'தேன் மழை'யில் நனைவோமே-

தொல்காப்பியனார் உவமை அணி ஒன்றை மட்டுமே சொன்னார். ஏனெனில், பிறவணிகளும் உவமையணியை நிலைக்களமாகக் கொண்டே பிறக்கின்றன. ஆதலால், இவர் அடைப்பெயர்ப் பொருத்தத்தினை முதற்கண் காண்போம்—இவர் கவிதையில் உவமை நயம் பொருத்தமுறக் கிளர்ந்து நிற்பதைக் காணலாம். ஒரு சில காண்போம்:

**'தமிழ்மொழிக் குதவும் செல்வம்**
**தானாக வளர்தல் போலும்**
**கமழ்நறு மணத்தைப் பூக்கள்**
**கருவிலே பெற்றாற் போலும்**
**இமிழ்கடல் வயிற்றின் வெள்ளம்**
**இயற்கையாய்ப் பெருகும்.'**

அடுத்து, கப்பல் நிற்கும் துறைமுகத்தினை மணவறை மீது தோன்றும் மங்கைக்கு ஒப்பிடுகின்றார் கவிஞர்:

**'துணையொடு கப்பல் நிற்கும்**
**துறைமுகம், சுற்றம் சூழ**
**மணவறை மீது தோன்றும்**
**மங்கையைப் போன்ற தாகும்.'**

அம்மட்டோடன்றி, மேலும் கலமற்ற கடலைக் கணவனை இழந்த பெண்ணிற்கு ஒப்பிடுகின்றார்:

**'கணவனை இழந்த பெண்ணும்**
**கலமற்ற கடலும் ஒன்றே!''**

அடுத்து, நன்றாகச் சூல் கொண்டு கருநிறம் பெற்று எழுந்து நாற்புறமும் சென்று வெண்ணிலவைச் சூழ்ந்த மேகம், கருங்குழலில் குளிர் முல்லையைச் சூடிக்கொண்டிருக்கும் பெண்போல் உளதாம்:

**'நன்றாகச் சூல்கொண்ட முகிலின் கூட்டம்**
**நாற்புறமும் வெண்ணிலவைச் சூழ்ந்தாற் போலே**

''குன்றுத கருமைநிறக் குழலின் மீது
குளிர்முல்லை சூடிக்கொண் டிருக்கும்பெண்ணே!''

ஊர்நோக்கி, காதலி முகம் நினைந்து விரைந்து திரும்பும் காதலன் வேகத்திற்குப் பின் வரும் உவமையினை ஆள்கின்றார் கவிஞர்:

'போர்வீரன் ஊர்திரும்பி வருதல் போலும்
புதுவெள்ளம் புரண்டெழுந்து வருதல் போலும்
ஊர்நோக்கி விரைந்தோடி இல்லம் வந்தான்.'

ஒளிவீசும் காலையின் உதயசூரியன் 'உரை கல்லில் சரிபார்த்த செம்பொன் போல' உளதாம். 'புதுமையின்றிப் பாடல் புனைந்திடுவது, உயிரில்லாத பொம்மையின் மீது சுற்றும் பட்டுடைக்கு நிகராகும்', என்கிறார் கவிஞர்.

'புதுமையே யின்றிப் பாடல் புனைந்திடல் உயிரில் லாத
பதுமையின் மீது சுற்றும் பட்டுடை போன்ற தாகும்.''

அடுத்து, 'முன்னோர் மொழி பொருளே போற்றும் நெறியிலே' சென்றுள்ளார் கவிஞர். ஆழ்ந்த சங்க நூற் பயிற்சி மிக்கவர் கவிஞர் என்பது, பின்வரும் தொடர்களால் புலனாகின்றது'

'அதிமது ரத்தழையை யானைகள் தின்றபடி
புதுநடைபோடும்.'

என்கிறார்: இது,

'வயல்வினை இன்குளகு உண்ணாது
நுதல் துடைத்து...யானை'

என்ற முல்லைப்பாட்டு அடிகளை நினைவூட்டுகின்றது.

'மயிலடி அனைய மாக்குரல் நொச்சி'

என்பது குறுந்தொகைத் தொடர். இதனை அடியொற்றியே கவிஞர்,

**'ஆடும் பறவைநின் அடிகள் இரண்டும்
ஈர நொச்சியின் இலைகளே யாகும்'**

என்று கூறியுள்ளார்.

'வன்னிய வீர'னில் வரும்,

**'ஆறுபோற் கிடந்த அகல் நெடுந் தெருக்கள்'**

என்னும் கவிதைத்தொடர்,

**'யாறு கிடந்தன்ன அகல்நெடுந் தெரு'**

என்ற 'மதுரைக் காஞ்சி'யினை நினைவூட்டும்.

'பூம்புகார்' என்ற கவிதையில் வரும்,

**'குழைகொண்டு மனையில் மேய்ந்த
கோழியை விரட்டி னேரும்'**

என்னும் அடிகள்,

**'குழை கொண்டு கோழி எறியும் வாழ்க்கையர்'**

என்ற 'பட்டினப்பாலை'த் தொடரினை நினைவுபடுத்து கின்றன.

**'வான்கண் விழியா வைகறைப் பொழுதில்'**

என்னும் கவிதைத் தொடர்,

**'வான்கண் விழியா வைகறை யாமத்து'**

என்ற 'சிலப்பதிகார' அடியினை நினைவுபடுத்துகின்றது.

அடுத்து, 'சித்தூர்ச் சாம்பல்' என்ற கவிதையின் இறுதி இரண்டு அடிகளாம்,

**'சீரமைந்த மாணிக்க மகுட மங்கை
செத்ததற்குச் செத்திட்டார் சித்தூர்ப் பெண்கள்'**

என்னும் அடிகள், பாவேந்தர் பாரதிதாசனர் அவர்களின் எதிர்பாராத முத்தத்தின் இறுதி இரண்டு அடிகளாம்,

**'அன்பன் செத்ததற்குச் செத்திட்டாள்**
**அத்தென்னுட் டன்னம்'**

என்னும் அடிகளை நினைவிற்குக்கொண்டு வருகின்றன.

எந்த இலக்கியப் புலவர்க்கும் இல்லாத இலக்கணப் புலமை, கவிஞர் சுரதா அவர்களின் கவிதைகளில் ஆங்காங்கே கொப்பளிப்பதைக் காணலாம்.

**'உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே'**
**'வேற்றுமையை வினைச்சொற்கள் ஏற்ப தில்லை'**
**வெறும்பாட்டைத் தமிழ்ச் சங்கம் சேர்ப்ப தில்லை'**
**'வெடித்திருந்த வயலெல்லாம் தண்ணீ ராலே**
**மெய்யெழுத்தின் முன்னுயிர்போல் பொருத்திக் கொள்ளீர்'—**

மேலும்,

**'.........மெல்லினத்தின்**
**முன்னிற்கும் வல்லினம்போல்**
**முன்னின்ற தலைவர்'**

எனத் 'திரு. வி. க' போற்றப்படுகிறார்.

**'முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை'**
என்ற ஒரு கவிதையில் தொல்காப்பியப் பொருளதிகாரத் தொடரையே செய்துள்ளார்.

சிறந்த கவிதை எனப்படுவது, மேலை நாட்டார் கருத்துப்படி நான்கு பொருள்களை உள்ளீடாகக் கொண்டிருக்க வேண்டும் என்பர். அவையாவன:

1. உணர்ச்சி (Emot'on);
2. கற்பனை (Imaginatian);
3. வடிவம் (Form);
4. பொருள் (அ) உள்ளீடு (Content) என்பனவாம்.

இத்திறனாய்வுக் கண்கொண்டு காணும் பொழுது இவர் கவிதைகள் சிறப்பு நிறைந்தனவாய்த் துலங்குகின்றன. பின் வரும் பாடலில் உணர்ச்சி கொப்புளிக்கக் காணலாம், சங்க நூல்கள் கடல் கோளாலும் கால வெள்ளத்தாலும், கவனக்குறைவாலும் அழிந்துபட்டதைப் புலவர் பின்வருமாறு உணர்ச்சி பொங்கக் கூறுகின்றார்:

**'கத்துகடல் நீராலும் கயவராலும்**
**கனலாலும் கண்கலந்த தூக்கத் தாலும்**
**எத்தனையோ நூல்களைநாம் இழந்து விட்டோம்!**
**இல்லையெனில் ஒரு நூலா, இரண்டு நூலா,**
**பத்திரண்டா யிரங்கோடி நூல்க ளன்றோ**
**பைந்தமிழர் கைவசத்தில் இருந்தி ருக்கும்!**
**வித்திடுவீர்! என்றுரைத்தான் புலவ ரெல்லாம்**
**விழித்தெழுந்தே செழுந்தமிழை வளர்க்க லானார்.**

அடுத்துக் கவிஞரின் கற்பனையைக் காண்போம், 'நெய்தல் நீர்' என்ற கவிதையில் கடலை வருணிக்கின்றார் கவிஞர். காண்போம்:

**'ஆதிநீ ரான முந்நீர்**
**அச்சத்தைக் கொடுக்கும் தண்ணீர்**
**பாதிநீர் காற்றை மோதும்**
**பாதிநீர், கரையை மோதும்**
**சீதநீர்த் துளிகள் எல்லாம்**
**சிறியகண் ணாடி மீதில்**
**ஊதிடும் ஆவி போன்று**
**மறைந்திடும் உலர்ந்த மண்ணில்,**
**விண்வெளி, இவ்வை யத்தின்**
**விரிகுடை! புவியில் வாழும்**
**பெண்களின் கண்கள் இட்ட**
**பிச்சையே கடலின் நீலம்!**
**பண்கடல் உண்டே யன்றிப்**
**பாற்கடல் இருந்த தில்லை'**

அடுத்து வடிவத்தைப் பார்க்கும் பொழுது கவிஞர் ஆசிரியம், அறுசீர்க்கழிநெடிலாசிரியம், விருத்தம், எண்சீர் விருத்தம், கானல்வரிச்சந்தம், கிளிக்கண்ணி, வண்ணம், சிந்து, காவடிச் சிந்து முதலிய பல பா வகைகளைப் பாடியுள்ளார்.

கானல் வரிச்சந்தம் காண்போம்;

முகிலைப் பற்றி,

**'கடலுடல் தொடுபவளே!**
**கருவொடு வருபவளே!**
**நெடுமலை துயில்பவளே!**
**நிதிதரு மலைமகளே!**
**இடையிடை யிடியுடனே**
**இருள்நிற எழிலுடனே**
**கொடு வெயில் துயர்கெடவே**
**குளிரொடு வந்தனையே!'**

என்கிறார். அடுத்தது ஒரு கிளிக்கண்ணி:

**'மாவும் பழுத்திருக்கும்**
**மலர்கள் விழித்திருக்கும்**
**பூவின் மதுசுரக்கும்—கிளியே!**
**போவா ரடிவழுக்கும்!'**

அடுத்து வண்ணம்:

**'மாலை அந்தியிலே—மலை**
**வாழும் தென்றலிலே—தெரு**
**வாசல் முல்லையின்**
**வாசம் வந்ததும்**
**ஆசை கொண்டன வண்டுகள் யாவும்**
**ஆவேச மாகமலர் ஊதவே.'**

'இளவேனில்' என்னும் கவிதையில் 'சிந்து' நடை போடுகிறது.

**'சங்கத் தமிழ்மதுரை—நகர்**
**தாண்டித் தவழ்ந்துவரும்**

**மங்களத் தென்றலிலே—கரு**
**வண்டு மயங்குதடி!**
**பொங்கி வழிந்திடுதேன்—அது**
**பூக்களின் வேர்வையடி**
**வெங்கனல் கோடையடி—இது**
**வேனிற் பருவமடி!'**

'தெள்ளு தமிழுக்குதவு சீலன்' என்ற காவடிச் சிந்து' மெட்டில் ஒரு பாட்டு:

**ஆசை கொண்டு விண்வெளியின் மீது—மதி**
**ஆடையின்றி யேயுலவும் மாது—முகில்**
**ஓசைகொண்ட மண்டலத்தில்**
**ஊர்ந்துலவி வாழ்ந்துவரும்**
**ஊமை—வெள்ளி**
**ஆமை;**

ஆசிரியப்பாவிலே அழகான வருணனையும் கருத்தும் மிளிர ஆசிரியர் கவிதை யாத்துள்ளதைக் காணுங்கள்; 'அகலியை' எனும் கவிதையில் 'அகலியை'யை வருணிக்கிறார் கவிஞர்:

**'தவஞ்செய் முனிவரின் தரும பத்தினி**
**பருவ காலத்தில் பழுத்த மாங்கனி**
**அகலியை என்பாள் அழகின் விளக்கமாம்!**
**வெண்ணிலா அவளெழில் கண்டு வியக்குமாம்**
**....................................**
**வதன வட்டமும் மைவிழி வாசலும்**
**தூண்டில் புருவமும் துடிக்கும் பருவமும்**
**நெய்கனிந் திருண்ட நீள்கருங் கூந்தலும்**
**சேர்ந்து பிறந்த செவ்வா யிதழ்களும்**
**கையும் காலும் மெய்யும் மேனியும்**
**எவ்வாறு நன்கமைந் திருத்தல் வேண்டுமோ**
**அவ்வாறு நங்கைக் கமைந்திருந் தனவாம்**
**நங்கையின் நடைகண்டு நாணிற்றும் அன்னம்**
**கட்டழகு மங்கையின் கன்னத்தைக் கண்டு**

**தேமாங் கனிகள் திருப்பிக்கொண் டனவாம்**
**புனலாடும் தாமரை போந்த மங்கையர்**
**ஆடிய அங்கையின் அழகினை வென்றிட**
**முடியாமற் போனதால் முக்காடிட் டனவாம்.'**

சிறந்த கவிஞர் சிறந்த கருத்துக்களைத் தரவேண்டும் என்பர். (The great judged by the frame of mind they induce). அம்முறையில் நல்ல கருத்துக்களை நாட்டு மக்களுக்கு வாரி வழங்கியுள்ளார் கவிஞர்:

**'.........................நீதி என்னும்**
**வேரில்நீர் ஊற்றுவதே எனக்கு வேலை:**
**வேந்தனுக்குக் குடிமக்கள் குரலே வேதம்;**
**பொதுமக்கள் நலமெனக்குப் பெரிதே யன்றிப்**
**புகழெனக்குப் பெரிதன்று'**

என்று எண்ணுபவனே நல்ல அரசனுவான் என்கிருர்.

கவிஞரின் நகைச்சுவையினைச் சிறிது காண்போம்:

**'உரையிடை யிட்ட செய்யுள்**
**ஓவியச் சிலம்பு தந்தோன்**
**நரைதிரை வாரா முன்பே**
**நாட்டிலோர் துறவி யானுன்**
**விரிகடல் பிறந்த போதே**
**வெண்ணரை பெற்றி ருந்தும்**
**கருநிற உடையை மாற்றிக்**
**காவியேன் கட்டவில்லை?'**

என்கிருர்.

பூம்புகார் பற்றிய பாடலில் சொற்சிலம்பமாடுகிருர் கவிஞர்:

**'துகிர்துகிர்' என்னும் ஓசை**
**துகிர்விலை யோசை; பூவை**
**'முகர் முகர்' என்னும் ஓசை;**
**மொய்த்தவர் ஓசை; நல்ல**

;'நகர்நகர்' என்றும், சற்றே
'நகர்நகர்' என்றும், நீ போய்ப்
'பகர்பகர்' என்றும் ஓசை'
பரந்தபொன் னகர மாகும்.

ஓசை நயத்தினைக் கீழ்க்காணும் 'தரைமீன்' என்னும் பாடலிற் காண்க.

'ஓடிக்கொண்டே யிருந்த நதியை நோக்கி
ஓடிக்கொண் டேயிருந்தாள் வாடிக்கொண்டே;
வாடிக்கொண் டேயிருந்தாள் சூறைக் காற்றின்
வசப்பட்ட கப்பலைப்போல் ஆடிக்கொண்டே;
ஆடிக்கொண் டேயிருந்தாள் அழகி ஆற்றின்
அடிநீரில் மறைந்தவனைத் தேடிக் கொண்டே;
தேடிக்கொண் டேயிருந்தாள், ஆதி மந்தி
சிந்தாத கண்ணீரைச் சிந்திக் கொண்டே!'

காதல் நோய் பற்றி வள்ளுவர் ''தன்னோய்க்குத் தானே மருந்து'' என்றார். கவிஞர் சுரதா அவர்கள் 'இணைமோனை' என்ற கவிதையில்,

'மருந்தாலே நோய்தீரும்! வானம் சிந்தும்
மழையாலே வறண்டவயல் ஏக்கம் தீரும்!
விருந்தாலே பசிதீரும்! ஆனால் காதல்
வெப்பத்தில் கொப்புளிக்கும் நோயோ எந்த
மருந்தாலும் தீர்வதில்லை; காதல் நோயை
மந்திரங்கள் தீர்ப்பதில்லை; மங்கை தீர்ப்பாள்.'

என்கிறார்.

விறலியின் நடனம் பாருங்கள்.

'கொடியேந்தும் நகரினிலே நீல வானம்
குளிரேந்தும் இரவினிலே மின்னும் தங்கப்
படியேந்தும் மண்டபத்தில் ஆட லானேன்
பார்வையினால் கோணங்கள் போட லானேன்.'

மேலும்,

'பலர்புகழ் மதியே! நின்னைப்
பார்க்கநிம் மதியே!'

என்ற பாடலில் பாட்டோட்டம் காண்க!

'வில்லூரில் விசலூரில் தித்தன் என்பான்
வீற்றிருந்த உறையூரில் வேம்பத் தூரில்
மல்லூரில் பரஞ்சோதி முனிவர் வாழ்ந்த
மறைக்காட்டில் குளிர்தூங்கு குற்ருலத்தில்
பல்லூரில் திருடியவன்; இன்றே காயற்
பட்டினத்தில் அகப்பட்டேன்; வெட்டுப் பட்டேன்
நல்லோரே! நான் நொண்டி யாகி விட்டேன்!
நாற்சீரில் கடைச்சீர் குறைந்தாற் போல!'

'பட்டினத்தார்; துறவறநூல் பாடிவைத்த
பாட்டினத்தார்; மங்கையரோ மேன்மையான
பட்டினத்தார்; தாலாட்டுப் பாடல் பாடும்
பாட்டினத்தார்! பூமானே! ஐயோ, காயற்
பட்டினத்தார்! காப்பியங்கள் இயற்று கின்ற
பாட்டினத்தார்க் குதவிசெய்யும் பட்டினத்தார்
பட்டினத்தார் கொள்கையினைத் தூக்கித் தூக்கிப்
பாட்டெழுதும் நான்நாகைப் பட்டினத்தான்'

என்று தம் ஊரைக் குறிப்பிடுகின்ருர் கவிஞர்.

'பாவையைப் பார்த்தீரோ?' என்று நம்மை வினவு கிருர் கவிஞர். எப்படிப்பட்ட பாவை அவள்? கவிஞர் வாக்காலேயே கேட்போம்:

'அழகிற் சிறந்திருப்பாள்—குலமகள்
அன்னம் எனநடப்பாள்!
தழுவுங் கொடியிடையாள்—திருவளர்
தாமரை போன்றிருப்பாள்
விழியில் நிலாவளர்ப்பாள்—சுரையின்
விதையது போல்நகைப்பாள்
மழையின் குளிரமுதை—மதுமலர்
மங்கையைக் கண்டீரோ?'

கண்டீரேயானுல் கவிஞருக்குத் தெரியப்படுத் துங்கள் !

கவிஞரின் சந்தவிருத்தம் 'விருந்து' என்ற கவிதை யில் மணம் பரப்புகின்றது.

'வினையே புரிந்து மழைநா ளறிந்து
விரிநீர் கடந்து வருவார்;
கனியே கலந்த மொழியா லமைந்த
கதைகா வியங்கள் நவில்வார்;
இனியே விருந்தின் சுவையே யருந்து
மிதழே பொருந்தி மகிழ்வேன்
தனியே பிறந்து தமிழ்போற் குளிர்ந்து
சரியாய்த் திரண்ட நிலவே!'

"படை வேண்டும்" என்ற கவிதையில் வரும் பின் வரும் அடிகள் நாட்டின் இப்போதைய நிலைமைக்கு ஊக்கமூட்டுவதாகும்:

'முல்லைவைத்த காடுகளைக் கடந்து நாட்டின்
முகம்போன்ற எல்லையில்கால் வைத்து விட்டான்;
எல்லையிலே பகைவர்தம் காலை வைத்தல்
இதயததில் தீ வைத்தல் போன்ற தாகும்.'

இயற்கை வருணனை காண்க:

'கோடைவெளியில் வந்ததனுல் குயில்கள் கூவும்;
கொம்பெங்கும் தளிர்தொங்கும்; வண்ணம் மேவும்
ஏடுதரும் பைந்தமிழைக் கிளிகள் கற்கும்;
இலைக்குடையைப் பிடித்தபடி மரங்கள் நிற்கும்;
வாடைவரும்; ஆங்காங்கே கானல் தோன்றும்
வயல்காயும்; வயல்வயிற்றில வெடிப்புத் தோன்றும்
பாடிவரும் ஓடைகுளிர் காய்ந்து கொள்ளும்
பருத்திக்குச் சிரிப்புவரும்! மான்கள் துள்ளும்'

தமிழ்த் தாத்தா 'உ. வே. சா.' அவர்களை,

'சாமிநா தைய ரின்றேல்
சங்கநூல் மறைந்திருக்கும்.'

என்றும், பாஸ்கர சேதுபதி அவர்களை,

"கிள்ளிக் கொடுக்காமல் அள்ளிக் கொடுத்தவர்"

என்றும், மறைமலையடிகளை,

'முல்லைக்கோர் காடு போலும்,
முத்துக்கோர் கடலே போலும்
சொல்லுக்கோர் கீரன் போலும்
தூதுக்கோர் தென்றல் போலும்
கல்விக்கோர் கம்பன் போலும்
கவிதைக்கோர் பரணர் போலும்
வில்லுக்கோர் ஓரி போலும்
விளங்கினார்! வென்றார்! நின்றார்.'

என்றும், பாரதிதாசனாரைப் பற்றி,

'காட்டாற்று வெள்ளத்தின் வேகங் கொண்ட
கவிதைகளாற் பாவேந்தர் புரட்சி செய்தார்.
ஓட்டாண்டிப் பாட்டெழுதி வந்தார்க் கெல்லாம்
ஓய்வளித்தார்! தம்பாட்டால் வாழ்வ ளித்தார்.'

'திருத்தத்தில் வெற்றி பெற்றான் ஒட்டக்கூத்தன்;
தீர்ப்பளித்து வெற்றிபெற்றான் கரிகாற் சோழன்;
நிருத்தத்தில் வெற்றிபெற்றான் ஆட்ட னத்தி;
நிதியளித்து வெற்றிபெற்றான் பாரி வள்ளல்;
வருத்தத்தில் வெற்றிபெற்றார் வடலூர் வள்ளல்;
வாளேந்தி வெற்றிபெற்றான் சேர லாதன்;
விருத்தத்தில் வெற்றிபெற்றான் கம்பன்; அந்த
வெற்றியினை இவர்பெற்றார் என்னைப் போல.'

கடைசி அடியினை நோக்குக, புலவர்தம் மிடுக்கும் செம்மாப்பும் புலனாகின்றனவல்லவா?

'திருமுகம்போ லவிழ்ந்த தாமரை'

என இலக்கியத்தில் வருவது போன்றதிது.

இறுதியாகக் கவிஞர் சுரதா அவர்களின் தமிழ்ப் பற்றினைக் கூறி முடிக்கின்றேன்.

'தேன்பிறந்த பின்மலர்கள் பிறப்பதில்லை;
திசைபிறந்த பின்வானம் பிறப்ப தில்லை;
மீன்பிறந்த பின் குளங்கள் பிறப்பதில்லை;
வேல்பிறந்த பின் இரும்பு பிறப்ப தில்லை;
தேன்சுரக்கும் தமிழ்பிறக்கும் முன்பே, மற்றத்
தேசத்தார் பேசுமொழி பிறக்க வில்லை;
வான்பிறக்கு முன்காற்றுப் பிறந்த துண்டோ?
வையகத்தில் தமிழ்போலும் சிறந்த துண்டோ?'

'மாந்தரெலாம் உணவினிலே இன்பம் காணின்
மாகவிஞன் இன்பத்தில் உணவு காண்பான்;
தீந்தமிழ்போல் பிறமொழிகள் இனிப்ப தில்லை'

இவ்வாறாக. இன்று வாழும் கவிஞர்களில், சுரதா அவர்கள் செம்மை சான்ற கவிஞராய்த் துலங்கி வருகின்றார்கள்.

## 9. கவியரசு கண்ணதாசர்

இன்று பாமரரும் அறிந்த பெருங்கவிஞராய்க் கண்ணதாசர் துலங்குகின்றார். திரைப்படப் பாடல்களை எழுதும் கவிஞர் என்ற அளவில் மட்டும் பலரும் நினைக்கும் இவர், எண்ணவூட்டச் சத்திநிறைந்த கவிதைகள் பலவற்றைப் புனைந்துள்ளார். தத்துவக் கருத்தினை மையம் கொண்டனவாக இவர் பாடல்கள் அமைந்து விளங்கக் காணலாம். **1944**ஆம் ஆண்டில் கவிதை உலகிலே காலடி எடுத்து வைத்த கவிஞர், இன்று தமிழ்க்கவிதை வானில் தாரகை என ஒளிவீசித் திகழ்கிறார். சொல்லாழமும் கருத்தாழமும் நிறைந்த இவர் பாடல்கள், இன்பத் தமிழ்க்கவிதைக் களஞ்சியமாகும். சங்க இலக்கியம் முதலாக, இற்றை நாள் இலக்கியயங்கள் வரை ஆழ்ந்து படித்தவர் கவிஞர் அவர்கள். பழைய பாட்டின் தொடர்கள் இவருடைய கவிதையில் அப்படி அப்படியே வரும். எல்லார் நெஞ்சங்களையும் கொள்ளை கொண்டு திகழும் கவிஞர், தம் எண்ணத்தைப் பின் வருமாறு கவிதையில் கூறுவர்.

**'போற்றுபவர் போற்றட்டும்**
**புழுதி வாரித்**
**தூற்றுபவர் தூற்றட்டும்;**
**தொடர்ந்து செல்வேன்!**
**ஏற்றதொரு கருத்தைஎன (து)**
**உள்ளம் என்றால்**
**எடுத்துரைப்பேன்; எவர்வரினும்**
**நில்லேன்! அஞ்சேன்!'**

இவ்வாறு தம் எண்ணத்தின் வழியே கவிதையினை இயற்றுபவர் கவிஞர் என்பது அவர் எழுதியுள்ள கவிதைகளைக் கண்டு தெளியலாம.

கவிஞர் அவர்கள் எழுதிய முதற்பாட்டு, 1944 ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள் 'திருமகள்' இதழில் வெளி வந்தது. ஏறத்தாழ இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்ட அந்தக் கவிதையிலேயே கவிதை யழகு விஞ்சி நிற்பதனைக் காணலாம். கவிதையின் தொடக்கமே சிறக்க அமைந்திருக்கக் காணலாம்.

**'காலை குளித்தெழுந்து**
**கருஞ்சாந்துப் பொட்டுமிட்டுக்**
**கருநாகப் பாம்பெனவே**
**கார்க் கூந்தல் பின்னலிட்டுக்**
**காத்திருந்தேன் உம்வரவைக்**
**கடைக்கண்ணால் பார்த்திருந்தேன்!**
**கண்ணில் தெரிந்திலிர்நீர்?**
**கனவுலகில் சஞ்சரித்தேன்!**
**அந்தி மயங்க**
**அடிவானம் செக்கரிட**
**அண்டை அறியாமல்**
**ஆடவர்நீர் ஓடிவந்தீர்!'**

என்று, காதலி காதலனுக்கு எழுதும் கடிதம் போல் அமைந்துள்ள இப்பாடல், கருத்தாழம் கொண்ட தாகும்.

**'கள்ளையும் தீயையும் சேர்த்து—நல்ல**
**காற்றையும் வான வெளியையும் சேர்த்து'**

தமிழ்ப்பெருங் கவிஞர்கள் செந்தமிழில் தீஞ்சுவைக் காவியங்கள் இயற்றியளித்ததாகப் பாரதியார் கூறு கின்றார். கவிஞர் கண்ணதாசர் அவர்களின் 'மாங்கனி' என்னும் காவியம் 'பல்சுவை விரவியது என்று உறுதி யாகச் சொல்லலாம். காவியத்திற்கு முன் எழுதும் 'தமிழ் வாழ்த்தில்,'

**'தனைப்புகழத் தன்னிடத்தோர் சொல்வில் லாத**
**தமிழேஎன் தாயேநின் பாதம் போற்றி'**

என்று கவிஞர் குறிப்பிட்டுள்ள கூற்றில்தான் எத்துணைக் கருத்தாழம் குடிகொண்டுள்ளது!

காவியத் தலைவி மாங்கனியின் அழகைச் சொல்லிலே வடிக்கிறார் கவிஞர்:

**'கொலைவாளுக் குறைபோல் விழிவாளுக் கிமையும்**
**குழையாடுஞ் செவியோடே உறவாடும் அளவும்**
**சிலையோடும் சமமாக விளையாடும் புருவம்**
**சிறுவானப் பிறைமீதில் அலைமோதும் அழகும்**
**கலைமூடும் எழிலேறும் காண்பார்தம் நெஞ்சம்**
**கடல்மீனுக் கிணையாகத் தடுமாறும் நிலையில்**
**கலைவீசும் உருவேநின் வடிவொன்று போதும்**
**வாழ்வார்உன் னோடென்னின் வாழ்வார்எப் போதும்?'**

என்று பாவாணன் கூற்றாக மாங்கனியின் எழில் வெளிப்படுகிறது. அவள் சேரன் அவையில் ஆடுகின்றாள். அவையில் மட்டுமா ஆடுகின்றாள்! அவையினர் மன அரங்கிலுமன்றோ ஆடுகின்றாள்!

**'செந்தமிழ்த் தீம் என்றவளும் ஆடுகின்றாள்;**
**'செத்தொழிந்தோம்' என்றுசிலர் வாடுகின்றார்;**
**தந்தனத்தான் என்றவளும் தாவுகின்றாள்;**
**'தஞ்சமுற்றேன்' என்றுசிலர் வாடுகின்றார்.'**

இவ்வாறு மாங்கனி ஆடும் ஆட்டத்தில் அமைச்சன் அழும்பில்வேள் மகன் அடலேறு சொக்கி நிற்கின்றான்:

**'செழுங்கொடியைக் கண்வாங்கி மனத்துட் போட்டு**
**சீரணிக்க முடியாமல் நின்றான் ஆங்கே!'**

களத்தில் வாள் சுழற்றும் அக்காளை, கன்னியின் கண் சுழற்றலில் ஆட்பட்டு, அலையிடைப்பட்ட துரும்பானான்.

**குத்திடுவேல் வாளெல்லாம் களத்திலேதான்**
**கோதையர்பால் துரும்பேதான்!'**

என்னும் முடிவிற்கு வருகின்றான். 'தலையில் இருக்கும சுமையையாவது இறக்கி வைக்கலாம; ஆனால், காதற் சுமையை இறக்குவது எப்படி?'' என்று நெஞ்சம் சோர்ந்தான்:

'தலையிருக்கும் பாரத்தை இறக்கி வைக்க
வழியிருக்குஞ் சாலைதனில்; ஆனாற் காதல்
குலையிருக்கும் நெஞ்சத்தின் பாரமொன்றும்
குறையாதென் றரற்றினான் கொற்ற வீரன்.'

எள்ளளவும் குறையில்லாத அழகுத்தேன் மாங் கனியோ, மதியமைச்சன் மகன் மனம் படும் பாடு அறியாள்.

'வெள்ளை உடை, வெள்ளை உடல், வெள்ளை உள்ளம்
விண்பிலிற்றும் மழைமுகத்தின் ஒளிச்சிரிப்பு!
விள்ளாய கிள்ளைமொழி, பிள்ளைப்போக்கு
மேற்றிசையிற் கதிர்படிந்த சிவப்புநாக்கு
அள்ளுமனக் குயில்மேனி கரிய கூந்தல்
அசையுங்கால் எவ்வுயிரும் அசைந்து காட்டும்!'

இவ்வாறு எழிழரசி கீதம் இசைத்திருந்தாள்.

காதல் முகிழ்க்கிறது. காதல் அரும்பிய இருவர் நெஞ்சும் ஆள் இடம், மாறுகிறது.

சித்திரப்பூ முத்தாரம் சிந்தாமற் சிதையாமல்
கத்தரிப்பூ வண்ணவிழி கலங்காமல் அசையாமல்
சித்துவினை அறியாத சீதளஞ்சேர் கன்னிமுகம்
நத்திஅரு கடைந்து நாமே உலகமென்று

இணைப்புறுக்கள் காதல் வானில் களி கொண்டு பறந்து திரிகின்றன. இன்பமூட்டும் இரவு கழிந்து பொழுது புலர்கிறது.

''விடிந்தது கண்ணே!'' என்றான்
விழித்தவன் காதில் அச்சொல்
'ஒடிந்தது வீணை' என்றே ஒலித்தது!

கவிஞரின் இக்கற்பனை,

'குக்கூவென்றது கோழி யதனெதிர்
துட்கென்ற தென்தூய நெஞ்சம்
தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்று லெனவே'
—குறுந்தொகை: 157

என்ற குறுந்தொகைப் பாடலோடு ஒப்பிட்டு மகிழத் தக்க தாகும்.

மாங்கனியைக் காணாத அடலேறு கொள்ளும் வருத்தத்தினைக் கவிஞர்,

'குளம்மட்டும் இருந்ததங்கே; குமுதம் இல்லை;
குலைக்காம்பு நின்றதங்கே;கனிகள்இல்லை;
களம்மட்டும் இருந்ததங்கே வாளைக் காணோம்!'

என்று உவமையழகு சிறக்க அவலத்தினை வார்த்தைகளில் வடித்துள்ளார்.

'பொன்னார் திருவே! புதுநிலவே! தண்மேனி
மின்னே! கனவின் வியனுருவே! எங்குற்றாய்?'

என ஏங்கிக் காதலி துடிக்கும் பொழுது அவலம் கொப்பளிக்கின்றது.

'வானத்து வெண்மதிக்கு வையத்துக் காதலின்ப
ஞானத்தை ஓதிவர நத்திப் பறந்தனையோ!
'கூட்டில் உயிராடக் குமையுமனங் கொதிப்பேற

**'வாட்டி எனை வருத்தி மறைந்தாயோ மாங்கனியே'**

என்று அடலேறு மனம் மாழ்குகின்ருன்.

இறுதியில் இவர்கள் காதல்,

**காற்ரோடு குரல்கலந்தது கண்மூடி உயிர்பறந்தது**
**ஆற்ரோடு எழில் மறைந்தது ஆனுலும் பொழு தலர்ந்ததே!**

என்றபடி,

**'தென்னரசி அடலேறு, மாங்க னிப்பெண்**
**சேர்ந்தே உயிர்நீத்த கதை.'**

இதுவென்று 'மாங்கனிக் காவியம்' முடிகின்றது.

**'ஆட்டனத்தி ஆதிமந்தி'** என்னும் காவியமும் காதற் சுவை கெழுமியது: அவல முடிவு கொண்டது. அழகன் ஆட்டனத்தி, அழகி ஆதிமந்தியை விரும்புகிருன். இவர் இருவரும் கலை வெறியோடு காதல் வெறியும் கொள்கின்றனர். பின்னர்,

**'மனிதமனம் காமத்தில் ஆழ்ந்து நின்ருல்**
**மற்றெதையும் நினைக்காதே! ஓரிராவில்**
**பனிமலரைக் கதிர் கண்டு பையப் பையப்**
**பைங்குழலிற் சரம்போடும்; சுருதி கூட்டும்!'**

என்றபடி மனத்தால் இணைந்தன. காதலிற் கட்டுண்ட நெஞ்சங்களுக்கு இடையில் பிரிவு வருகிறது; துடித்துப் போகிருள் தோகை மயிலாள்!

**'நாளேற ஏறஉடல் மூப்பி லேறும்;**
**நரையேறும்! நோயோடு நலிவுஞ் சேரும்:**
**வாளேறும்! விழியாரின் காதல் மட்டும்**
**வயதேற ஏறஇளம் பருவத் தேறும்;**

**தூளாகும் பெண்மை; மனம் துணிவி லேறும்;**
**தோளோடு தோள்சேரத் துடிக்கும் காண**
**நாளாகும் படிதோன்றின் நடையுஞ் சோரும்;**
**நடை சோர்ந்து போனாலும் பருவந் தேறும்!'**

என்று பிரிவுத்துயரில் பெரும்பேதுறும் காதலியின் நிலைமையினைக் கவிஞர் கூறுகின்றார்.

**'மின்னாமல் முழங்காமல் பொழியும் மேகம்**
**வியன்மாதர் நெஞ்சன்றி வேறே தாகும்!'**

என்று கவிஞர் கூறும் கூற்றின் நயம் காண்க!

**அங்கு மிங்கும் நோக்கி நோக்கி**
**அண்ணல் மேனி தேடுவாள்**
**பங்க யங்கள் கூம்பல் போலப்**
**பஞ்சு நெஞ்சம் மூடுவாள்**
**அங்கு மந்த மன்னன் எண் ணம்**
**அம்பெ டுத்துப் பாய்வதால்**
**எங்குச் சென்று தேறு வாள்? பின்**
**எவரி ருந்து தேற்றுவார்?**

தலைவியின் துயரைக் கூறும் கவிஞர், நம் நெஞ்சங்களைப் பிழிந்தெடுக்கிறார். இறுதி இரண்டு அடிகளைச் சொல்லச் சொல்ல, எண்ண எண்ணக் கொப்பளிக்கும் துன்பத்தினை என்னவென்பது?

இவ்வாறு செல்லும் காவியம் இறுதியில் அவலத்தில் முடிகிறது.

தன் நெஞ்சம் கொள்ளை கொண்ட தலைவியினை,

**.................... ..நேரிழை ஒருத்தி**
**மாநிறம் ; கூந்தல் வண்டுக் கருமை**
**மைவிழி இரண்டும் மானிடம் பெற்றது;**
**விழிக்கட் பேதை; வெண்மதி பாதி**
**நெறியாய்க் கொண்ட நிகரிலா அழகி;**
**வாழைத் தொடையில் வளர்சிலைப் பாங்கு**

**'வாடுவாள் என்னை மனத்தி விருத்தி!**
**பார்த்த துண்டோ?'**

என்று காதலன் கூறுவதாகத் தலைவி எண்ணும் எண்ணம் **'தலைவி மயக்கம்'** என்ற கவிதையில் காணப் படுகின்றது.

'தளிர், இலை, பழுப்பு, சருகு' என்னும் தலைப்பில் **'சருகானாள்'** என்று கவிஞர் பாடியுள்ள கவிதை புலமைச் சிறப்புப் பொருந்தியது.

**'இரவே போதும்!'** என்ற கவிதையில், 'வேலைவெல்லும் விழிபடைத்த மடவன்னம் தரையைப் பார்க்கும்' என்றும், 'பூக்காடு வான்பார்க்கத் தலையைச் சாய்த் தாள்' என்றும், 'வதனத்தைத் தொடுமுன்னர் விழி யைச் சாய்த்தாள்' என்றும், கவிஞர் தலைவியின் நாணத் தினைச் சுட்டியிருப்பது நனிநயம் பயப்பதாகும்.

**'ஆசைக்கு நாணமொரு தடையா? காதல்**
**அனலுக்கு வெட்கமொரு சுவரா?'**

என்ற பகுதியில், காதல் வெள்ளம் கரை புரண்டால் தடையுடைத்து மீறும் என்பது புலப்படுத்தப்படு கின்றது.

மணமக்கள் வாழ்த்தாகக் கவிஞர் பாடியுள்ள **'பாடாய் தும்பி!'** என்ற பாடலில்,

**'குயிலும் மயிலும் நிலவும் தென்றலும்**
**கோடிநாள் புலவர் கூறிடும் வார்த்தைகள்;**
**குயில்மொழி மயில்நடம் குளிர்பூந் தென்றல்**
**குடும்பந் தானெனக் கூறாய் தும்பி!'**

என்று, கவிஞர் நல்ல குடும்பத்தினை நம் கண்முன் கொணர்கின்றார்.

**'கலையா வாணன்'** என்று, கலைவாணர் என். எஸ். கே மறைவிற்கு வருந்தியெழுதிய இரங்கற்பாவில்,

**'இளமையில் மாண்டான், என்றும்**
**இளமையாய் வாழ எண்ணி!'**

என்றும்,

**'சிறியனாய் மறைந்தா னேனும்**
**சிறுமையில் மறைந்தா னில்லை'**

என்றும் கூறும் கூற்றில் பொருளாழம் புதைந்திருக்கக் காணலாம்.

நாதசுரமேதை திரு. 'இராசரத்தினம்' மறைவு குறித்துப் பாடியுள்ள பாடலில், 'சேயினை இழந்த மாதர் சிந்தையின் நடுக்கம்போல' இரங்கும் கவிஞர்,

**'செவியினில் ஓடி, எங்கள் சிந்தையில் ஓடி, இந்தப்,**
**புவியெலாம் ஓடி, நின்பாற் பொங்கிய 'தோடி' வேறிங்**
**கெவரிடம் போகும்?'**

என்று பாடும் பாடலில் பொருள் நயமும், பாட்டோட்டமும் அமைந்திருக்கக் காணலாம்.

இரவின் வருகையினைக் கவிஞர் வருணிக்கும் பொழுது, அவர்தம் கவிதை சிறந்து துலங்கக் காணலாம்:

**'மாலைஇளங் கருக்கல் வையந் தழுவிவர**
**சோலைக் குயில்கள் சுதியடங்கிக் கூடடைய**
**வாலைப் பருவமகள் மெளன நடை போட்டதுபோல்**
**சேலை நடிக்கவரும் தென்றல் குழைந்தசைய**
**வெங்கதிரைப் போக்கியபின் வெண்ணிலவு**
**முன்னெழும்ப**

**தங்க நிலவருகில் தட்டேந்தி மீன்கள் வர**

**..........................**

**வந்த இரவு'**

என்ற கவிஞர், **'தமிழா தமிழா'** என்ற தலைப்பில் இயற்றி யுள்ள கவிதை, உலகக் கவிதை அரங்கில் **(Universal poem)** இடம் பெறத்தக்கது,

**'கடற்கரையில் அண்ணு'** என்ற கவிதையில்

**'பொங்குமென் அருமை அண்ணுப் புலவனின் சிரிப்பி னுள்ளே**

**சங்கமுத் தமிழும் நாட்டுச் சனத்திரள் யாவுந் தேங்கும்'**

என்று கூறும் கவிஞர்,

**வீசுமென் தென்றல் போலும்**
**வெண்ணில வொளியே போலும்**
**காசறு மலரின் மேவும்**
**கவின்கலை மணமே போலும்**
**பாசமும் அறிவும் சேர்க்கும்**
**பனிமொழி அடுக்கை வாரி**
**வீசினன் பலபேர் அஃது**
**பாட்டென விளம்பிப் போனர்!'**

என்று அறிஞர் அண்ணு அவர்களின் சொல்லாற்றலைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார்.

**'பெண்ணுய்ப் பிறந்தால் திராவிடர் வீட்டில்**
**பிறக்க வேண்டும்'**

என்றும் கூறும் கவிஞர்,

**'விந்தியம் குமரியிடை விளங்கும் திருநாடே!**
**வேலேந்தும் மூவேந்தர் ஆண்டிருந்த தென்னுடே!'**

என்று திராவிடப் பொன்னுட்டினைப் புகழ்ந்து, இசைப் பாடல் இசைத்துள்ளார்.

தமிழ்ச் சொற்களின் தண்டாத சிறப்பினை,

**பூவைப்போல் பெண்ணென்றே**
**'பூவைஇவள்' என்றுரைத்தார்**
**பாவை வளர்த்ததனால்**
**'பாவைஇவள்' எனப் பகர்ந்தார்!**
**'மையலுக்கும் மானிடர்க்கும்**
**மைவிழியாம் ஊசியினால்**
**தையல்போட் டாள்தன்னைப்**
**'தையல்' எனக்குறித்தார்**

என்னும் பாடலில் கவிஞர் புலப்படுத்தியுள்ளார்.

கவிஞர் ஏற்கும் சபதம்,

**ஏற்பதொரு சபதம்;**
**'என்தமிழை அழிப்பாரை**
**துண்டாக வெட்டித்**
**துகளாக்கி உரமாக்கி**
**வண்டாடும் பூ மலர**
**வைப்போம் நாம்'**

என்பதுதான்.

திரையுலகில் பெரும்புகழ் பெற்றவை கவிஞர் கண்ணதாசரின் பாடல்களேயாம். திரைப்பாடல்கள் என்னும் கவிதை வானில் தன்னிகரற்று ஒளி வீசித் திகழும் விண்மதி இவரே.

**'திங்கள்முடி சூடுமலை தென்றல்விளை யாடும்மலை**
**பொங்கருவி வீழுமலை எங்கள் மலையே'**

என்ற பகுதி நாட்டின் மேன்மையை விளக்கும்.

'காதல் நினைவினிலே பேதமில்லை; பிரிவென்றால் வாழ்வுமில்லை' என்கிறார் கவிஞர்.

**'செந்தமிழ்த் தேன்மொழியாள்—நிலாவெனச்**
**சிரிக்கும் மலர்க்கொடியாள்**
**பைங்கனி இதழில் பழரசம் தருவாள்**
**பருகிடத் தலைகு னிவாள்'**

என்று செந்தமிழ்த் தேன்மொழியாளை வருணிக்கும் கவிஞர்தம் கருத்து நயம்-பாட்டின் ஒலி நயம் முதலியன பாராட்டுதற்குரியன!

'காட்டில் மரம் உறங்கும்
கழனியிலே நெல்உறங்கும்
பாட்டில் பொருள் உறங்கும்
பாற்கடலில் மீன் உறங்கும்
காதல் இருவருக்கும் கண்உறங்காது—அதில்
காதலன்பிரிந்துவிட்டால் பெண்உறங்காது!'

என்ற பாடல்,

'கொன்னூர் துஞ்சினும் யாம்துஞ் சலமே'

என்ற குறுந்தொகைப் பாடலையும் (157),

'கடலும் மலையும் விசும்பும் துழாய்எம்போல்
சுடர்கொள் இராப்பகல் துஞசாயால் தண்வாடாய்!'

என்ற நம்மாழ்வார் பாசுரத்தினையும்,

'மண்உறங்கும் விண்உறங்கும்
மற்றுளவெ லாம்உறங்கும்
கண்உறங்கேன் எம்இறைவர்
காதலால் பைங்கிளியே!'

என்ற தாயுமானவர் பாடலையும் அடியொற்றி எழுந்ததாகும்.

'மலர்ந்தும் மலராத பாதி மலர்போல
வளரும் விழிவண்ணமே—வந்து
விடிந்தும் விடியாத காலைப்பொழுதாக
விளைந்த கலை அன்னமே!
'நதியில் விளையாடி கொடியில் தலைசீவி
நடந்த இளந்தென்றலே!—வளர்
பொதிகை மலைதோன்றி மதுரை நகர்கண்டு
பொலிந்த தமிழ் மன்றமே!

என்ற தாலாட்டுப் பாட்டு இறவாத கவிதை (Immortal song) ஆகும்.

> 'மழைகூட ஒருநாளில் தேனாகலாம்;
> மணல்கூடச் சிலநாளில் பொன்னாகலாம்;
> ஆனாலும் அவையாவும் நீயாகுமா?
> அம்மாவென் றழைக்கின்ற சேயாகுமா?'

என்ற பாடலின் கருத்தாழத்திற்காகக் கவிஞர்க்கு என்ன பரிசு தந்தாலும் தகும்!

> 'கண்கள் இரண்டில் ஒன்று போனால்
> காணமுடியாதே! நல் அழகைக் காணமுடியாதே!

என்ற அடிகள் சோகத்தினை எதிரொலிப்பவையாகும்.

> 'உனக்கும் எனக்கும் உறவு காட்டி
> உலகம் சொன்னது கதையா?
> நினைத்து நினைத்து மகிழும் விதத்தில்
> நேசம் கொண்டது கனவா?'

என்ற காதலின் சோககீதம் இன்னும் நம் செவிகளில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றது!

கவிஞர் கண்ணதாசர் கவிதைகளில் 'தத்துவம்' தவறாது இடம் பெறும்.

> 'பிறக்கும்போதும் அழுகின்றாய்
> இறக்கும்போதும் அழுகின்றாய்
> ஒரு நாளேனும் கவலை இல்லாமல்
> சிரிக்க மறந்தாய் மானிடனே!'

என்றும்,

> 'வாழும் காலம் சிறியதென் றாலும்
> மனிதன் நினைப்பது கோடிவழி—அவன்
> மனம்போல் நடப்பது பாதிவழி—தினம்
> சூழும் கவலையும் ஏக்கமும் அவனைச்

சுற்றி இழுப்பது மீதிவழி—அதில்
துணிந்தவன் கண்டது நீதிவழி.'

என்றும்,

'ஆசையே அலைபோலே
நாமெல்லாம் அதன்மேலே
ஓடம்போல் ஆடிடுவோமே வாழ்நாளிலே.'

என்றும்,

'காலம் ஒருநாள் மாறும்—நம்
கவலைகள் யாவும் தீரும்
வருவதை எண்ணிச் சிரிக்கின்றேன்
வந்ததை எண்ணி அழுகின்றேன்'

என்றும்,

'ஊரெங்கும் தேடினேன்
ஒருவரைக் கண்டேன்—அந்த
ஒருவரிடம் தேடினேன்
உள்ளத்தைக் கண்டேன்
உள்ளமெங்கும் தேடினேன்
உறவினைக் கண்டேன்—அந்த
உறவினிலே மூழ்கினேன்
பிரிவினைக் கண்டேன்'

என்றும் வந்துள்ள பகுதிகளில் தத்துவக் கருத்துக்கள் பொதிந்துள்ளன.

'நடையழ கோர்புறம்; கற்பனை
நயத்தழ கோர்புறம் சொற்றொடர்
கடலலை போல்வரும் காட்சியின்
கலையழ கோர்புறம் தமிழ்மொழி
தடையறக் குழைந்திடும் தன்மையின்
தனியழ கோர்புறம்; இத்தகு
படையலைத் தருபவன் பாவளர்
பாவல ஞம்கண்ண தாசனே'

என்றபடி, இருபதாம் நூற்றுண்டின் தலைசிறந்த கவிஞர்களுள் ஒருவராய்க் கவிஞர் கண்ணதாசர் கவிதை மணம் பூத்து நிற்கிருர்.

## 10. கவிஞர் முடியரசர்

கவிஞர் முடியரசர் தரமான கவிதைகளைத் தமிழ்க் கவிதையுலகிற்குத் தருபவர்; தமிழ் இலக்கிய இலக்கணங்களை முறையாகப் பயின்றவர்; மென்மையான மனமும் அதில் நுண்மையான கருத்துக்களும் கொண்டவர்; ஆழ்ந்த உணர்ச்சிகளை நினைவிற்குக் கொண்டு வந்து, கவிதை வடிக்கும் கலை கைவரப் பெற்றவர். பழமையைப் போக்கும் உள்ளமும், தமிழை வணங்கும் தனிக்கொள்கையும், சமுதாயச் சீர்திருத்தத்திலே ஆர்வமும் கொண்டவர் கவிஞர் முடியரசர். பாரதியாரையும் பாரதிதாசனாரையும் பின்பற்றிப் பெருநடை போடும் கவிஞரின் கவிதையழகினை இனிக் காண்போம்.

இவர் பாரதியார் வழியிலேயே தமிழினைத் தாயாகவும், தந்தையாகவும், காதலியாகவும், மனைவியாகவும் மகளாகவும் எண்ணிப் பல பாடல்களைப் பாடியுள்ளார். **'காவியப் பாவை'** என்ற இசைத் தமிழ் தொகுதியால் இசைத் தமிழிற்குத் தொண்டும் இனிமையுற ஆற்றியுள்ளார் கவிஞர்.

> **பாடுவதென்றால் தமிழினில் பாடு**
> **பாவையே உளமகிழ் வோடு!**
> **வாடிடும் என்மன வேதனை தீர்ந்திட**
> **வாழ்வு மலர்ந்திட அன்பு நிறைந்திட'** **(பாடு)**

என்று 'தமிழில் பாடு'என்று தமிழரை வற்புறுத்துகின்றார் கவிஞர் முடியரசர்! ஏன்! வற்புறுத்த கூடாதா?

> **'தமிழ்வாழ்க என்று சொன்னால்**
> **குடி மூழ்கிப் போகுமா? இங்கு** **(தமிழ்)**

**அமிழ்தம் கசக்குமோ? தென்றல் கொதிக்குமோ?**
**அலறுகிறீர்! கதறுகிறீர்! உமக்கிது அடுக்குமோ?**
**(தமி)**

என்று கவிஞர் கொதித்துக் கேட்கின்றார்.

'தமிழ் வழங்காக் கோயிலுள்ளே தலையைக் காட்டேன்' என்று பாடும் கவிஞர்.

**ஆண்டவன் வெறுத்தாரோ—தமிழை**
**அன்பர்கள்தாம் மறுத்தாரோ? (ஆண்டவன்)**
**வேண்டிய எண்ணங்கள் விளம்பிடத் தாய்மொழி**
**விடுத்தொரு பிறமொழி விழைவது முறையோ? (ஆண்ட)**
**நெஞ்சை உருக்கும் திருவா சகநூல்**
**நினைக்க இனிக்கும் தேவா ரங்கள்**
**அஞ்சலி செய்திட உதவா என்றால்**
**அந்தநல் ஆதிக்கம் வேண்டா இங்கே.' (ஆண்டவன்)**

என்று ஆத்திரமாக—ஆவேசமாக—எடுத்து மொழிவதைக் காண்க. தமிழ்த்தாய் எங்கும் கொலு வீற்றிருக்கவேண்டும் என்னும் கவிஞர் நல்லுள்ளத்தினை இதனால் நன்கறியலாம்.

**'முன்னைப் பழம்பொருளே—வேந்தர்**
**மூவர் உயிர்த்தமிழே!**
**கன்னற் சுவையமுதே என்றன்**
**கண்ணின் மணிவிளக்கே!**
**என்னைப் பழிப்பதனை—நான்**
**ஏதும் நினைப்பதில்லை.**
**உன்னைப் பழிப்பவனைப்—பகையாய்**
**உள்ளம் நினைக்குதம்மா!**
**தீங்குனைச் சாருதென்றால்—என்றன்**
**சிந்தை கொதிக்குதம்மா!**
**பாங்குனை மேவுதென்றால்—நெஞ்சம்**
**பாய்ந்து மகிழுதம்மா!''**

என்று தண்டாத தம் தமிழ்க்காதலை **'உயிர்த் தமிழே'** என்ற கவிதையில் வெளியிட்டுள்ளார்.

'தென்ற லுடன்பிறந்தாள்—நல்ல
செய்கையொன் றேயறிவாள்
என்று பிறந்தவளோ—இவள்
எத்தனை ஆண்டினளோ!'

என்று தமிழின் பழமையினைத் 'தமிழ் என் தாய்' என்னும் பாடலில் தெரிவிக்கின்றார். 'தமிழ் என் மகள்' என்ற கவிதை, 'சின்னஞ்சிறு கிளியே கண்ணம்மா!' என்னும் பாரதியாரின் பாடலைப் பின்பற்றியதாகும்:

'பிள்ளைக் கலிதனைத் தீர்க்கவந்தாய்—அன்புப்
பெட்டக மேஇன்பம் சேர்க்க வந்தாய்
உள்ளக் கவலைகள் ஓட்ட வந்தாய்—என்றன்
ஓவிய மேபுகழ்க் காவியமே.'

'அவளோர் அழகி—என்
ஆவி கலந்தனள் பலநாள் பழகி (அவள்)

குவளை அவள்கண் குளிர்தேன் பார்வை
குடிக்கத் தவிக்கும் விழிக்குள் நிறைந்திடும் (அவள்)

குழலோ குரல்வாய் இசையால் பணியும்
குயிலோ பயில மெதுவாய் அணையும்
முழுவான் நிலவோ முகமோ தெரியேன்
முகிலோ குரலோ எனுமா றறியேன்' (அவள்)

என்று ஒலி நயமும் கருத்து நயமும் கலக்கக் கவிஞர் கவிதை புனைந்துள்ளார். அடுத்து ஆடினாள் என்ற இசைப் பாடலும் அவ்வாறே ஒலிநயம் கெழுமிச் சந்தச் சுவை நிரம்பி வர அமைந்துள்ளது.

'சடையோடு மலராடச்
சதிராடும் அவளோடு
நடைபோட முடியாமல்
மடவன்னம் தடுமாற

ஆடினள் நாட்டிய நங்கை எனும்பொழுது, நம் கண்ணில் தோன்றும் பார்வையும், காதில் ஒலிக்கும் 'கலீர்' 'கலீர்' எனும் ஒலியும், கவிதையின் சிறப்பிற்குக் கட்டியங்கூறி நிற்கின்றன அல்லவா?

'தேமலர்ச் சோலைதனில்—ஒரு நாள்
சென்று புகுந்திருந்தேன்
மாமரக் கூட்டமங்கே—பூத்து
மாமணம் வீசியதே'

என்னும் பாடல்,

'வான வெளிதனிலே—கவிந்தெழு
மாலைப் பொழுதினிலே
கூனப் பிறைவரவே—சிவன்தரு
கோலம் தெளிவேனடி'

என்ற கவிமணியின் பாடற்போக்கில் அமைந்துள்ளது.

'இரண்டு உண்டு' என்ற கவிதை அருமையான தத்துவ விளக்கம்; நாம் ஊன்றி உணர வேண்டிய கருத்தாகும்.

'இன்பம் ஒரு கரை துன்பம் ஒரு கரை
இரண்டும் கொண்ட ஆறடா—வாழ்வு
இரண்டும் கொண்ட ஆறடா
இரண்டு கரையும் இல்லை என்றால்
வறண்டு போகும் பாரடா—இதைத்
தெரிந்து நெஞ்சம் தேறடா!
வரவும் உண்டு செலவும் உண்டு
வாழ்க்கை என்ற ஏட்டிலே—நம்
வாழ்க்கை என்ற ஏட்டிலே
பிறப்பும் இறப்பும் பிணைந்து தோன்றும்
பெருமை யுண்டு நாட்டிலே—இதைப்
பேசு மேகுறள் பாட்டிலே!
இரவும் பகலும் இரண்டு ஒன்றாய்
இணைந்த தேஒரு நாளடா—ஒன்றாய்

**இணைந்த தேஒரு நாளடா**
**இரண்டும் உலகில் மாறி மாறி**
**இயங்கும் உண்மை கேளடா—இதை**
**எண்ணி மண்ணில் வாழடா?'**

துன்பமே இயற்கையென்று எண்ணுமல, இன்பமும் துன்பமும் இணைந்து வருவதே வாழ்வு என்ற அரிய கருத்தினை, இப் பாடல் வற்புறுத்து கின்றது.

'சோலை மலர்களை வண்டினம் நீவிடத் தூங்கிய மந்திகள் கிளைகளில் தாவிடக்' காலையில் கதிரவன் தோன்றுவதாகவும், 'சோலையில் பறவைகள் கூட்டில் உறைந்திட வேலையில் ஆதவன் மெல்லவே' மறைந் திடுவதாகவும் கவிஞர் பாடுகின்றார்.

இவ்வாறு காவியப்பாவை "தமிழைப் புதிய முறை யில் பாடி வருகிறாள், பாரதியார் கண்ணனைப் பாடிய பாணியைப் போல. அவள் குரலில் காதற்பாணியும் கேட்கும்; ஆடும் ஒலியும் ஆர்க்கும்; அறநெறி இசை யும் கலக்கும்" என்று கவிஞர் இந்நூலின் முன்னுரை யில் குறிப்பிட்டுள்ளது போன்றே, 'காவியப் பாவை' கருத்துவளம் செறிந்து, கற்பனை நயம் மிளிர்ந்து கவினுறக் காணப்படுகின்றாள்.

கவிஞர்கள் என்றாலே இயற்கையில் ஈடுபாடு கொண்டவர்களாய் இருப்பார்கள் அல்லவா?

பாரதியாரை அடியொற்றித் தமிழைப் பல நிலை களில் கண்ட கவிஞர் பாரதிதாசனாரைப் பின்பற்றி 'அழகின் சிரிப்பினை'ப் படைத்துள்ளார்.

**'கால்முளைத்த தாமரையின் மொக்குள் போலக்**
**காட்சிதரும் குஞ்சுகள்தம் வாயில் கோழி**
**வேல்மூக்கால் அன்புகலந் திரையை யூட்டும்**
**வேளையிலும், வானத்து வீதி செல்லும்**

பால் நிலவுப் பெண் தனது விண் மீன் என்னும்
பல் விரித்துச் சிரிக்கின்ற போதும், மண்மேல்
கால் இழுத்துத் தவழ்கின்ற குழந்தை பேசும்
காலத்தும் நல்லழகின் சிரிப்பைக் கண்டேன்.'

என்று கவிஞர் 'அழகின் சிரிப்பை' அழகுறப் புனைந் துள்ளார்:

'தென்றலெனும் தொட்டிலிலே எனைக்கிடத்தித்
தேன்நுகர மலர்கள் தோறும்
சென்றிருந்து தமிழ் பாடும் வண்டொலியால்
செவிகுளிரத் தாலே தாலோ
என்றினிய தாலாட்டித் துயிற்றிடுவாள்;
எழுந்தழுதால் ஆறு காட்டிக்
குன்றிருந்து வீழருவி கடல்காட்டிக்
கொஞ்சிடுவாள் மலர்கள் காட்டி.'

என்று இயற்கைத்தாயின் இனிய திறத்தினை அறுசீர் விருத்தத்தில் அமைத்து அழகாகப் பாடியுள்ளார்.

'கண்ணென்றால் காவியத்தை ஆக்கிக் காட்டும்
காரிகையார் நடையுடையில் எழிலின் தேக்கம்,
மண்தின்றால் தீமைஎன அறியாப் பிள்ளை
மழலைமொழிப் பார்வைகளில் எழிலின் ஓட்டம்
விண்சென்று மீளுகின்ற பட்டம் விட்டு
விளையாடும் சிறுசெறுவில் எழிலின் பாய்ச்சல்
தண்ணென்ற புனலோடைச் சலசலப்பில்
தகுமெழிலின் பளபளப்பு விளங்கக் கண்டேன்.'

என்று எழில் சிறந்து விளங்கும் இனிய இடங்களைச் சுட்டிக் காட்டுகின்றார் கவிஞர்.

'நிலவு' கவிஞர்கள் சொல்லோவியம் தீட்டவென்றே தோன்றுகின்றதோ என்னவோ? நிலவைப் பாடாத கவிஞர் இல்லை. நிலவின் அழகையும், அந் நிலவொளி யில் வாழும் மக்களின் அவல ஓவியத்தினையும் படம் பிடித்துக் கவிஞர் முடியரசர் காட்டுகின்றார்.

'நிலவணங்கே? உனைக்கதிரோன் கூடுங் காலை
நீலமுகிற் குழல்தரளக் கட்ட விழ்ந்து
பொலபொலவென் றுதிர்ந்தநறு மலர்கள் தாமோ
பூத்திருக்கும் விண்மீன்கள்? வானம் நீங்கள்
நலம்நுகரும் பஞ்சணையோ? கதிரோன் எங்கே
நடந்து விட்டான்? உதிர் மலரை மீண்டும் சேர்த்துக்
குலமாலை யாக்குதற்கு மின்னல் நாணைக்
கொண்டுவரச் சென்றனனோ? கூறாய் தோழீ!'

கவிஞரின் கற்பனை ஆழம் கடலாழத்தினும் மிகுதியென்பதனை இக்கவிதை உணர்த்துகின்றது. நிலவைக் கண்டவுடன் கவிஞர் நெஞ்சிலிருந்து புரட்சி எண்ணம் புறப்படுகின்றது.

'ஒருபொழுதும் வயிறார உண்ணல் காணா
துயிர்நிற்க இரந்துண்ணும் ஏழை திங்கள்
வருபொழுது அரைவயிறு மட்டும் உண்டு
வருந்துகிற உழைப்பாளி நிறைய உண்ணும்
பெருவயிற்றுப் பணக்காரன் யாவ ரேனும்
பிழையாது நிலவளித்து மாட மீதும்
சிறுகுடிசை மீதுமொளி வீசி இன்பம்
சேர்க்கின்ற பொதுவுடைமை ஆட்சி கண்டேன்!'

என்று பொதுவுடைமை ஆட்சியினை இரவுப் போதில் புரிகின்ற முழுமதியினை எண்சீர் விருத்தத்தில் எழிலுறு பாடலில் புனைந்துள்ளார்.

பெண்ணின் அழகோடு போட்டியிட்டுத் தோற்றுத் தான் ஆறு கடலை நோக்கித் தன்னை மாய்த்துக் கொள்ள ஓடுகின்றதாம்! எத்தகைய கற்பனை! என்ன கருத்தாழம்! அப்பாடலைக் காண்போம்:

'கரையோரம் அலைக்கையால் வாரி விட்ட
கருமணலால் சுருள்கூந்தல் காட்டி வெள்ளை
நுரைசேரும் புனல்தள்ளும் சங்கி னத்தின்
நுண்சிலையால் பல்காட்டி, ஓடி ஓடி

**இரைதேடும் கயல்மீனுல் கண்கள் காட்டி,**
**இறுமாந்து செல்லுங்கால் தன்பால் செந்தா**
**மரையின்றி முகங்காட்ட முடியா ஆறு**
**மாய்வதற்குக் கடல் நோக்கி ஓடு தல்பார்!**

கவலை நெஞ்சத்தோடு கடற்கரைக்குச் செல்வோர் கடலலைகளிலும், கவிந்துநிற்கும் நீலவானின் கோலத்திலும் தம் கவலையை மறந்து களிப்புறுவர். கவலை போக்கிக் களிப்புதவும் தொண்டினைக் கடல் செய்கின்றது. காதலர் தம்மை மறந்து இன்பமுற வகை செய்கின்றது கடல். கடலுக்கும் காதலுக்குமே நெருங்கிய தொடர்பு உண்டு போலும்!

**'கவலையொடு நின்பால்வந் தமர்ந்தி ருக்கும்**
**கடன்பட்ட மாந்தர் தம்மைத்**
**திவலையொடு அலையெழுப்பி அக்கவலை**
**தீர்க்கின்ருய் காதல் வாழ்வில்**
**தவழ்கின்ற இளைஞர்க்கும் மணங்கொண்டார்**
**தமக்குமொரு சேர இன்பம்**
**உவக்கின்ற படியெல்லாம் கொடுக்கின்ருய்**
**உவர்க்கடலே இன்னும் கேட்பாய்!'**

என்று மேலும் கடலினை வருணித்துச் செல்வர் **கவிஞர்.**

நண்டு ஆளைக் கண்டு மறைவதனை,

**இளங்காளை முன் வந்தால் நாணமுறும்**
**இளையவள் போல் மறையும் ஓடி'**

என்ற உவமையாலும், கடல் குமுறுவதனை,

**'கடலுக்குள் வலைவீசி மீன்பிடிக்கக்**
**காதலனை வழிய னுப்பிக்**
**குடிலுக்குள் அவன்வரவை எதிர்நோக்கிக்**
**கொண்டிருக்கும் மங்கை யுள்ளம்**
**துடிதுடித்துக் குமுறுவதைப் போலநீயும்**
**துடிக்கின்ருய்! குமுறு கின்ருய்!'**

என்று நெய்தல் நில வாழ்க்கைச் சித்திரத்தாலும் புலப் படுத்தியுள்ளார்.

பொன்னி இதழில் **''பாரதி தாசன் பரம்பரை''** என்ற தலைப்பில் வந்த கவிதை 'முகிலிடை நிலா' என்னும் கவிதையாகும்.

**'ஆரியத்தால் ஒளியிழந்த தமிழர் போல**
**அழகிழந்தாய் உனையடைந்த மேகத்தாலே'**

என்று முகிலிடை முகிழ்த்த மாசினுக்குக் காரணம் கற்பிக்கின்றார்—தன்குறிப்பு ஏற்றமாகப் பாடுகின்றார் கவிஞர் முடியரசர்,

கவிதை ஊற்றே காதல் என்ற பாவாகத்தானே மலர்கின்றது! காதல் என்ற உணர்வு, கவிதைக்கு ஏற்ற பொருளாக நெடுங்காலமாய் இருந்து வரு கின்றது.

காதலி, காதலன் மேற்கொண்டுள்ள அன்பிணைக் கவினுறப் பின் வரும் பாடலில் விளக்கியுள்ளார் கவிஞர்:

**'அத்தான்! உமதுயிரை ஆட்கொண்ட நானினிமேற்**
**செத்தால் நலமென்று சிந்தித்தேன்!—பித்தாய்த்**
**திரிவீரே என்றெண்ணிப் பேசா திருந்தேன்!**
**அறியீரோ என் உண்மை அன்பு?'**

தலைவி தோழியிடம் தன் தலைவன்மேல் தான் கொண்ட காதலியின் நிலையை,

**'காய்ச்சும் இரும்பு கவர்ந்திட்ட நீர்போல**
**ஆச்சுதடி என்மனம் அன்பர் அவரிடத்தே?'**

என்று குறிப்பிடுகின்றாள்.

காதலர்களுக்கு 'ஊரார்' என்றால் தம் காதற்காவிய வாழ்க்கையில் தோன்றும் கூற்றுவர்கள் என்பது பொருள்.

'வாழவிடார் சாகவிடார்;'வாழ்வில் ஓர்நாள்
வகைகெட்டு வறுமையுறின் உதவ வாரார்;
ஏழையெனில் எதுசெயினும் ஊரார் கூடி
இதுகுறையாம அதுகுறையாம் என்று நம்மைத்
தாழவுரைத் தின்புறுவர்; செல்வன் என்ன
தகிடுதத்தம் செய்தாலும் தாயம் போட்டு
வாழவென்றே காக்கைபிடித் தலைவர் அந்தோ!
வாழ்கின்றார் மனிதரெனும் பெயருந் தாங்கி '

இப்பாடலில், ஊரார் பற்றி உளம் எரிந்து கவிஞர் உரைக்கும் கருத்துகளை காண்கின்றோம்.

காதலியைக் காதலன் சிற்றூர்க்கு அழைத்துச் செல்கின்றான். வழிநடந்து செல்கையில் காதலியின் காலில் முள் தைத்தது. காதலன் தன் உள்ளத்தில் அம்முள் தைத்தது போன்று துடிக்கின்றான்! 'இனி இவ்வாறு சிற்றூர்க்கு அழைத்து வந்து உனக்குத் துன்பம் தரமாட்டேன்!' என்கிறான் காதலன். காதலி அவனை மறுத்து, "சீதை 'இராமன் இருக்குமிடம் அயோத்தி' என்றது போல, "அவன் இருக்குமிடமே அவளுக்கு இன்பப் பூங்காவாகும்" என்கிறாள்.

"மென்காலில் முள்தைத்த தென்ன, நெஞ்சில்
வேல்குத்திக் கிழித்ததுவே றென்றும் பேசா
தென்காதல் மிகுதியினால் குனிந்து முள்ளை
எடுத்தவளை வருத்தாதே மன்னிப் பாய்நீ!
என்மீது சினந்தனையோ? இனிமேல் இங்கே
வருமெண்ணம் இல்லை இல்லை" என்றேன்; பாவை
"என்னென்ன சொல்லுகிறீர் அத்தான் நீங்கள்
இருக்கின்ற இடமேதான் இன்பப் பூங்கா!'

துன்பம் துணையாக நாடி இன்பம் பெறும் இணைகள் வாழட்டும்! காதல் வானில் களிப்புடன் பறக்கட்டும்!

'குழந்தை இன்பம் இயற்கை அளிக்கும் இன்பத்தினும் இனிமை சான்றது' என்கிறார் கவிஞர்:

'வெண் முகில்சூழ் மலைமுகடும் முகட்டி னின்று
வீழ்ந்ததிரும் அருவிகளும் வண்ணப் பூவால்
கண்கவரும் செடிகொடியும் கொடிகள் தாவிக்
காட்டுகின்ற மரத்தொகையும் தென்றற் காவின்
பண்சொல்லும் வண்டுகளும் மாலை வானில்
பட்டர்கின்ற செங்நிறமும் காதல் நங்காய்!
விண்மதியும் தருமின்பம் என்றன் பிள்ளை
விளையாடும் காட்சிதரும் இன்பம் ஆமோ.'

குழந்தை இன்பத்தில் உள்ளம் குளிர்ந்த கவிஞர் தொழிலாளியின் துயரம் கண்டு மனம் சோர்கிறார்.

மூச்சடக்கிக் கடலகத் தேமூழ்கி நல்ல
முத்தெடுக்கும் தொழிலாளி வாழ்க்கை தன்னில்
மூச்சிருக்க வேண்டியநல் வசதி இல்லை'

என்று முத்தெடுக்கும் தொழிலாளியின் துயரத்தினைச் சித்திரிக்கின்றார்.

மொழியுணர்ச்சியே நமக்கு வேண்டுவது என்று கவிஞர் முடியரசர்,

'மணவினையில் தமிழுண்டோ? பயின்றார் தம்முள்
வாய்ப்பேச்சில் தமிழுண்டோ? மாண்ட பின்னர்
பிணவினையில் தமிழுண்டோ? ஆவ ணத்தில்
பிழையோடு தமிழுண்டு! கோவில் சென்றால்
கணகணவென் றொலியுண்டு; தமிழைக் கேட்கக்
கடவுளரும் கூசிடுவர்; அந்தோ! அந்தோ!
அணுவளவும் மொழியுணர்ச்சி இல்லா நாட்டில்
ஆத்திகரே! இறையுணர்ச்சி வளர்வ தெங்கே?'

என்று ஆத்திகம் பேசுவோரை நோக்கி ஆத்திரத்துடன் முழங்குகின்றார்.

'இனத்திற்குள் பகைகொண்டு சாதிச் சேற்றில் இணைந்திருந்த' கவிஞரைக் கரைசேர்த்துப் பின்னர்க்

குடும்ப விளக்களித்து, வனப்புடைய கவியுலகைக் காண வழி காட்டியாகவும், திருப்பு முனையாகவும் நின்றவர் பாவேந்தர் பாரதிதாசனாரே என்று நெஞ்சில் நிறைந்த நன்றிப் பெருக்கால் உவகையுடன் மொழியும் கவிஞரின் பண்பு நலம்தான் என்னே!

'எங்கள்குலம் காக்கின்ற துயில ணங்கே!
என்னகைம்மா றுனக்களிக்க வல்லோம் நாங்கள்!'

என்று திருடன் துயிலைக் குறிப்பிடுகையில், நமக்குச் சிரிப்பும் உடன் சிந்தனையும் வருகின்றன அல்லவோ?

'குடும்பம் ஒரு காவியம்' என்பது கவிஞர் கருத்து. இதனை அவர்,

'அன்பினுக்கோர் எல்லைஎனும் அன்னை தந்தை
அறிவுரைகள் எடுத்துரைக்கும் ஏடாம்! இல்லாள்
இன்பமெனும் சுவையுணர்த்தும் உள்ளந் தன்னை
ஈர்க்கின்ற மழலைமொழிப் பிள்ளை நெஞ்சத்
துன்பறுக்கும் இசைச்சுரங்கம் உடன்பிறந்த
துணைவர்களோ தோள்வலிமை காட்டும் ஏடாம்
வம்புரைக்கும் நாத்தியவள் அவலம் என்னும்
சுவையினையே வடிகட்டி உணர்த்தும் ஏடாம்
ஆதலினால் குடும்பமது சுவையால் நெஞ்சை
அள்ளுமொரு காவியமென் றறைதல் சாலும்'

என்று கவினுறக் கூறுகின்றார்.

'காணி நிலம் வேண்டும்' எனப் பராசத்தியைப் பரவிக் கேட்டார் பாரதியார். கவிஞர் முடியரசர்,

'குணத்தாலும் உடலாலும் அழகு மிக்க
குமரிஎனை மணந்தின்பம் கொடுக்க வேண்டும்;
கணக்கோடு மகப்பேறு நிகழ வேண்டும்;
கள்ளமிலா நண்பர்களின் தொடர்பு வேண்டும்;

**மணத்தோடு தென்றல்வந் துலவு கின்ற**
**மாடியுள்ள வீடொன்று வேண்டும்! வாழ்வு**
**பணத்தாலே இடரின்றி நடத்தல் வேண்டும்,**
**பகையில்லா அருளுள்ளம் இருத்தல் வேண்டும்'**

என்று 'வேண்டுவன இவையிவை' எனப் பட்டியல் தருகின்றார். இனிய வாழ்வு விழையும் எவரும் வேண்டுவன இவையே அல்லவா?

கவிஞரின் 'பூங்கொடி'க் காப்பியம் மணிமேகலையைப் பின்பற்றி எழுந்த நல்ல காப்பியமாகும.

மதுரை மாவட்டம் பெரிய குளத்தில் (7-10-1920) பிறந்த இவர், மேலைச்சிவபுரியில் தமிழ்ப்புலவராய்த் தேர்ச்சி பெற்று, இப்பொழுது காரைக்குடியில் தமிழாசிரியராய்ப் பணியாற்றி வருகிறார்.

முன்னேற்றக் கருத்துக்கள் மிகவுடைய இக்கவிஞரின் கவிதைகள் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியத்திற்குக் கிட்டிய நல்ல சொத்துகளாகும்.

# 11. இளவேனில் 'சோமு'

தமிழ் இலக்கிய மரபினை நன்கு உணர்ந்தவர் கவிஞர் சோமு. இவர் தமிழில் புலவர் பட்டம் பெற்றவர். தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், இந்தி ஆகிய மொழிகளில் புலமையுடையவர். மேனாட்டுக் கவிதைப் போக்கினைத் தெள்ளத் தெளிய உணர்ந்தவர், தமிழில் புதிய கவிதை உருவங்களை இவர் படைத்துள்ளார். இதனைக் கவிஞர் தம் முகவுரையில் பின் வருமாறு கூறியுள்ளார்:

''ஆங்கில இலக்கியத்தில் 'லிரிக்ஸ்' என்று வழங்கப்படும் கவிதைகள் ஏராளம். கவிஞன் தன்னுடைய அனுபவங்களை வாசகரிடம் நேருக்கு நேராய் நின்று எடுத்துச் சொல்லுகிற பாடல்களே 'லிரிக்கு'களில் முக்கியம்.........தமிழிலும் இம்மாதிரியான லிரிக்ஸ் பாடல்கள் பழங்காலத்தில் ஏராளமாய் இருந்தன என்பது தெரிகிறது. தொல்காப்பியர் குறிப்பிடும் 'பண்ணத்தி' என்னும் பாடல் இனங்களையும் 'லிரிக்ஸோடு' ஒட்டி நினைவுபடுத்திக் கொள்ளலாம்......பாரதியார் ஆங்கில 'லிரிக்ஸ்' முறையில் சில அற்புதமான பாடல்களைச் செய்திருக்கிறார். அவருடைய இந்த மறுமலர்ச்சிக் கவிதைகளிலே "Lyric cry" என்ற நாதம் இதயத் துடிப்பாய் ஒலிக்கிறது. தமிழ் மரபோடு ஒட்டி, ஆனால் ஆங்கில 'லிரிக்ஸ்' போன்ற அமைப்பிலே, சில பாடல்கள் எழுதிப் பார்க்கலாம் என்ற ஆசையால், அவ்வப்போது நான் சில பாடல்களை எழுதி வந்தேன்.',

இவ்வாறு இத்துறையில் கவிஞர் எடுத்துக் கொண்ட முயற்சியே 'இளவேனில்' என்ற அரிய கவிதைத் தொகுதியினை நமக்குக் கிட்டச் செய்

திரு. சோமு அவர்கள் பள்ளியில் படிக்கும் நாள் களிலேயே கவிதை இயற்றும் கலை கைவரப் பெற்றிருந் தார் என்பதனை, அவர் பதினாறு வயதுள்ள மாணவ ராய் இருந்து எழுதிய 'தீபாவளிப் பாட்டு' என்ற கவிதை ஆனந்த விகடன் தீபாவளி மலரில் வெளி வந்ததிலிருந்து அறியலாம். அப்பாடலின் சில பகுதி களே அவர் பின்னாளில்—1948-ஆம் ஆண்டில்—சிறந்த கவிதைகளை இயற்றின கவிஞர் என்று தமிழ் வளர்ச்சிக் கழகத்தினரால் பரிசளித்துப் பாராட்டப் படுவார் என் பதற்குக் கட்டியங் கூறுவன போல அமைந்துள்ள அழகினைக் காணலாம்:

### தீபாவளிப் பாட்டு
(சிறுவர் களியாட்டம்)

**'காலையில்எழுந்தெண்ணெய் தேய்த்தோமடா!—மிகக்**
**களிப்புடனே வெந்நீரில் குளித்தோமடா!**
**நீலவா னத்தில்இடி இடிக்குதென—யாரும்**
**நித்திரைவிட் டெழவெடி போடுவமடா!**

..............................................

**மாடியிலே போயிருக்கும் அத்தான் முதுகில்—மெல்ல**
**மாப்பிள்ளை வெடிவீசிப் போடுவமடா**
**ஓடிப்பாய்ந்து நம்மையவர் அடிக்கவந்தால்—ஒரு**
**ஒத்தைவெடி போட்டுவிட்டே ஓடுவமடா!**

இவ்வாறு அருமையாகப் பதினாறும் வயதிலே அற் புதமாகக் கவிதை இயற்றிய கவிஞர், சொற்செறிவும் பொருட்செறிவும் துலங்கும் கவிதைகள் பலவற்றைப் படைத்துள்ளார். எளிய சொற்களில் இனிய சந்தத் தினைப் புகுத்தி, அக்கவிதைகளில் தமிழ்ப் பண்பாடு ஊடுருவி நிற்கும் வண்ணம், உயிரோட்டமான கவிதை களைப் படைக்கும் ஆற்றல் மிக்க கவிஞர் சோமு அவர்கள்.

முதலாவதாக 'இளவேனில்' இன்பத்தினை நுகர்ந்து இறும்பூ தெய்துவோம்:

**'வானம் சிரித்தது, வையம் சிரித்தது**
**வந்த(து) இளவேனில்; வந்த(து) இளவேனில்;**
**கானம் ஒலித்தது; கான்மலர் நகைத்தது**
**காயு(து) இளவேனில்; காயு(து) இளவேனில்!'**

வாழ்வின் இன்பத்தினை 'மது' எனல் மரபு. அம் மரபினையொட்டி எழுந்த கவிதையே 'மதுக்கிண்ணம்.' அங்காடிக் கூட்டத்தில் மதுக்கன்னி கிண்ணம் கிண்ணமாக மது வார்க்க, அச் செயல் போகிக்கும் காதலனுக்கும் கவிஞனுக்கும் பற்பல உணர்வுகளை எழுப்பி விடுகின்றது.

**'மதுவினை வார்த்திடும் பெண்ணே! அந்த**
**மதுவென மயக்குதுன் கண்ணே!**
**மதுவினை வழங்கிடும் போதே உன்றன்**
**மனத்தையும் வழங்கிடு வாயோ?'**

என்று போகி கேட்கிறான். காதலன்,

**'தூய விண்ணவர் அமுதோர்கரம்—நீ**
**சுவைத்துத் தந்த மதுவோர்கரம்**
**'ஐய', எனக்கது வேண்டுமெனில்—நின்**
**அதரம் சுவைத்த மதுக்கேட்பேன்'**

என்று இயம்புகிறான்.

**'பூவின் கதம்பம் ஒன்றுதந்தேன்—அதில்**
**பூப்போல் நீயொரு முத்தமிட்டாய்!**
**பூவினை மீண்டும் நுகர்ந்தாலே—அடீ**
**பூவைநின் மணமதில் வீசுதடி! அடீ**
**பூவைநின் புகழதில் பேசுதடி!**
**தென்னைமரச் சோலையிலே**
**தேன்சொரியும் வெண்ணிலவில்**
**சின்னதோர் குடிசையிலே**
**சிற்றுடை யின்மருங்கில்**

'கன்னி அங்கிருந்து
கற்கண்டு மதுவார்த்தாள்!
கன்னி அழகொளிரும்;
கையாலே மதுவார்த்தாள்!'

என்று கவிஞன், தன் அனுபவத்தினை அற்புதமாகக் கூறுகிறான். கவிஞன் இறுதியில் கூறும்,

'கிண்ணம்கைக் கொண்டதுண்டு
கிள்ளைமது வார்த்ததுண்டு
மதுக்கிண்ணம் கையிலுண்டு
மங்கைமது வார்த்ததுண்டு
பின்னை நடந்ததொன்றும்
பேச வருவதில்லை
பேச வருவதில்லை
பேச்சுக் கடங்குவதில்லை!'

என்னும் கவியில் பொதிந்து கிடக்கும் வாழ்க்கைத் தத்துவந்தான் என்னே!

'கவிஞர் சோமு அவர்களின் கவிதை, தமிழ் மக்களுக்கு ஒரு சீதனம்' என்ன கூறிய 'ரசிகமணி டி. கே. சி.' அவர்களின் கூற்று முற்றிலும்உண்மையே.

கவிஞர் சோமு திருநெல்வேலிச் சீமையினர்; ரசிகமணியோடும் ரசிகமணியின் திருக்கூட்டத்தோடும் திருக்குற்றாலச் சாரலில் மூழ்கித்திளைத்தவர். எனவே, திருக்குற்றாலத்தினை இனிமையுறச் சொல்லில் வடித்து அழகுக் கவிதையாக்கி நமக்கு என்று தந்துள்ளார்:

"வானை அளந்துநின்ற மலைகளுண்டு—நல்ல
வாசமொடு தென்றல்உலா வருவதுண்டு
தேனைச் சொரிந்திடுபூஞ் சோலைகளுண்டு—வாகாய்த்
தெள்ளியநீர் துள்ளிவரும் ஓடைகளுண்டு."

என்னும் கவிதையினைப் பாடும்பொழுது, குற்றாலச் சாரலில் நின்று குளிப்பதுபோல் இருக்கின்றது!

காலம் யாருக்காகவும் காத்திராமல் ஓடிக் கொண்டேயிருக்கிறது என்ற அழகிய தத்துவத்தினை,

காலன் ஆழிசுழன் ருடுதம்மா—அது
காது துளைபடச் சாடுதம்மா!
ஓலமிட் டேகாதில் ஊதுதம்மா—தனக்
கோய்வுதான் இல்லையென் றோதுதம்மா!'

என்னும் கவிதையில் புலப்படுத்தியுள்ளார்.

'எத்தனை மலர்கள் இத்தரை மீதினில்
நித்த மலர்ந்திடுமோ—பின்
எத்தனை மலர்கள் இத்தரை மீதினில
நித்த முலர்ந்திடுமோ! நித்தம்
நித்த முலர்ந்திடுமோ!'

என்று நித்த நித்தம் காலையில் மலரும் மலர்களையும் மாலையில் வாடும் மலர்களையும் கண்டு கண்ணீர் வடிக்கின்றார் கவிஞர்; எத்தனையோ கனவுகளும், காதல்களும், இன்பங்களும், துன்பங்களும் எழுந்தெழுந்து மடிகின்றன என்பதனையும் வேதனையோடு புலப்படுத்தி, அதுவே படைப்பின் தத்துவம் என்பதனையும் நமக்குச் சுட்டுகின்றார்.

கிராமியப் பாடல்களை—பாத்திரங்கள் பேசும் சொற்களிலேயே—வடித்துக் காட்டுவதில் கவிஞர் வல்லவர் என்பது 'வெண்ணிலா' என்ற கவிதையால் விளங்குகின்றது.

அவள்—கிராமியக் காதலி—தன் காதலனுடன் பேசுகின்றாள்:

அம்புலியைக் கணக்கிட்டு
ஆசையுந்தான் கொண்டுகிட்டு
தம்பலத்தை இட்டுகிட்டு—தங்க ராசாவே!
தலைக்கிறுக்காய் பேசுறியே—பொன்னு ராசாவே!'

அவள் காதலன் பேசுகிறான்:

'சின்னப்பய மவகெணக்கா
செருக்கிநீயும் சிரிக்கையிலே

**கன்னத்தில் குளிவிழுது—தங்க ரத்தினமே!**
**கண்டுமணம் கவிளுதடி—பொன்னு ரத்தினமே!'**

இக்கவிதைகளில் எல்லாம் நெஞ்சோடு நெஞ்சம் நேர் நின்று நெக்குருகிப் பேசுவது போன்ற உணர்வு கொப்பளிப்பதனைக் காணலாம்.

'பொருநைக் கரையிலே' என்ற பாடல் சந்த இன்பத்தோடு காதல் இன்பமும் தரவல்லது.

**'பொருநைக் கரையில் அன்றொருநாள்**
**பொன்மகள் ஒருத்தி நடந்துவந்தாள்.'**

அவள் இடை துவள இரு விழியுஞ்சுழல வந்தாள்; காதலன் அருகினில் வந்து நின்றாள் கன்னி. கண்களை நம்பாது இமைத்தான் காதலன். அவளோ, அவன் பக்கத்தில் அமர்ந்து, அவனிடம் பேசாத மொழிகளையெல்லாம் பேசினாள். அப்பொழுது.

**'நிலவு முகிலின் நெஞ்சில் நுழைந்தது;**
**நீரில் திரைகள் நெருங்கி அணைந்தன;**
**உலவுந் தென்றல் உலகை வளைந்தது;**
**ஊரெலாம் மோன உவகை சமைந்தது!'**

என்று ஓர் அமைதிச் சூழ்நிலையினைத் தம் கவிதையிலேயே உருவாக்கிக் காட்டும் கவிஞரின் கவிதைத்திறம் வியத்தற்குரியது.

**'பின்னி முடித்த சடையினிலே—ஒரு**
**பிறைபூத்து நிற்பதைப் பாரடியோ!**
**மின்னற் சடையினில் பிறைபூத்த வண்ணத்தைப்**
**பிறைசூடி அறிந்திடக் கூறடியோ!'**

என்னும் பாடலில், எதுகை மோனை முதலிய நலன்களெல்லாம் துலங்குகின்றன.

காதல் வெறியில் காதலன் காணுமிடமெல்லாம் அவன் நெஞ்சில் நீக்கமற நிறைந்தொளிரும் காதலியின்

நினைவே நிகழ்ச்சிகளாக நிழலாடுகின்றன. காண்பவற்றில் எல்லாம் அவளே உறைவது போல் ஒரு காட்சி அவன் மனத்திரையில் பட்டுத் தெறிக்கிறது.

'கடல்அலை அவள்புகழ் முழக்கிடுமே!
காற்றும் அவள்இசை பரப்பிடுமே!
கடல்மீன் அவள்பெயர் உரைத்திடுமே
கண்கா ணுத அத்தீவில்!'

என்று காதலெனும் தீவினிலே கட்டுண்டு கிடக்கும் காதலியைக் குறித்துக் காதலன் பாடுகின்றான்.

உவமையிலும் தத்துவத்தினை வைத்து விளக்குகிறார் கவிஞர். சான்றாகத் 'தாரகை' என்ற கவிதையில்,

'மனிதரின் உள்ளத் தாசையைப் போல
மாமுனி வோர்மன முடிவினை ஒத்தே
தனிமையில் நீல வானிலே நின்று
தாரகை ஒன்று மின்னுதே இன்று!'

என்று மனதில் தோன்றும் ஆசை மின்னலை, விண்ணில் ஒளிரும் தாரகையோடு ஒப்பிட்டுப் பேசுகின்றார்.

'மடிய வேண்டுமென்றால்—இந்த
மனமும் உறுதியில்லை!
மடிய ஆசையென்றால்—அந்த
மரணம் வருகுதில்லை!'

என்னும் கவிதை, ஓர் ஆழ்ந்த மறைபொருளை உள்ளடக்கியன்றோ ஒளிர்கின்றது!

அடுத்து, கவிதைப் பெண்ணினைக் காணும் கவிஞர் நோக்கே ஒரு தனி நோக்கு என்பது,

'பூவில் சிரித்திடுவாள்—அவள்
பூங்கொடி தன்னில் ஆடிடுவாள்
காவில் வீசும் காற்றினிலே—இன்பக்
கண்ணிகள் பாடி உலவிடுவாள்!'

என்று கூறி, அவளே,

**'கவிதை எனுமோர் பெண்தெய்வம்—அவள்**
**கவிஞர் பரவும் அருந்தெய்வம்!**
**புவியை இயக்கும் புகழ்த்தெய்வம்—அவள்**
**புலவர் தமக்குக் குலதெய்வம்!**

என்று குறிப்பிட்டு, அக்கவிதை எனும் பெண் தெய்வத்தினைக் கைகுவித்து வணங்குகிருர் கவிஞர்.

**'இதயக் கூண்டில் ஒரு பறவை'** என்ற பாட்டு நெஞ்சை உலுக்கி உருக்குகின்றது:

**'உள்ளச் சிறையில் ஒரு கன்னி—அவள்**
**ஊழிக் காலம் தவமிருந்தாள்**
**உள்ளச் சிறையில் ஒரு கன்னி!'**

என்று தொடங்கும கவிதை **'மனமென்னும் கன்னி'** உள்ளச் சிறையில் ஊழிக்காலம் நின்று தவம் செய்யும் நேர்த்தியைச் சித்திரிக்கின்றது!

**'அல்லும் பகலும் உனதெண்ணம்**
**அகிலம் அனைத்தும் உனதுருவம்;**
**சொல்லும் செயலும் உனையன்றிச்**
**சூழ்நிலை வேறெதும் கண்டறியேன்!'**

என்னும் கவிதையின் கருத்தாழம் வியப்பூட்டுவதாயுளது.

“மறுமலர்ச்சிச் சோலையில் பூத்த மனோரஞ்சிதம் இளவேனில்'' என்ற 'யோகி சுத்தானந்த பாரதியார்' பாராட்டும்; “எளிய சொற்களே உள்ளன; ஆனல் எத்தனையோ ஆற்றல் வாய்ந்தன,'' என்ற பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் பாராட்டும், “எல்லாமே பொதுவாக எளிய இனிய நடையில் ஒழுகும் இனிய பண்நலமும் உவகை வளர்க்கும் கவி வளமும் கொண்டமைந்துள்ளன'' என்ற 'நாவலர் டாக்டர் சோமசுந்தர பாரதியார்' பாராட்டும்''; “இந்தப் பாட்டுகள் கவிதையிலே ஒரு புதிய துறையை இயற்றுகின்றன'' என்ற 'புதுமைப்பித்தன்' பாராட்டும் உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

# 12. சந்தக் கவிமணி தமிழழகர்

"தமிழ், இலக்கியச் செல்வம் மிகுந்த மொழி. தமிழ் மக்கள் நெடுங்காலமாகவே கவிதைச் செல்வத்தை நுகர்ந்து மகிழ்ந்தவர்கள். இத்தகைய கலைச்செல்வத்தை இன்னும் கலைஞர் சிலர் தமிழர்க்குப் படைத்து அளித்த வண்ணம் உள்ளனர். அவர்களுள் 'திரு. தமிழழகன்' ஒருவர். திரு. தமிழழகருடைய கவிதைகள் பலராலும் பாராட்டப்பட்டவை. பல இதழ்கள் வாயிலாக இவருடைய கவிதைகள் கற்பவரின் உள்ளங்களோடு உறவு கொண்டுள்ளன" என்று கவிஞர் கவிதை குறித்து 'டாக்டர் மு. வ. அவர்கள்' தமிழழகன் கவிதைகள் என்னும் நூலிற்குத் தாம் வழங்கிய முன்னுரையில் எழுதியுள்ளார்கள்.

'கவிஞன்' என்ற கவிதையில்,

**'காலம் அனைத்தும் கடந்துவந்தேன்;—ஒரு**
**கானகப் புள்ளென ஓடிவந்தேன்!**
**கோலக் கவிதைகள் பாடவந்தேன்;—இன்பம்**
**கொப்பளிக் கும்நிலை சொல்லவந்தேன்!'**

என்று கூறும் கவிஞர்,

**'சந்தனத் தென்மலை**
**வந்தாடும் தென்றலில்**
**சந்தக் கவிதொடுப்போம்:—அதன்**
**சிந்துச் சுவைமடுப்போம்!'**

என்றபடி, சந்தமும் சந்தம் விரவிவரப் பாடல் புனைவதில் வல்லவராயுள்ளார் என்பது, இவர்தம் பாடல்கள் பலவற்றில் சந்த இன்பம் துலங்குவது கொண்டு அறியலாம்.

'கலைச்செல்வி' என்ற கவிதையில்,

**'செந்தீப் படலமாய் அந்திப் பொழுதுவான்?**
**சித்திரம் தீட்டும் புலத்தினிலே—வர்ண**
**விசித்திரம் கூட்டும் நிலத்தினிலே—பிறகு**
**வந்து முகக்கோலம் தந்து மறையும்**
**வளர்பிறைக் கோட்டுப் பிரபையிலே—அவள்**
**கலைபெறும் பாட்டுச் சுரபியடா'**

என்ற பகுதியில் ஓசை இன்பம் நயமாக உளது.

**'பொங்கு திரைக்கடல்**
**நுங்கு நுரைக்கழல்**
**பொன்கிண் கிணிபுலம்ப—பரி**
**சங்கின் மணி சிலம்ப,—பனிக்**
**கங்குல் திரைக்குள்**
**கதிர்முகம்காட்டி, விண்**
**காலைக்கூத் தாடினளே!—எழில்**
**வாலைக் கூத்தாடினளே'**

என்ற பாடலில், 'அன்னையின் கூத்து' அழகுறச் சித்திரிக்கப்பட்டுள்ளது;

''பிறை நிலா' எனும் கவிதை நல்ல அழகு விளக்கமாகும்.

**'அந்தி யெனும் மகள்**
**வந்திருள் ஏற்ற**
**அகல் விளக் காகும் நிலா!—வானப்**
**புகல் விளக்காகும் நிலா!**

என்றும்,

**'கங்குல் மலர்களோர்**
**நங்கை பறித்திடக்**
**கைவிரல் ஆகும் நிலா;—நளின**
**மெய்விரல் ஆகும் நிலா!'**

என்றும்,

வந்திடும் வாழ்விலும்
உயர்ந்திடச் சூழ்வதோ
நம்பிக்கை ஆகும்நிலா—ஈசன்
அன்புக்கை ஆகும்நிலா.

என்றும் கவிஞர் 'பிறைநிலா'வினை வருணிக்கும் திறம் நெஞ்சை அள்ளும் நீர்மையதாகும்.

'பட்டுமுல்லைக் காடிருந்தும்
பறிக்க ஆளில்லை—அதைப்
பறித்தெடுத்தும் பின்னலிலே
தொடுக்க ஆளில்லை!'

என்று தொடங்கும் 'நித்திலப் பூ' என்னும் கவிதை கற்பனை நயம் கனிந்து காணப்படுகின்றது.

சந்திரோதயத்தினை,

'பூம்பாளை சீவியபின்
பூச்சொரிய வைத்திருந்த
தாம்பாளச் சித்திரப்பொன்
தட்டேதான் விண்மதியோ!'

என்றும், மின்னலினை,

'ஏகப் பெருவெளியில்
ஏகாந்த வானரசி
மேகப் புழுக்கத்தால்
மெய்விசிறும் மின்விசிறி'

என்றும் கவிஞர் கற்பனைப் புரவியேறிக் கவிதை வெறி கொண்டு பாடியுள்ளார்.

"காலைக் கன்னி' என்னும் கவிதை உணர்ச்சியும், கற்பனையும் வளமுறக் கொண்டிருப்பதோடு, ஒலி வடிவத்துடனும் அமைந்துள்ளது என்பதனைப் பின்வரும் கவிதைப் பகுதி கொண்டு தெளியலாம்:

'கங்குல் இருளின்
கதவைத் திறந்தொரு

கன்னி யெழுந்தாச்சு!—காலைப்
பொன்னி வளர்ந்தாச்சு!'

காதற் கவிதையும் கவிஞர்க்குக் கை வந்தது என் பதனை 'என் காதல்' என்ற கவிதையில் காணலாம்.

ஒட்டும் இருநெஞ்சில்
ஊறிப் பிறக்கின்ற
மொட்டுச் சிறுபூவாய்
முளைப்பதே என்காதல்'

என்னும் கவிதையில் காதலின் இலக்கணத்தைக் கட்டுரைக்கின்ருர் கவிஞர்.

'ஆசைக்குத் தூதுபோம் பைங்கிளிநீ; அந்த
ஆசைவாய் விட்டுப்பே சாமொழிநீ;
ஓசை கிளம்பாமல் கூறுவன்; நாணமே,
ஓடிப்போ; காதலி வந்துவிட்டாள்!'

என்று, 'நாணத்தினை' நயம்படக் கிளத்துகின்ருர் கவிஞர்.

பெட்டிக்குள் சாரைப்பாம்பு சுருண்டு கிடப்பது போல் குழலைப் பின்னலிட்டும் பின் கொண்டையிட்டுக் கட்டிளங்கன்னி கவிஞர் முன் வந்து, பல பொற்கனவுகளைக் கிளறி விட்டுவிட்டாள்.

'கொண்டை முடிப்பிலோர் கொத்துமலர்—முகிற்
கூட்டத்தின் மத்தியில் வான்பிறைபோல்
கெண்டை விழியந்தப் பின்புறத்தைக்—காட்டிக்
கிளறிவிட் டாள்பல பொற்கனவை!'

'காற்றிலேறியவ் விண்ணையும் சாடுவோம் காதற பெண்கள் கடைக்கண் பணியிலே' என்ருர் பாரதியார். கவிஞர் தமிழழகரோவெனில், 'காதலின் புன்னகை ஒன்று போதும் வெற்றிகளைக் குவித்திட!' என்று வீரவுரை பகர்கின்ருர்:

எண்ணியும் ஆணை
இடுவதுண்டோ?—ஓர்கல்
இங்கிதப் புன்னகை
போதுமடி!
விண்ணையும் மண்ணையும்
வென்றுவந்தே—இங்குன்
வெற்றிக் கழல்களில்
வைப்போமடி!'

குழந்தை தரும் கொள்ளை இன்பத்தினைக் கவிஞர்

'எல்லை அறியாதே
எங்கோபோய்க் கொண்டிருக்கும்,
தொல்லைஇருள் வாழ்க்கையிலே
தோன்றுமொளி பூங்குழந்தை!'

என்று தொடங்கும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

கவிஞர் மாணவராய் இருந்த பொழுது பாடிப் பாவேந்தர் பாரதிதாசனார் அவர்கள் புதுவையிலிருந்து நடத்திய 'குயில்' என்னும் பத்திரிகையில் வெளி வந்த பாட்டு 'குழந்தை இன்பம்' என்பது.

'வாடுமுள்ளம் துள்ள—இன்ப
மழலை பேசும் சேயாம்!'

என்றும்,

'நம்மிடத்தே கொஞ்சி—இதழ்
நாள்மலர்போல் பூக்கும்'

என்றும்,

பேசிடாத பேச்சை—அது
பின்னிடாது பேசும்!'

என்றும் அச்சின்னஞ்சிறு பருவத்திலேயே கவிஞர் அற்புதமான கவிதையை ஆக்கியளித்துள்ளார். மேலும், கவிஞர் குழந்தையினை, 'கிழியின்றி வண்ண மின்றிக் கிளர்ந்த உயிரோவியம்' என்றும், 'மொழி

யின்றி எண்ணமின்றி முகிழ்த்த பெருங்காவியம்' என்றும், 'பண்ணின்றி லயமின்றிப் பாடிவரும் மெல்லிசை' என்றும், 'விண்ணின்றி வெளியின்றி விரியுமொளிப் பேரெழில்' என்றும், 'மழையின்றிநிலமின்றி மலர்ந்த வனப் பொன்மலர்' என்றும், 'இழையின்றிப் பாவின்றி இறைவன் நெய்த 'கலைத்துகில்' என்றும், 'கடலின்றிச் சிப்பியின்றிக் கண்டெடுத்த நித்திலம்' என்றும், 'படரின்றிக் கொம்பின்றிப் படர்ந்தோடும் மல்லிகை' என்றும், 'இடியின்றி முகிலின்றி இருள் கிழிக்கும் மின்கொடி' என்றும், 'தூசின்றி மணியின்றித் துலங்கு மணிப்புதையல்' என்றும், 'அச்சமின்றி வார்ப்பின்றி அமைந்த வண்ணப் பதுமை' என்றும் கவிதை புனைந்துள்ள அழகு, என்றும் நின்று வாழும் நேர்த்தியுடையதாகும். 'குழந்தை நலம்' எனும் இக்கவிதை, உலகின் மொழிகளிலெல்லாம் மொழி பெயர்க்கத்தக்க தகுதி சான்றதாகும்.

'பல்லக்கு' என்ற கவிதையின் பாட்டோட்டம், பண்புடன் பாராட்டிறகுரியது.

'வானமலர்க் காட்டிலே
வைர மலர்க் காட்டிலே
தோணு மின்னல் நெளிவுபோல்
துவண்டுவரும் பல்லக்கு!
பல்லக்கொரு பல்லக்கு;
பளிங்குவர்ணப் பல்லக்கு!
பல்லக்கம்மா பல்லக்கு!
பவனிவரும் பல்லக்கு!
செல்லப்பிள்ளை போலவே
செல்லுதுபார் பல்லக்கு!'

சிலேடைப் பாடல்கள் பாடுந்திறம் ஒரு சிலர்க்கே சிறக்க அமைவதாகும். 'காளமேகப் புலவர்' இத்

துறையில் தலைமை இடத்தினைப் பெறுகிறார். சிலே டைப் பாடல்கள் புனைவதென்பது ஓர் அரிய கலை. அக்கலையினை ஓரளவு கவிஞர் கையாண்டுள்ளார். எடுத்துக்காட்டிற்கு இரு பாடல்களைக் காண்போம்:

**'கருத்தை யறிவிக்கும்; காவியம் பூக்கும்**
**திருத்தலை யங்கம் திகழும்;—முறைத்தவர்தாம்**
**யாருமே தான்படிக்க லாகும். அதனாற்பெண்**
**ஓரவிழி பத்திரிகைக் கொப்பு!'**

இவ்வெண்பா பெண்ணின் விழிக்கும் பத்திரிகைக் கும் அமைந்த 'சிலேடை'யாகும். இது போன்று திரைப் படத்திற்கும் பாம்பிற்கும் அமைந்துள்ள சிலேடைப் பாடலைக் கீழே காணலாம்:

**'பெட்டிக்குள் ளேசுருளும்; பின்படமே தான்காட்டும்;**
**முட்டிக்கொண் டோடுவரே முன்பார்க்க;—கொட்டகையில்**
**ஆடும் இசையோடும்; ஆடும்போ தேநகரும்;**
**பாடும் திரைப்படந்தான் பாம்பு!'**

'புதிய கதிர்' என்ற பொங்கல் திருநாள் கவி யரங்கக் கவிதை, புதுமை நலம் பல பூத்துக் குலுங்கு வதாகும். காலை நேரத்தில் கீழைத்திசையில் கிளர்ந் தெழும் கதிரவனும் பேரொளிப்பிழம்பினை,

**'நீலக் கடலரங்கில், நெய்தல் மணலரங்கில்,**
**கோல முகிலரங்கில், கொட்டும் பனியரங்கில்,**
**தாழை மடலரங்கில், தாமரை நீரரங்கில்,**
**கீழைக் கரையரங்கில், கிள்ளைப்பூங் காவரங்கில்,**
**போர்த்த இருள்ஒழியப் பொன்னாய் ஒளிசொரிய**
**ஆர்த்துக் கடல்வானும் ஆர முழவடிக்கச்**
**சோலை யிளங்காற்றும் சோபனங்கள் தாம்படிக்கக்**
**காலை யெனும்பனியின் கண்ணாடி மாளிகையை**
**விட்டே எழுந்துவந்தான், விண்ணதிலே செங்கதிரோன்'**

என்று எழிலுற வருணித்துள்ளார் கவிஞர்.

விண்வெளியில் இருளை நீக்கி ஒளியைப் பாய்ச்சும் கதிர்க் கடவுள், மண் வெளியில் நென்மணிக் கதிர் களைக் குலுங்கச் செய்யும்.

**'விண்ணில் புதியகதிர் வீறுபெறும் போதெல்லாம்**
**மண்ணில் புதியகதிர் வன்பசியைப் போக்குதற்குத்**
**தானியமாய், நென்மணியாய்த் தாங்கிக் குலுங்கிவிடும்!'**

எனவே, இக்கதிர்க் கடவுளைப் போற்றுதல் செய்து பொன்னுன வாழ்விற் பொலிவோமாக!

**செம்மைப் பயிர்வளர்ப்பான்; சீருலகைக் காத்துப்பின்**
**நம்மை உயிர்வளர்ப்பான், நாடுதொறும், வீடுதொறும்**
**பூரணமாய்ப் புத்தம் புதியகலை யோங்கவைப்பான்!**
**காரணமாய்ப நிற்பான், கருதுகின்ற யாவினுக்கும்!**
**ஆரணமு மேஅவன் ஆதலினுல் போற்றிசெய்யும்!**
**பேருலகீர்! நாமுமவன் பேர்பாடி வாழ்த்திடுவோம்!'**

இவ்வாறு, உணர்ச்சியின் உந்தலாற் பாடும் கவி ஞரின் கவிதைகளில் கற்பனை வளமும், பாட்டின் உணர்ச்சிக்கு ஏற்ற ஓசை நயமும், இவற்றின் ஊடே சிறந்த கருத்துகளும் அமைந்து மிளிர்கின்றன. 'வாழையடி வாழை' என வளர்ந்து வரும் கவிஞர் திருக்கூட்டத்தில் ஒருவர் சந்தக் கவிமணி தமிழழகர்.